நாட்டுப்பாடல் வெளியீடு—1

# வீரபாண்டியக்

# கட்டபொம்மு கதைப் பாடல்

பதிப்பாசிரியர் :

நா. வானமாமலை, எம்.ஏ.,எல்.டி.



மதுரைப் பல்கலைக்கழகம்

மதுரை—2

முதல் பதிப்பு — அக்டோபர், 1971

நாட்டுப்பாடல் வெளியீடு—1

வீரபாண்டியக்
கட்டபொம்மு கதைப் பாடல்

விலை: ரூ. 4-00

அச்சிட்டோர் :
நியூ செஞ்சுரி பிரிண்டர்ஸ்
6/30, மவுண்ட்ரோடு, சென்னை-2.

# முன்னுரை

கட்டபொம்மன் கதை தற்போது பிரபலமாகியுள்ளது. கடந்த இருபது ஆண்டுகளாகக் கட்டபொம்மனது வாழ்க்கை வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு சரித்திர நூல்களும், நாடகங்களும், ஆராய்ச்சி நூல்களும் பல வெளிவந்திருக்கின்றன. அவனுக்கு நினைவுச் சின்னங்கள் நாடு முழுவதிலும் எழுப்பப் படுகின்றன. சிப்பாய்ப் புரட்சியின் நூற்றாண்டு விழாவின் போது காட்டுவதற்கென்று எடுக்கப்பட்ட வரலாற்றுப் படத்தில் கட்ட பொம்மன் வரலாறு சேர்க்கப்படாது விட்டதைக் குறித்துக் கண்டனம் எழுந்தது. பின்னர் அக்கதையும் சேர்த்துக் கொள்ளப் பட்டது. வெள்ளையர் ஆட்சி பரவத் தொடங்கிய காலத்தில் அதனை எதிர்த்த வீரர்களுள் கட்டபொம்மன் தலைசிறந்தவனாகக் கருதப்படுகிறான்.

கட்டபொம்மன் பேராசைக்காரனென்றும் கொள்ளைக்கார னென்றும் ஒருவர் வர்ணித்திருக்கிறார். அவருக்கும் ஆதாரங்களில் லாமல் போகவில்லை. பூலுத்தேவர்தான் வெள்ளையரை எதிர்த்த முதல் வீரரென்று நிலைநாட்ட அவர் முயன்றிருக்கிறார்.

இவ்வாறு கட்டபொம்மனை தேசபக்தனென்று புகழ்பவர் களுக்கும், கொள்ளைக்காரனென்று இகழ்பவர்களுக்கும் ஒரேவித மான மூல ஆதாரங்கள் இருக்கின்றன. இருவருக்கும் தங்கள் கூற்றுக்களை நிருபிப்பதற்கு கீழ்கண்ட நூல்களையே ஆதாரமாகக் கொள்கிறார்கள்.

ஆரம் எழுதிய "தட்சிண சரித்திரம்", கர்னல்வெல்ஷ் எழுதிய "ராணுவ நடவடிக்கைகளின் ஞாபகங்கள்" ஸ்டுவர்ட் எழுதிய "திருநெல்வேலி சரித்திரம்", நெல்ஸன் எழுதிய "மதுரை சரித் திரம்", "டெய்லரது கையெழுத்துப் பிரதிகள்", "திருநெல்வேலி கெஸட்டியர்", "மதுரை கெஸட்டியர்", பேட்டின் "திருநெல்வேலி சரித்திரம்" கிரான் எழுதிய "பாளையக்காரர் யுத்தங்கள்", கால்டுவெல் எழுதிய "திருநெல்வேலி சரித்திரம்" ஆகியவையே. ஆங்கிலேயர்கள் எழுதிய இந்த நூல்களையும், அவற்றை ஆதார மாகக் கொண்டு பிற்காலத்தில் எழுதப்பட்ட பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம், திருநெல்வேலி சீமை சரித்திரம் போன்ற நூல்களில்

காணப்படும் விவரங்களையே இரு சாராரும் அடிப்படையாகக் கொள்ளுகின்றனர். மேற் குறிப்பிட்ட ஆசிரியர்களில் வெல்ஷ், பாஞ்சாலங்குறிச்சிப் போரில் நேரடியான தொடர்புடையவர். கட்டபொம்மன் அவருடைய முக்கிய விரோதி. ஓய்வு பெற்று இந்தியாவை விட்டுச் சென்ற பிறகு அவர் தமது ஞாபகக் குறிப்புகளை எழுதினார்.

அவ்வாறு எழுதும்போது அவர் கட்டபொம்மனைப் பற்றி எத்தகைய கண்ணோட்டம் கொண்டிருப்பார் என்று நாம் ஊகிக்கலாம். அவரைப்போலவே அவர் காலத்திலிருந்த அதிகாரிகளும், கும்பினி மேலதிகாரிகளுக்கு எழுதி அனுப்பிய அறிக்கைகளும் கட்டபொம்மன்மீது பகைமை உணர்ச்சியோடு எழுதப்பட்டனவாகவே இருந்திருக்க முடியும். இவற்றை ஆதாரமாகக் கொண்டுதான் பேட் தயாரித்த கெஸட்டியர்களும், கால்டுவெல் எழுதிய திருநெல்வேலி சரித்திரமும், பேட் எழுதிய திருநெல்வேலி சரித்திரமும், நெல்ஸன் எழுதிய மதுரை சரித்திரமும் எழுதப்பட்டன. பிற்கால சரித்திர நூல்களும் வெள்ளைக்காரர்கள் மீது விசுவாசமுள்ளவர்களாலேயே எழுதப்பட்டன.

ஆகவே சரித்திர ஆதாரங்கள் என்று காட்டப்படும் விவரங்கள் எல்லாம், குறிப்பிட்ட சரித்திரக் கட்டத்தில் போராடிய இரு பகுதியினருள் ஒரு பகுதியினர் தங்கள் நடவடிக்கைகளை நியாயம் என்று நிலைநாட்டுவதற்காக சேகரித்து வைத்த சம்பவச் செய்திகளே ஆகும். போராடிய மற்றொரு பகுதியினர் இச்சம்பவங்களைப் பற்றி என்ன நினைத்தார்கள் என்பதைக் குறித்து அறிந்து கொள்ள எவ்வகைச் சான்றுகளும் விட்டுவைக்கப்படவில்லை. அவர்களுடைய ஞாபகத்தைப் பிற்காலத்தார் நினைவிலிருந்து அகற்றிவிடப் பாஞ்சாலங் கோட்டையை அழித்தது முதலே வெள்ளைக்கார அதிகாரிகள் நடவடிக்கை எடுத்தனர். கோட்டை பிடிபட்டதும் அதனை இடித்துத் தரைமட்டமாக்கி, உழுது இருந்த இடத்தின் மச்சம் கூடத் தெரியாமல் செய்துவிட்டனர்.

இக்காரியத்தை எட்டயபுரத்தாரைக் கொண்டே வெள்ளையர் நிறைவேற்றிக் கொண்டனர். கட்டபொம்மனது நெருங்கிய உறவினர் அனைவரையும் ஆளில்லாத தீவு ஒன்றுக்கு அனுப்பி வைத்தனர். பிற்காலச் சந்ததியார் கட்டபொம்மன் பரம்பரையினர் என்று யாரையும் அழைக்கக் கூடாது என்பது அவர்களுடைய எண்ணம். கட்டபொம்மனின் மனைவியார் சக்கம்மாள் கோசுகுண்டு என்ற ஊரில் நம்பிக்கைக்குப் பாத்திரமான உறவினர் ஒருவரிடம் ஒப்படைத்திருந்த தங்க நகைகளையும், வெள்ளிப் பாத்திரங்களையும், செப்புப் பட்டயங்களையும் மேஜர் பானர்

மென் கைப்பற்றி விலை உயர்ந்த பொருள்களை விற்றுவிட்டு, பத்திரங்களையும், பட்டயங்களையும் அழித்துவிட்டான். பாஞ் சாலங்குறிச்சிப் பாளையத்திற்குச் சொந்தமான தொண்ணூற்றுறு கிராமங்களையும், எட்டயபுரத்தாருக்கு கும்பினியார் உரிமையாக்கி விட்டார்கள். நிலங்களை சர்வே செய்து நிலப்படம் வரையும் பொழுது பாஞ்சாலங்குறிச்சி முழுவதும் 'பாழ் நிலம்' என்று காட்டப்பட்டது. இவ்வாறு பாஞ்சாலங்குறிச்சி வீரர்களுக்கு ஆதாரமான சரித்திரச் சான்றுகள் அனைத்தும், எதுவும் மிஞ்சாமல் அழிக்கப்பட்டன. ஆனால் இவ்வழிவுச் செயல்களினால்-கட்டபொம் மனின் நினைவை அகற்ற முடியவில்லை.

அதற்குக் காரணமென்ன? பாளையக்காரர்கள் அனைவரும் பணிந்த பின்பு வெள்ளையரை எதிர்த்துப் போராடி உயிர் நீத்த கட்டபொம்மனது தியாகம் மக்களிடையே எழுச்சியை உண்டாக் கியது. இவ்வெழுச்சி பரவி விடுதலைப்படை திரண்டது. இப் படை பாளையங்கோட்டையில் காவலிலிருந்த ஊமைத்துரையை விடுவித்தது. மறுபடியும் விடுதலைப்போர் தொடங்கியது. வெள்ளையரின் ஆயுதபலம் கோட்டையை அழித்தது. வீரர்கள் சிறைப்பட்டனர். ஊமைத்துரை தப்பிச் சென்று மருது சகோதரர் களோடு சேர்ந்து மறுபடியும் போராடினான். மீண்டும் வெள்ளையர் ஆயுத பலம் வெற்றி பெற்றது. ஊமைத்துரை தூக்கிலிடப்பட் டான். அவனது தியாகம் மக்களது நினைவில் நின்றது. சரித்திரச் சான்றுகளெல்லாம் அழிக்கப்பட்ட பின்னரும் கூட மக்கள் வாயை வெள்ளையரால் அடக்க முடியவில்லை. அவர்கள் வீரர்களது கதை களைச் சொன்னார்கள். இவ்வீர வரலாற்றைப் பாட்டாகப் பாடி னார்கள். இக்கதைகளும் பாடல்களும் தமிழகத்தின் தென்பகுதி முழுவதும் பரவின. வழிவழியாக வந்த இக்கதைகள் கூத்தாக நடிக்கப்பட்டன. கூத்துக்களை வெள்ளையர் ஆட்சி தடை செய்தது.

ஆனால் பாட்டும் கதையும் சாகவில்லை. இவ்வாறு மக்கள், வீரர்களின் நினைவைப் பாதுகாக்க எழுப்பிய நினைவுச் சின்னங்கள் நாடோடிப் பாடல்களே ஆகும். அவை சரித்திரச் சான்றுகள் என்று ஒப்புக் கொள்ளப்படாவிட்டாலும், இவ்வீரர்களைப் பற்றி மக்களுடைய நோக்கு என்ன என்று எடுத்துக்காட்டும் சாதனங் கள் இவை என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஒரே விதமான ஆதார நூல்களிலிருந்து ஒரேவிதமான நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு வெவ்வேறு விதமான முடிவுகளுக்குத் தற்கால சரித்திர ஆசிரியர்கள் எப்படி வரமுடியும்? அவரவர்கள் கருத்துகளுக்குத் தேவையான ஆதாரங்களை ஒரே

விதமான நிகழ்ச்சிகளிலிருந்து எப்படித் தரமுடியும்? சரித்திரச் சம்பவங்களை இவ்வாசிரியர்கள் காணும் முறையிலுள்ள வேறுபாடு தான் (difference in methodology) வெவ்வேறான முடிவுகளுக்குக் காரணம். உதாரணமாக ஒரு ஆசிரியர், "கட்டபொம்மன் தெலுங்கன், தெலுங்கர்கள் கோழைகள், சதிகாரர்கள்" என்று முடிவு செய்துகொண்டு கட்டபொம்மன் வரலாற்றிலுள்ள சம்பவங்களைக் காண்பாரானால் அவருக்கு அவருடைய முடிவை வலியுறுத்தும் சம்பவங்களே மனத்திற்படும். அவர் முடிவிற்கு விரோதமான சம்பவங்கள் மனதிற்படாது. இவ்வாறே கிருஷ்ண தேவராயர் தகப்பனைக் கொன்றவன் என்றும், நாகமநாயக்கர் ராஜத்துரோகி என்றும், ஆகையால் அவர்கள் பாஷையைப் பேசக் கூடிய கட்டபொம்மன் கருணையற்றவனாகவும், துரோகியாகவும் இருப்பான் என்ற முடிவுக்கு வந்து விடுவார். வெள்ளையர்கள் எழுதி வைத்த சான்றுகளைக் கொண்டு கட்டபொம்மன் கொள்ளைக்காரனென்ற முடிவுக்கும் வந்து விடுவார். இதற்கு எதிர் மாறாகக் கட்டபொம்மன் நிகரற்றவீரன், தேசபக்தன் என்று முடிவு செய்து கொண்டு சரித்திரச் சம்பவங்களை நோக்கினால் அவனுடைய குறைபாடுகள் எதுவுமே கண்ணுக்குத் தெரியாமல் போய்விடும். இவை தவிர சரித்திரத்தைக் காணும் முறையிலும் வேறுபாடுகள் இருக்கின்றன. சரித்திரம் வீரர்களால் ஆக்கப் படுகிறது என்று சிலர் கருதுகிறார்கள். அவர்கள் தங்கள் கற்பனையில் சரித்திர வீரர்களை சந்தர்ப்பத்துக்கும் சூழ்நிலைக்கும் அப்பாற் பட்டவர்களாக கருதுகிறார்கள். இருவருடைய கற்பனைகள் ஒன்று போலிரா. ஆகவே ஒருவர் யாரை வீரனாகக் கருதுகிறார்களோ அவனே மற்றவருக்குக் கோழையாகத் தோன்றலாம். ஆகவே இருவரும் தங்கள் தங்கள் வீரருக்காகக் கச்சை வரிந்து கட்டிக் கொண்டு சண்டை போடத் தொடங்குகின்றனர். சரித்திரத்தை இம்முறையிலெல்லாம் பார்ப்பது முழு உண்மையைக் காண்பதாகாது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு கோணத்தில் சரித்திர நிகழ்ச்சிகளைக் கண்டு தாங்கள் கண்டதே சரி என்று சாதிப்பது யானை பார்த்த குருடர் கதையாகவே இருக்கும்.

சரித்திரத்தையும், சரித்திர நிகழ்ச்சிகளையும், சரித்திர வீரர்களையும் சரியான முறையில் பார்ப்பதற்குச் சரித்திரக் கால கட்டத்தையும், அப்பொழுது இருந்த சமூக அமைப்பையும் அச் சமூகத்திலுள்ள பல்வேறு வர்க்கங்களின் தொடர்புகளையும் நாம் அறிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் எந்த மனிதனும் ஒரு காலக் கட்டத்தில் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் வாழ்கிறான். அவன் ஏதாவதொரு வர்க்கத்தைச் சேர்ந்தவனாகத்தான் இருக்கிறான். அந்த வர்க்கத்தின் உணர்ச்சிகளோடு அவன் வேறு

வர்க்கங்களோடு தொடர்பு கொள்கிறான். இந்தத் தொடர்பு அவனுடைய வர்க்க நலன்களை அடிப்படையாகக் கொண்டிருக்கும். இத்தொடர்புகளனைத்தும், அவன் குறிப்பிட்ட சரித்திரக் கட்டத்தில் பொருளுற்பத்தி முறையில் இவ்வர்க்கங்கள் கொண்டுள்ள பங்கைப் பொறுத்திருக்கும். ஒரே பொருளாதார நலன்களைக் கொண்டவர்க்கங்கள் வெவ்வேறு முறையில் தங்களுடைய வர்க்க நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளுதலும் உண்டு இவ்வாறு சரித்திரத்தைக் காண்பது சரித்திர இயல், பொருள்முதல்வாதம் என்று சொல்லப்படுகிறது.

இம்முறையில் கட்டபொம்மனது வரலாற்றுப் பாத்திரத்தை மதிப்பிட முயன்றால் அவனைப்பற்றிப் பூரணமான ஒரு சித்திரத்தை நாம் பெற முடியும்.

கட்டபொம்மன் காலத்தில் நாயக்கர் ஆட்சி முடிந்து விட்டது. அவர்கள் காலத்தில் வரி வசூலுக்காகவும், யுத்தங்களை நடத்துவதற்காகவும் ஏற்படுத்தப்பட்ட, பாளையப்பட்டுகள் யாருடைய மேலாதிக்கத்தின் கீழும் இல்லாத நிலை ஏற்பட்டது. இச்சமயம் தடி எடுத்தோன் தண்டல்காரன் என்று ஆயிற்று. வலிமைமிக்க ராமநாதபுரம், சிவகங்கை, எட்டையபுரம், சிவகிரி போன்ற பாளையப்பட்டுகள் முடிந்த அளவுக்கு நிலப்பரப்பைப் பெருக்கிக் கொண்டன. இப்போட்டியின் காரணமாகப் பூசல்கள் மிகுந்தன. நாயக்கர் ஆட்சிக்குப் பின் ஆற்காட்டு நவாபின் ஆட்சி ஏற்பட்டிருந்தபோதிலும் அது இங்கு பெயரளவிற்கே தென்பாண்டி நாட்டில் நிலை கொண்டிருந்தது. நவாபின் உறவினர்களிடையே பதவிப்போட்டி உண்டாயிற்று. பாளையக்காரர்களுக்குள்ளும் பதவிப் போட்டிகள் நிகழ்ந்தன.

இச்சமயத்தில்தான் தூத்துக்குடியில் டச்சுக்காரரும், பாண்டிச்சேரியில் பிரெஞ்சுக்காரரும், சென்னையிலும், திருச்சியிலும் ஆங்கிலேயரும் உள்நாட்டுப் பூசல்களில் ஈடுபடத் துவங்கினர். அவர்கள் தங்கள் நாட்டில் உற்பத்தியான உபரிப்பொருள்களை இங்கே விற்கவும், இங்கிருந்து பருத்தி முதலிய பொருள்களை மலிவாகத் தங்கள் நாட்டுக்கு வாங்கிச் செல்லவும் வந்தவர்கள். அவர்களுக்குள் வியாபாரப் போட்டி ஏற்பட்டது. நாட்டில் மத்திய அரசியல் ஆதிக்கம் இல்லை. தென்பாண்டி நாட்டில் பதினெட்டுப் பாளையக்காரர்கள் அவரவர்கள் பாளைப்பட்டுகளில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். அவர்கள் அடிக்கடி நிலத்தைப் பிடிப்பதற்காகப் பக்கத்துப் பாளையக்காரர்களோடு சண்டையிட்டுக் கொண்டனர். சில இடங்களில் நாலைந்து பாளையக்காரர்கள் தங்களுக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டு பிற பாளையங்கள் மீது படையெடுத்

தார்கள். இப்படையெடுப்பில் டச்சுக்காரர்களும், ஆங்கிலேயர் களும் ஏதாவது ஒரு கட்சியில் சேர்ந்து கொண்டார்கள். பாளையங் களில் வாழ்ந்த மக்களும் போர்களால் அவதியுற்றனர். போருக்கு வேண்டிய உணவுப் பொருட்களைப் பாளையக்காரர்கள் மக்களிடம் பறித்துச் சென்றனர். விளைந்திருக்கும் பயிர்கள் அறுவடையாகு முன் அவற்றைப் பாளையக்காரர்கள் தாங்களே அறுவடை செய்து கொண்டு சென்றனர். தங்கள் பாளைய எல்லைக்குள் மட்டுமில்லா மல் வெளியிலும் பாளையப்பட்டார் இவ்வாறு கொள்ளையடிப்பது சகஜம்.

இக்குழப்பமான நிலையில்தான் ஆங்கிலேயர்கள் ஆற்காட்டு நவாபிடமிருந்து வரிவசூல் குத்தகை உரிமையைப் பெற்றனர். நாயக்கர் காலத்தில் நிலவரி வசூலிக்கும் உரிமையைப் பெற்றிருந்த பாளையக்காரர்கள் தங்கள் நலன் பாதிக்கப்பட்டதை எண்ணி இம் முறையை எதிர்த்தனர். தென்மண்டலத்தில் பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியில் பெரும்பாலான பாளையப்பட்டுகள் ஆங்கிலேயர்களை எதிர்த்தன. நெல்லை ஜில்லாவில் கீழ்பகுதியில் எட்டையபுரத்தாரும், பாஞ்சாலங்குறிச்சியாரும், ஆங்கிலேயர்களை எதிர்த்த பாளையப்பட்டாருக்குத் தலைமை தாங்கினர். மேல்பகுதி யில் நெல்காட்டான் செவல் பூலுத்தேவர் மேற்பகுதிப் பாளையப் பட்டாருக்குத் தலைமை தாங்கினார். ஆனால் இவர்கள் தங்களுக் குள் இருந்த போட்டி காரணமாக ஆங்கிலேயர்களை ஒன்றுசேர்ந்து எதிர்ப்பதில்லை. ஒவ்வொரு பாளையக்காரரும், தம்முடைய பாளையத்தை வலுவாக்குவதையே நோக்கமாகக் கொண்டிருந்தார். ஒருவரையொருவர் நம்பாமல் ஒற்றுமை குறைந்தது. இதைப் பயன்படுத்திக் கொண்ட ஆங்கிலேயர்கள் தங்களுடைய சிறந்த ஆயுத வலிமை காரணமாகப் பல பாளையப்பட்டார்களைத் தோற்கடித்து விட்டனர். பாளையக்காரர்களுடைய நோக்கம் தங்கள் பதவிகளைப் பாதுகாத்துக் கொள்ளுவதுதான். ஆகையால் பதவி நிலைத்தால் வெள்ளையரோடு சமாதானம் செய்து கொள்ளு வதற்குத் தயாராக இருந்தனர்.

இவ்வாறு இராமநாதபுரம், எட்டையபுரம் முதலிய பாளைப் பட்டுகள் வெள்ளையரோடு சமாதானம் செய்துகொண்டன. இதற்கு முக்கிய காரணம் மக்கள் இப்போராட்டங்களில் எவ்விதப் பங்கும் கொள்ளாமல் இருந்ததுதான். பாளையப்பட்டாராலும், தங்கள் மக்களைத் தங்களுக்கு ஆதரவாகத் திரட்டிக்கொள்ள முடியவில்லை.

கட்டபொம்மு தனது போராட்டத்தில் சிறிதளவு மக்களைத் திரட்டிக்கொண்டான். ஆனால் அவன் முன்னோர்களும் அவனும்

சில பகுதி மக்களைத் துன்பத்துக்குள்ளாக்கிய காரணத்தால் அவர்களை அவன் காலத்தில் திரட்டமுடியாமல் போயிற்று. இன்னும் சில பகுதிகளில் அவன் கொடுமையைப்பற்றிய நாடோடிக் கதைகள் வழங்கி வருகின்றன. அவற்றையும் ஊமைத்துரையைப் பற்றி வழங்கும் கதைகளையும் ஒப்பிட்டு நோக்குவது அவசியமாகும்.

கட்டபொம்மன் திருச்செந்தூரில் தீபாராதனை மணி அடிப் பதைப் பாஞ்சாலங் குறிச்சியில் கேட்பதற்காக, அங்கிருந்து, பாஞ்சாலங்குறிச்சி வரை மணி மண்டபங்கள் கட்டிவைத்தான். அவையாவும் ஓலைக் குடிசைகளே; அவைகளுக்கு வேண்டிய ஓலையையும் பனைமரவிட்டங்களையும் யாரையும் கேட்காமல் வெட்டிக்கொண்டு வந்துவிடுவார்களாம். இதனால் பனையேறும் தொழிலுடைய நாடர் ஜாதியினர் மிகவும் வெறுப்புக்கொண்டார் கள். இவ்வாறு வெட்டும்போது ஒருமுறை கட்டபொம்மனது வீரர்களுக்கும் குறும்பூர் நாடார்களுக்கும் பெரும் போர் ஏற்பட்ட தென்று கதை கூறுகின்றது. நாடார் ஜனங்கள் கட்டபொம்மன் பக்கம் என்றுமே சேர்ந்ததில்லை.

இதுபோலவே கோட்டையைக் கட்டும்போது பள்ளர் ஜாதியைச் சேர்ந்த பெண்களைக் கட்டாயப்படுத்தி வேலை வாங்கினா னென்றும் அவர்கள் கரண்டைக் காலில் அடித்தார்களென்றும் அவர்கள் மனம் வருந்தி, "அளகுபோல் முதுகிருக்கக் கரண்டைக் காலில் அடித்தானே பாவி" என்று பாடியதாக நாட்டுப் பாடல்கள் இருக்கின்றன.

செட்டியார் திருப்பணிப்பத்து என்ற ஊரில் ஒரு செட்டியார் இருந்ததாகவும், அவரிடத்தில் வரிப்பாக்கியைக் கேட்ட கட்ட பொம்மன், கொடுக்கமுடியாததால் அவர் முதுகில் கல் ஏற்றி கேவலப்படுத்தியதாகவும், செட்டியார் கட்டபொம்மன் போன பின்பு, தன் சொத்து முழுவதையும் எழுதிவைத்துவிட்டதாகவும் ஒரு கதை வழங்குகின்றது. இக்கதைகள் கட்டபொம்மன் போன்ற பாளையக்காரர்கள் மக்களை நடத்திய விதத்தையும், மக்கள் அவர்களோடு கொண்டிருந்த உறவையும் காட்டப் போது மானவை. ஆகவேதான் கட்டபொம்மன் வெள்ளையரை எதிர்த்தது மக்கள்நலன்களுக்கு உகந்ததாயினும் அவர்கள் தங்களைக் கொடு மையாக நடத்திய கட்டபொம்மனது போராட்டத்தைத் தங்களது போராட்டம் என்று நினைக்கவில்லை. போராட்ட அணியில் சேரவும் இல்லை.

ஆனால் கட்டபொம்மனது வீரப்போராட்டம் முடிவுற்று, அவன் தூக்கிலிடப்பட்ட நிகழ்ச்சி மக்களிடையே ஒரு மாறுதலை

ஏற்படுத்திற்று. அவர்கள் சிறிதளவு அவனது கொடுமைகளை மறந்தார்கள். ஊமைத்துரை சிறையிலிருந்து வெளியேறியதும் அவன் வெள்ளையரை எதிர்த்து முடிசூடிக்கொண்டதும் மக்களால் வரவேற்கப்பட்டது. இவ்விடைக்காலத்தில் வெள்ளைக்காரர் ஆட்சியின் சுரண்டலை அவர்கள் அனுபவித்துவிட்டார்கள். கோவில்பட்டிப் பகுதியில் வரி உயர்ந்தது. அங்கு முக்கிய விளைபொருளான பருத்தி விலையைக் குறைத்துக் கட்டாயப்படுத்தி வெள்ளையர்கள் வாங்கிச் சென்றார்கள். கைத்தறி நெசவாளர்களின் தறிகள் பறிமுதல் செய்யப்பட்டன. வெள்ளையர்கள் தங்களது துணிகளுக்கு நல்ல விலை கிடைக்கவே இவ்வாறு செய்தார்கள். வெள்ளையர்மீது வெறுப்பு ஏற்பட்டது. இதற்கிடையில் ஊமைத்துரை வெளிவந்து கோட்டையைப் புதுப்பித்தான். அவன் சிறையிலிருந்து தப்பி வந்ததிலிருந்து மறுபடியும் கோட்டை வெள்ளையர்களால் பிடிக்கப்பட்டு அழிக்கப்படுவதற்குள்ளாக அவன் தனது பாளையத்துக்குள்ளும் வெளியேயும் மக்களை வெள்ளையருக்கெதிராகத் திரட்டினான்.

இவர்களிருவரும் வெள்ளையர் ஆதிக்கம் பெறுவதைத் தடுக்க எடுத்துக்கொண்ட முயற்சிகள் வெவ்வேறு தன்மை வாய்ந்தவை. முதன் முதலில் 1793-ல் செட்டில்மெண்டு நடந்தது. தங்களுக்கு விரோதமான பாளையப்பட்டுகளின் சக்தியைக் குறைப்பதற்காக வெள்ளையர் அவர்களது பாளையங்களிலுள்ள கிராமங்கள் சிலவற்றைப் பிடுங்கி தங்களுக்குச் சாதகமான பாளையக்காரர் களுக்குக் கொடுத்துவிட்டனர். இவ்வாறுதான் பாஞ்சாலங் குறிச்சியாருக்குச் சொந்தமான இரு கிராமங்கள் எட்டைய புரத்தோடு சேர்க்கப்பட்டன. இதனைக் கட்டபொம்மன் ஒத்துக் கொள்ளவில்லை. இதைத் தொடர்ந்து வரி பாக்கிகளைக் கும்பினியார் கேட்டனர். தான் தனித்திருப்பதை உணர்ந்து கட்டபொம்மன் நாள் கடத்தினான். இடைக்காலத்தில் வெள்ளையரை எதிர்க்க பாளையக்காரரைத் திரட்ட முயன்றான். நாகலாதபுரம், கொல்வார்பட்டி, ஏழாயிரம் பண்ணை, காடல்குடி, குளத்தூர், ஆவுடையாபுரம் முதலிய பாளையக்காரர்கள் முதலில் கட்டபொம்மனுக்குத்துணை நின்றனர். வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்த்தனர். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. அவை சிறிய பாளையங்கள்; ஆத லால் எட்டையபுரம் போன்ற பாளையங்கள் தங்களை விழுங்கி விடும் என்று பயந்தனர். இரண்டாவது எட்டையபுரத்தார் வெள்ளையரோடு சேர்ந்து கொண்டதால் தாங்கள் வெள்ளையரை எதிர்க்கும் பாஞ்சாலங்குறிச்சியோடு சேர்ந்து கொள்வதே தங்கள் நலன்களைப் பாதுகாக்கும் வழியெனக் கண்டனர். இவர்கள் யாவரும் கடைசிவரை கட்டபொம்மனோடு சேர்ந்து நின்று

போராடினர். குளத்தூர் பாளையக்காரரும், கோல்வார்பட்டி பிரதானி சுந்தரலிங்க நாயக்கரும் தூக்கிலிடப்பட்டார்கள். பிறர் நாடு கடத்தப்பட்டனர். இச் செய்தி சில பாளையக்காரர்கள் கடைசிவரை வெள்ளையரை எதிர்த்தனர் என்பதைக் காட்டும்.

இவர்கள் யாவரும் 'நாயக்கர்கள்' "நாயக்கர் ஆதிக்கத்தை நிறுவ கட்டபொம்மன் முயன்றான்; தமிழ் நாட்டை அடிமைப் படுத்த முயன்றான்" என்று ஒருவர் எழுதுகிறார். அது உண்மை யல்ல. வெள்ளையரை எதிர்ப்பவரை அவர் எந்த சாதியினராயினும் தமக்கு ஆதரவாக்கிக் கொள்ள முயன்றிருக்கிறான். உதாரணமாக சிவகாசிப் பாளையப்பட்டோடு அவன் உறவு ஏற்படுத்திக்கொள்ளச் செய்த முயற்சிகளைக் குறிப்பிடலாம். சிவகிரி பாளையக்காரர் வெள்ளையரோடு சமாதானமாகப் போய்விட்டார். அவருடைய குமாரன் மாப்பிள்ளை வன்னியனும், பிரதானி சங்கரலிங்கம் பிள்ளையும் அவரை விலக்கி விட்டு வெள்ளையரை எதிர்க்க முயன் றனர். தகப்பனார் வெள்ளையர் உதவி கேட்டார். மகன் பாஞ்சாலங் குறிச்சியின் உதவியை நாடினார். கட்டபொம்மன் படையோடு சென்றான். இது ஒரு குற்றமாகக் கட்ட பொம்மன் விசாரணையின் போது காட்டப்படுகிறது, மாப்பிள்ளை வன்னியரும், சங்கரலிங்கம் பிள்ளையும் தப்பி ஓடி விட்டனர். கடைசியில் வெள்ளையரால் பிடிக்கப்பட்டு 'பென்கூலன்' தீவுக்கு அனுப்பப்பட்டனர். வெள்ளை யரை எதிர்ப்பவர்களைத் தன்னோடு சேர்த்துக் கொள்ள வேண்டும், வெள்ளையர் எதிர்ப்பு அணியைப் பலப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் கட்டபொம்மனுக்கு இருந்திருக்கிறது என்பதை இச் சம்பவம் நிரூபிக்கிறது.

ஊமைத்துரை விடுதலையான பிறகு நடத்திய போராட்டத் தில், கட்டபொம்மனின் போராட்டத்தில் காணப்பட்ட சில குறைபாடுகளைப் போக்கிக் கொண்டான். அவன் மக்களோடு உறவு கொண்டு அவர்களை வெள்ளையர்களை எதிர்க்கத் திரட்டி னான். 'கோட்டை ஆறு நாட்களில் கட்டி முடிந்தது' என்று வெள்ளை அதிகாரிகள் எழுதி வைத்திருக்கிறார்கள். பாளையங் கோட்டையில் சிறையிருந்த 16 பாளையக்காரர்களும், அவர்கள் உறவினர்களும், அல்லது அவர்களை விடுதலை செய்த சிறு படை யினரும் இக்காரியத்தைச் சாதித்திருக்க முடியாது. விடுதலை யடையுமுன்னரே மக்கள் இப்பணிக்காகத் திரட்டப்பட்டிருக்க வேண்டும். கோட்டைக்கு வெளியில் பலவிடங்களில் மக்கள் ஆதரவு இருந்திருக்க வேண்டும். கோட்டை எழுந்ததும் பல பகுதி மக்கள் ஊமைத்துரையை "ஜகவீர கட்டபொம்மு" என ஏற்றுக் கொண்டனர். இல்லாவிட்டால், பழைய பாளையப்பட்டு எல்லைக் குள் மட்டுமின்றி வெளியிலும் மக்கள் போரணியில் திரண்டிருக்க

மாட்டார்கள். தீவர்த்தி வெளிச்சத்தில் இரவோடு இரவாகக் கூட்டங்கள் நடத்தி மக்கள் படையில் சேர்க்கப்பட்டனர். அவர்கள் வீர உணர்வோடு சம்பளம் இன்றியே போர் புரிய முன் வந்தனர். கோட்டையைச் சுற்றியுள்ள இடங்களை வெள்ளையர் ஆட்சியிலிருந்து இவ்வீரர்கள் விடுவித்தனர். அதுமட்டுமல்ல, மக்கள் ஆதரவிருந்ததால் பெரும்படை திரட்டி தூத்துக்குடியையும் ஊமைத்துரை கைப்பற்றினான். ஊமைத்துரை, துறைமுகத்தின் முக்கியத்துவத்தை அறிந்திருக்கிறான். தூத்துக்குடி துறைமுகத்தின் வழியாகத் தான் சூரத்திலிருந்தும், சென்னையிலிருந்தும், வரும் வியாபாரப் பண்டங்கள் தென் பகுதிக்கு இறக்குமதி செய்யப் பட்டன. முக்கியமானவை துணி, கண்ணாடி, இன்னும் சில அன்றாடத் தேவைப் பொருள்கள். கோவில்பட்டி, இராமநாதபுரம் பகுதிகளில் விளையும், பஞ்சு இங்கிருந்துதான் ஏற்றுமதி செய்யப் படுகின்றது. தூத்துக்குடி கடற்கரையில் காய்ச்சிய உப்பும், கடலிலெடுக்கும் முத்தும், இத்துறைமுகத்திலிருந்து சென்னைக்குக் கொண்டு செல்லப்பட்டது.

வரி வசூலில் கிடைத்த வருமானத்தைப் போலவே வியாபாரத்திலிருந்தும் பெரும் லாபம் கிடைத்திருக்க வேண்டும். தூத்துக்குடியில் மிகப் பெரிய பண்டச் சேமிப்புச் சாலையொன்றை ஆங்கிலேயர்கள் அமைத்திருந்தார்கள். அதற்கு காவல்படை ஒன்று இருந்தது. காவல் படையைத் தோற்கடித்து பண்டச் சேமிப்புச் சாலையையும், ஊமைத்துரை கைப்பற்றினான். வெள்ளையர் திகிலடைந்து சில நாட்களுக்கு கப்பல்களில் கடலுக்குள் சிறிது தூரம் செலுத்தி நங்கூரம் பாய்ச்சித் தங்கியிருந்தனர். அவர்களுடைய படைகளை அழித்தால் மட்டும் போதாது. வியாபாரத்திற்கும், முடிவு உண்டாக்க வேண்டும் என்பது ஊமைத்துரையின் எண்ணம்.

இவ்வாறு கட்டபொம்மன் போராட்ட காலத்தில் இருந்ததை விட அதிகமான மக்கள் ஆதரவுடன் ஊமைத்துரை புதிய முறையில் போராடினான். போராட்டத்தைக் கோட்டைக்கு வெளியில் பரவச்செய்தான். 1801-ஆம் ஆண்டு மே மாதத்திற்குள்ளாக மற்ற பாளையக்காரர்கள் அடங்கி விட்டதற்குப் பின்னும் அவன் மட்டும் வெள்ளையர்களோடு போரிட்டான். அவனைத் தவிர அப்பொழுது வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்த்தவர்கள் மருது சகோதரர்கள் மட்டுமே. ஊமைத்துரை பாஞ்சாலங்குறிச்சி பிடிபட்டதும் சிறிதுநாள் தலைமறைவாக இருந்துவிட்டுச் சிவகங்கைக்குச் சென்றான்.

சில மாதங்களில் வெள்ளையர் படை சிவகங்கைக்குள் புகுந்தது' பல போர்களுக்குப் பின்னால் மருது சகோதரர்களும் ஊமைத்

துரையும் சிறைப்பட்டனர். அவனோடு அவனுடைய சகோதரன் சிவத்தையாவும் நண்பர்கள் தளவாய்ப்பிள்ளையும், குலசேகர பட்டணம் மூப்பனும் சிறைப்பட்டனர். மருது சகோதரர்கள் திருப்பத்தூரில் தூக்கிலிடப்பட்டார்கள். தளவாய்பிள்ளையும் மூப்பனும் அவர்களோடு சேர்ந்த எழுபது பேர்களும் பிரின்ஸ் ஆப் வேல்ஸ் தீவுக்கு நாடு கடத்தப்பட்டார்கள்.

மிகக் குறைந்த காலத்தில்-அதாவது-சுமார் ஒரு வருஷத்திற்குள்ளாக மக்கள் மனத்தைக் கவர்ந்து வெள்ளையர் எதிர்ப்பணியில் சேர்ந்து அவர்களுடைய ஆதிக்கத்துக்குக் கடைசி முறையாக சவால் விட்டவன் ஊமைத்துரை. கோட்டை பிடிபட்ட பின்பும் பாஞ்சாலங்குறிச்சியி லிருந்து- சிவகங்கைக்குத் தலைமறைவாகச் செல்வது அக்காலத்தில் எளிதல்ல. ஏனெனில் சுற்றிலும் கும்பினிக்கு அடிமைகளான பாளையக்காரர்கள் இருந்தார்கள். ஊமைத்துரை தப்பி ஓடியதும் அவனைப் பிடித்துக் கொடுக்க வேண்டுமென்று இவர்களுக்கெல்லாம் கட்டளை அனுப்பப்பட்டிருந்தது. கட்டபொம்மனைப் பிடித்துக் கொடுத்த எட்டையபுரம் பாளையக்காரர்களும், புதுக்கோட்டைத் தொண்டைமானும் கும்பினியாரிடம் பெற்ற வெகுமதிகளைப் பாளையக்காரர்கள் அறிந்திருந்தார்கள். ஊமைத்துரையைப் பிடித்து கொடுக்கப் பல பாளையக்காரர்கள் தேடிக் கொண்டிருந்தனர். ஆனல் அவர்களிடம் பிடிபடாமல் ஊமைத்துரை சிவகெங்கை போய்ச் சேர்ந்தான். அதற்குக் காரணம் பாளையக்காரர்கள் தங்கள் சுய நலத்துடன் ஊமைத்துரையைப் பிடிக்கத் தருணம் பார்த்திருந்தார்கள். அவனுடைய வீரத்தையும் வெள்ளையர் எதிர்ப்பு உணர்ச்சியையும் போற்றிய மக்கள் அவனைப் பாதுகாக்கத் தயங்கவில்லை.

மக்களுக்கும், அவனுக்குமிருந்த தொடர்பையும், மக்கள் அவனிடம் காட்டிய பரிவையும் பற்றிப் பல நாடோடிக் கதைகள் வழங்குகின்றன. கோட்டை பிடிபடுமுன் மக்களைத் திரட்டுவதற்காக புரட்சித் தலைவர்கள் கிராமங்களுக்குச் சென்று வெள்ளையர் எதிர்ப்புப் போரில் சேருமாறு மக்களை அறைகூவ இரவில் கூட்டங்கள் நடத்துவார்கள். அக்கூட்டங்களுக்கு ஊமைத் துரையும் செல்வதுண்டு. பலர் பேசுவார்கள். ஆனல் ஊமைத்துரை வெள்ளைக்காரர் என்பதற்கடையாளமாக அவர்களணியும் தொப்பியைக் காட்டித் தலையைத் தொட்டுக் கையால் சைகை செய்து வாயால் ஊதிக் காட்டுவான். இதுதான் வாய் பேச முடியாத ஊமைத்துரை மக்களுக்கு விடுக்கும் அறைகூவல். பேச்சுக்களைவிட அவன் முகத்தில் காணப்பட்ட உறுதியும் மக்கள் மீது கொண்ட அன்பும் அவன் கைச்செய்கைகளுக்கு வலிமை

கொடுத்தன. மக்கள் படையும் திரண்டது என்று ஒரு கதை வழங்குகிறது.

மற்ருெரு கதை அவனைப் பாதுகாத்த ஒரு ஏழைக் கிழவியின் மனத்துணிச்சலையும், வெள்ளையர் எதிர்ப்பு உணர்ச்சியையும், அவள் ஊமைத்துரை மீது கொண்டிருந்த அளவற்ற அன்பையும் இக்கதை காட்டுகிறது திருநெல்வேலிச் சீமை சரித்திரத்தில் காணப்படும் இக்கதை இன்றும் கோவில்பட்டி வட்டாரத்தில் வழங்கப்படுகிறது.

மேற்கூறியவைகளிலிருந்து பாஞ்சாலங் குறிச்சியில் நடந்த முதல் போராட்டத்திற்கும், இரண்டாவது போராட்டத்திற்கும் அடிப்படையில் சில வேறுபாடுகள் இருந்ததை அறியலாம். முதல் போராட்டத்தில் கட்டபொம்மன் தனக்குத் துணையாகத் தனது வர்க்கத்தாரான பாளையக்காரர்களையே நம்பியிருந்தான். மக்களைப்பற்றிக் கவலை கொள்ளவுமில்லை அவர்களை அப்போராட்டத்தில் இணைத்துக் கொள்ள முயற்சி செய்யவுமில்லை. அவனது வர்க்கத்தன்மை காரணமாக வரிவசூல் செய்யும் பொழுதும், ஏழை எளியவர்களிடம் வேலை வாங்கும் பொழுதும், அவன் அவர்களிடம் நடந்துகொண்ட முறையிலிருந்தும் மக்கள் எதிர்ப்பை அவன் சம்பாதித்துக் கொண்டான். வீரமாக அவன் போராடிய கடைசிக் கட்டத்திலும்கூட அவனுல் மக்கள் ஆதரவைத் திரட்ட முடிய வில்லை.

இரண்டாவதாக, அவனது போராட்டம் ஒருமுனைப் போராட்டமாகவே இருந்தது. ஆயுத பலத்தால் அவன் தன்னைவிட ஆயுத பலம் மிகுந்த வெள்ளையரை எதிர்த்துப் போராடினுன். வெள்ளையரோடு உறவு கொண்ட மற்றப் பாளையக் காரர்களைத் தனது விரோதிகளாகக் கருதி அவர்களைத் தன்னேடு சேர்த்துக் கொள்ள எவ்வித முயற்சியும் செய்யாமலே இருந்து விட்டான். ஆயுத பலத்தையும் மண் கோட்டையும் நம்பி அவன் பிடிவாதமாகப் போராடினுன்.

மூன்ருவதாக, வெள்ளையர் நம் நாட்டிற்குள் நுழைந்த அடிப் படைக் காரணத்தை அவன் புரிந்து கொள்ளவில்லை. அவர்கள் தங்கள் லாபத்தை பெருக்கிக் கொள்ள வியாபார சுரண்டலை நோக்கமாகக் கொண்டு வந்தார்களென்பதையும் அதை நிறை வேற்றிக் கொள்ளவே அரசியல் ஆதிக்கத்தை நாடினுர்கள் என்ப தையும் அவன் உணரவில்லை. "இங்கு வந்திருக்கும் ஜான்ஸன் மோசமானவன் சென்னைத் துரைமார்கள் நல்லவர்கள். அவர்க

ளிடம் நியாயம் கிடைக்கும்,'' என்று அவன் 1798-ம் ஆண்டு வரை எண்ணியிருந்தான். அதனால்தான் அவனிடம் வெள்ளையரை எதிர்ப்பதில் சமரசப் போக்குகள் காணப்பட்டன. ஆனால் இரண்டாவது பாஞ்சாலங் குறிச்சிப்போர் நடந்தபொழுது மேற் குறித்த நிலைமைகளில் சிறு மாறுதல்கள் ஏற்பட்டன. முதல் போரில் கோட்டை அழிந்த பிறகு புரட்சித் தலைவர்கள் தங்கள் தோல்வியின் காரணங்களைப்பற்றிச் சிந்தித்தார்கள். மக்கள் ஆதரவு பலமாக இல்லாமல் வெள்ளையரை எதிர்த்துப் போராடுதல் கடினம் என்பதை உணர்ந்தார்கள். கட்டபொம்மன் தூக்கு மரத்தில் உயிர் நீத்த நிகழ்ச்சி அவ்வட்டாரத்தில் மக்களது அசிரத்தையைப் போக்கியது. கட்டபொம்மன்மீது அனுதாபம் ஏற்பட்டது. அவர்கள் மனத்தில் வெள்ளையர்மீது வெறுப்பு வளர்ந்தது.

இதற்குப் பின்வெள்ளையரின் நேரடியான ஆட்சி தொடங்கியது. வரி வசூலிப்பதில் அவர்கள் கடுமையாக இருந்தார்கள். பருத்தி வியாபாரத்தில் தனி ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். விவசாயிகள் வெள்ளையர்களிடமே பருத்தியை அவர்கள் வைத்த விலைக்கு விற்க வேண்டும், வியாபாரம் என்ற பெயரால் அவர்கள் விவசாயிகளைக் கொள்ளையடித்தார்கள். தங்கள் நாட்டுச் செய் பொருட்களை இங்கே கொண்டு வந்து விற்பதில் போட்டி இருக்கக் கூடாதென்று நெசவுத் தொழில் போன்ற குடிசைத் தொழில்களை அழித்தார்கள். அதனால் அவர்களின் சுரண்டல் கடுமையை மக்கள் அனுபவித்தார்கள். இந்த அனுபவம் அவர்களின் மனத்தில் வெள்ளையர் மீது வெறுப்பை உண்டாக்கிற்று. இந்த மனமாறுதலை அறிந்த பின்பு தான் பாஞ்சாலங்குறிச்சிப் பகுதியிலுள்ள புரட்சித் தலைவர்களில் எஞ்சியிருந்தவர்களும், புதிதாக வெள்ளையர் ஆதிக்கத்தை ஒழிக்க உறுதி பூண்டவர்களும் பாளையங் கோட்டைக்குச் சென்று சிறையிலிருந்த ஊமைத்துரையை விடுவித்திருக்க வேண்டும். ஊமைத்துரை இவ்வாறு மாறிய சூழ்நிலையில் தான் சிறை மீண்டு பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்தான். மக்கள் வெள்ளையரை எதிர்க்க உறுதி பூண்டிருந்ததால் அவர்கள் உற்சாகத்தோடு செயலில் ஈடுபட்டனர். அவர்கள் ஆறு நாட்களுக்குள்ளாக முன்னிலும் பன்மடங்கு வலிமை வாய்ந்த கோட்டையைக் கட்டினார்கள்.

மாறிய சூழ்நிலைகளில் கோட்டையை மட்டும் நம்பி ஊமைத்துரை இருந்து விடவில்லை. மக்களது வெள்ளையர் எதிர்ப்பை முழுவதும் திரட்ட அவனும் அவனோடு சேர்ந்த தலைவர்கள் செயல் படுத்தினார்கள்.

ஊமைத்துரை வெள்ளையர் போராடுவதன் உள் நோக்கத்தையும் தெரிந்துகொண்டான். வெள்ளையருக்குப் பஞ்சு விற்கக் கூடாதென்று, அவன் விவசாயிகளை வேண்டிக் கொண்டான். சிறிது காலத்திற்குக் கும்பினியாருக்கு இப்பகுதியிலிருந்து பருத்தி வாங்க முடியாமல் போய்விட்டது. அவர்களது வியாபாரத்தைத் தடை செய்ய அவர்களது துறைமுகத்தையும், பண்டகச்சாலையையும் கைப்பற்றிக் கொண்டான். வியாபாரத்திற்கும், அரசியல் ஆதிக்கத்திற்கும் உள்ள தொடர்பை அவன் அறிந்திருந்தான் என்று தோன்றுகிறது.

கட்டபொம்மன் தனக்கு விரோதமான பகுதியினரைத் தன்னோடு சேர்த்துக் கொள்ள எவ்வித முயற்சியும் செய்யவில்லை என்று குறிப்பிட்டோம். ஊமைத்துரை குலசேகரன் பட்டணம் மூப்பன், மறுகால் குறிச்சி மறவர்கள் முதலியவர்களைத் தனது நண்பர்களாகச் சேர்த்துக் கொண்டான். மறுகால் குறிச்சி மறவர்கள் தென் பகுதியில் காவல் உரிமையைப் பெற்றிருந்தார்கள். வெள்ளையர்கள் ஆட்சியில் அவ்வுரிமையை அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. இதனால் அதிருப்தியுற்ற மறவர்களிற் சிலரைத் தனது தூதுவர்கள் போல் அமைத்துக் கொண்டான். பரமன் குறிச்சிப் பள்ளர்கள் நெசவுத் தொழில் செய்து பிழைத்து வந்தார்கள். வெள்ளையரது வியாபாரச் சுரண்டலினால் அவர்களது தொழில் நசித்தது. அவர்ககளில் சிலர் வெள்ளையரால் கொடுமைப் படுத்தப்பட்டனர். இதனால் அதிருப்தியுற்றிருந்த பள்ளர்களையும் ஊமைத்துரை வெள்ளையர் எதிர்ப்பணியில் சேர்த்துக் கொண்டான். வெள்ளையரது நடவடிக்கையால் மக்களிடம் தோன்றியிருந்த வெறுப்பு முழுவதையும், ஊமைத்துரை சரியானபடி பயன்படுத்திக் கொண்டான். எந்தக் கோணத்திலிருந்து வெள்ளையர்கள்மீது வெறுப்படைந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் அனைவரையும் தன் தலைமையின் கீழ் திரட்டுவதற்கு அவன் முயற்சி செய்தான்.

இவ்வாறு முதல் போராட்டத்தில் காணப்பட்ட குறைபாடுகள் பலவும், இரண்டாவது போராட்டத் தலைவர்களது முயற்சியினால் நிவர்த்தி செய்யப்பட்டன.

ஆயினும் இரண்டாவது போராட்டமும் தோற்றுவிட்டது. அதற்குக் காரணமென்ன? பாஞ்சாலங்குறிச்சிப் போராட்டம் ஒரே தன்மையான சமூக அமைப்பில் இரு பிரிவினருக்குள் ஏற்பட்டது அல்ல. அதாவது ஒரு வலுவான பாளையக்காரருக்கும் வலுவற்ற பாளையக்காரருக்கும் ஏற்பட்டதல்ல. இச் சண்டைக் காலத்தில் சிதறிக் கிடந்த பாளையப்பட்டுக்களின் கீழ் நில

வுடமை முறையே அமுலில் இருந்தது. ஜாதிப்பிரிவுகள் பொரு ளுற்பத்தியை பலவீனப் படுத்தின. பொருளுற்பத்திச் சக்திகள் வளர்ச்சி பெறவில்லை. அச்சக்திகள் வளர்ந்திருந்தால் பாளையப் பட்டுகள் இணைந்து ஒரு முதலாளித்துவ நாடு தோன்றியிருக்கும். அதற்குரிய நிலைமை தமிழ் நாட்டில் இல்லை. ஆங்கிலேயர்கள் முதலாளித்துவம் வளர்ச்சியுற்ற நாட்டிலிருந்து வந்தவர்கள். ஐரோப்பாவில் முதலில் தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் ஒன்று இங்கிலாந்து. உற்பத்தி சக்தியின் வளர்ச்சியால் விற்பனைப் பொருட்கள் குவிந்தன. அவற்றிற்கு சந்தை நாடி அவர்கள் இந்தியாவுக்குள் வந்தனர். தென்னாட்டில் அவர்கள் வியாபாரத் தொடர்பு கொள்ளும் போது, இங்கிருந்த பலவீன நில உடமை அமைப்பிற்கும், வெளிநாட்டிலிருந்து வந்த முதலாளித்துவ அமைப்பிற்கும் மோதல் ஏற்பட்டது. அவர்களுடைய பொருட் கள் விற்பனையாகி லாபம் தருவதற்கு உள்நாட்டு உற்பத்திப் பொருள்களின் போட்டியைச் சமாளித்தார்கள். அவர்களிடம் கப்பல்கள் இருந்தன. உள்நாட்டுப்பொருள்களை வாங்கிக் கொண்டு செல்லவும், அதன் மூலம் உள்நாட்டு வியாபாரத்தில் ஆதிக்கம் செலுத்தவும் முடிந்தது. அக்காலத்தில் அரசியல் சூழ்நிலை காரண மாக அவர்கள் ஆதிக்கம் பெறவும் தலைப்பட்டார்கள். நாட்டை ஒரே சந்தையாக இணைக்கக் கும்பினி நாணயப் புழக்கத்தை புகுத்தினார்கள். இதன் மூலம் நாட்டின் பொருளாதாரத்தைக் கட்டுப் படுத்தினார்கள். இச் சுரண்டலின் விளைவுகளை எதிர்த்த மக்களையும், பாளையக்காரர்களையும் அடக்கினார்கள். அடக்கு வதற்கு அவர்களிடம் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி காரண மாகத் தோன்றியிருந்த பீரங்கிகளும், துப்பாக்கிகளும் குண்டு களும் இருந்தன. அவர்களை எதிர்த்த பாளையக்காரர்களிடம், வாள்களும், ஈட்டிகளும், அம்புகளும் தான் இருந்தன. இவற்றை வைத்துக் கொண்டு உள்ளேயே பல பலவீனங்கள் நிறைந்த ஒரு சமுதாய அமைப்பைப் பாதுகாக்க வலிமை மிக்க, முதலாளித்துவ அமைப்பில் ஒரு பகுதியான கும்பினியை அவர்கள் எதிர்த்தார்கள். இதில் வெற்றி யாருக்கு என்பதை இந்நிலைமையைப் புரிந்து கொள்ளுபவர்கள் ஐயமற சொல்லி விடலாம். வெற்றி வெள்ளை யருக்காயினும் பிற்காலத்தில் நடந்த விடுதலைப் போராட்டத்தில் கட்டபொம்மன், ஊமைத்துரை, பூலுத்தேவர், மருது சகோதரர் கள் முதலிய பாளையக்காரர்களின், வெள்ளையர் எதிர்ப்புப் போர்க ளின் நினைவுகள், ஊக்கம் அளிப்பனவாய் இருந்தன. விடுதலை பெற்ற பின்பு அவர்கள் அனைவரும் வரலாற்று வீரர்களாகப் போற்றப்பட வேண்டியவர்கள்.

இனி ஒரே ஒரு வினாவிற்கு விடையளித்து விட்டு இம் முன் னுரையை முடிப்போம்.

கட்டபொம்மன் கொள்ளைக்காரனா? தமிழ் நாட்டார் கட்ட பொம்மனை வெறுக்கத் தக்கவனாகத்தான் கருதவேண்டுமா? முன்னர் கூறியபடி நாயக்கர் ஆட்சி மறைந்த பின்னர் பாளையக்காரர்கள் தங்கள் தங்கள் பகுதிகளை விஸ்தரித்துக் கொள்வதற்கு முயன்றனர். இம் முயற்சியில் வலுவுடையவர்கள் வெற்றி பெற்றனர். மெலிந்தவர்கள் தோல்வியடைந்தனர். "வல்லவன் வகுத்ததே வாய்க்கால்" என்பது நியாயம் ஆகிவிட்ட காலத்தில், இவ்வாறு எல்லைகளை மாற்றியமைத்துக் கொண்ட பாளையக்காரர்கள் எல்லோரும், கொள்ளைக்காரர்களே. கட்டபொம்மனது முன்னோர்களும், கட்டபொம்மனும், ஏன், பூலுத்தேவரும் இதற்கு விதி விலக்கல்ல.

இரண்டாவது, மக்களை கட்டபொம்மன் கொள்ளையடித்தானா? 'கொள்ளை' என்பதற்கு என்ன பொருள் கொள்கிறோமோ அதைப் பொறுத்துத்தான் நாம் இக் கேள்விக்கு விடையளிக்க முடியும். தாங்கள் நடத்திய போர்களுக்காக மக்களைக் கசக்கிப் பிழிந்தது கொள்ளையென்றால் இக் கொள்ளையைச் செய்யாத பாளையக்காரன் எவனுமே அக்காலத்தில் இல்லை. பூலுத்தேவரும். விவசாயிகளிடம் கடனாக நெல்லைப் பெற்றுக் கொள்ளுவார் என்றும், அதனைத் திருப்பிக் கேட்க எவருக்கும் துணிச்சல் இராதென்றும், இதனாலேயே அவரது தலைநகருக்கு நெல்கட்டான் செவல் என்ற பெயருண்டாயிற்று என்றும் நாடோடிக் கதைகள் பல வழங்குகின்றன. அதுபோலவே நாடார்களுக்குச் சொந்தமான பனைமரங்களை கட்டபொம்மன் வெட்டிக் கொணர்வித்து மணிமாடங்கள் கட்டுவித்தான் என்ற கதையை முன்னர் குறிப்பிட்டோம். இவையாவும் பாளையக்காரரின் சுரண்டல் தன்மையைக் காட்டுகின்றன. இவை 'கொள்ளை' யென்றால், எல்லா பாளையக்காரர்களும் கொள்ளைக்காரர்களே.

மூன்றாவது, கும்பினி ஆதிக்கமுள்ள இடங்களில் கட்டபொம்மு கொள்ளையடித்தான் என்னும் குற்றச்சாட்டு. எதிரிகள் ஆதிக்கத்திலுள்ள இடங்களில் கொள்ளையடித்து அங்குள்ள பொருளாதார வாழ்வைச் சீர்குலைப்பது எக்காலத்திலும் போர்க்காலத்தில் வழக்கமாயிருந்து வந்திருக்கிறது. பூலுத்தேவரும், கட்டபொம்முவும், ஊமைத்துரையும், மருது சகோதரர்களும் துணிச்சல் மிக்கவர்கள். மற்றபாளையக்காரர்கள், தங்களைக் கொள்ளையிட்டு வெள்ளைக்காரர்கள் சேமித்துவைத்து இருக்கும் பண்டங்களை திருப்பிக் கேட்கவே அஞ்சினார்கள். ஆனால் இவ்வீரர்கள் வெள்ளைக்காரர்களது களஞ்சியங்களைக் கொள்ளையிட்டார்கள். அது தவறென்று அக்காலத்தில் மக்கள் நினைக்கவில்லை. வரி வசூல் செய்ய வெள்ளையருக்கு உரிமையில்லை என்று முழங்கிய இவ்வீரர்கள் தாங்கள்

வெள்ளையரது உரிமையை நிராகரிக்க, அவர்கள் வரியாக வசூலித்து சேமித்து வைத்திருந்த நெல்லைச் சூறையாடினார்கள். இதன் மூலம் வரி கொடாமலிருக்க, மக்களுக்குச் சிறிதளவு ஊக்கம் பிறக்கவே இவ்வாறு செய்தார்கள். கட்டபொம்மு கருங்குளத்தில் நெல்லைக் கொள்ளையடித்தது, பூலுத்தேவர் ஆழ்வார் குறிச்சியிலும், அதற் கருகிலுள்ள நவாபு களஞ்சியங்களை கொள்ளையடித்ததும், ஊமைத்துரை தூத்துக்குடியைக் கைப்பற்றி வெள்ளையர் பண்டகச் சாலையைக் கொள்ளையிட்டதும், சிவகெங்கைச் சீமையில், வெள்ளை யர் உதவியோடு நாவழ வரியாக வசூலித்துச் சேர்த்து வைத்ததை வேலுநாச்சியார் பெயரால் மருது சகோதரர்கள் கொள்ளையடித் ததும், வெள்ளையர் ஆதிக்கத்துக்கு எதிராக பாளையக்காரர் எடுத்துக் கொண்ட போர் முறை நடவடிக்கைகளே! இவை 'கொள்ளை' யென்றால் இக்கொள்ளைகளைச் செய்த 'கொள்ளைக் காரர்' களின் வீரத்திற்கும் துணிவுக்கும் அவர்களைப் பாராட்ட வேண்டும்.

ஆகவே பாளையக்காரர்களின் வர்க்கத் தன்மையை அறிந்து கொள்ளாமல் அவர்களுக்குள் ஒருவனது நடவடிக்கைகளை மட்டும் சுட்டிக்காட்டிக் கொள்ளைக்காரன் என்பதும், மற்றவர்கள் நடவடிக் கைகளை மறைத்து தலைசிறந்த வீரன் என்பதும் ஒருபுறம் சாய்ந்து முடிவுக்கு வருவதாகும்.

பல குறைபாடுகளுடைய பாளையக்காரர்களில் ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்தவர்களுக்கும், அவ்வெதிர்ப்பில் உயிர்விட்ட வீரர்களுக்கும் வரலாற்றில் போற்றத்தக்க இடம் உண்டு. அவ் விடத்தில் அவர்களைச் சரியாக மதிப்பிட்டு அமர்த்துவதே வரலாற்று ஆராய்ச்சியாளர் கடமை.

## நாட்டுக் கதைப் பாடல்கள்

கதையடங்கிய நாட்டுப் பாடல்கள் தமிழ்நாட்டில் ஏராள மாக இருக்கின்றன. இவையாவும் கிராமத்திலுள்ள உழைக்கும் மக்களிடையே இன்னும் செல்வாக்குப் பெற்றிருக்கின்றன. இவை களில் சிலவகைப் பாடல்கள் பாடகர்களால் விழாக்காலங்களில் பாடப்படுகின்றன. திருநெல்வேலி மாவட்டத்திலும், குமரி மாவட்டத்திலும் கோவில் கொடைகளின் போது பல வில்லுப் பாட்டுகள் பாடப்படுகின்றன. அறுவடைக் காலங்களில், திருநெல் வேலி மாவட்டத்திலும் இராமநாதபுரம் மாவட்டத்திலும் கட்ட பொம்மன் கதைப் பாடல்களைக் கூத்தாக நடிக்கிறார்கள். தென்னாற் காடு செங்கற்பட்டு மாவட்டங்களில் தேசிங்கு ராஜன்கதை பாட் டாகப் பாடப்படுகிறது. கோயம்புத்தூர் மாவட்டத்தில் கள்ளழகர் அம்மானை பாடப்படுகிறது. நாட்டுப் பாடலாக

முதலில் தோன்றிய நல்லதங்காள் கதை, பாட்டாகப் பாடப் பட்டதுமன்றி நாடகமாகவும் நடிக்கப்பட்டது.

இப்பாடல்கள் அம்மானை, சிந்து, கும்மி, லாவணி, வில்லுப் பாட்டு, ஏசல் முதலிய பல உருவங்களில் இன்னும் நிலை பெற்றிருக் கின்றன. ஆனால் கிராம வாழ்க்கையோடு தொடர்பற்றுப்போன படிப்பாளிகளுக்கு இவற்றைப் பற்றி எதுவுமே தெரியாது. இப் பாடல்களை இழிவானவை எனவும் எண்ணுகிறார்கள். தமிழ்நாட் டில் பெரும் பகுதியான மக்கள் கிராமங்களில் வாழ்கிறார்கள். கிராம மக்களில் பெரும்பாலோர் உழைப்பாளிகள். உழவு, நெசவு, விறகுவெட்டுதல், ஆடுமாடுகள், மண்பாண்டம் செய்தல், பாய் முடைதல் முதலிய தொழில்களில் அவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். கிராம வாழ்க்கைக்கு ஆதாரமான உழைக்கும் மக்கள் இப்பாடல் களைப் பாடுகிறார்கள்; அல்லது கேட்கிறார்கள். அவர்களது பண் பாட்டில் இப்பாடல்கள் ஒரு அம்சமாக விளங்குகிறது. எனவே உழைக்கும் மக்களின் பண்பாட்டை அறிந்துகொள்ள விரும்பு வோர், இப்பாடல்களைப் பற்றித் தெரிந்துகொள்ளவேண்டும்.

இப்பாடல்களைப் புராணக் கதைப்பாடல்கள், வரலாற்றுப் பாடல்கள், சமூகக் கதைப் பாடல்கள், என்று மூவகையாகப் பிரிக்கலாம். அல்லியரசாணிகதை, பவளக் கொடி கதை, புவனேந்திரன் களவு மாலை, பார்வதி கல்யாணம், தட்சராஜன் சரித்திரம் முதலிய கதைகள் புராணக் கதைகளைத் தழுவியது. ஆனால் இக்கதைகள் முற்றிலும் புராணக் கதைப்போக்கைத் தழுவியவை அல்ல. இரண்டொரு சம்பவங்களைப் புராணக் கதையிலிருந்து தேர்ந்தெடுத்துக்கொண்டு தமிழ்நாட்டு உழைக்கும் மக்களின் கண்ணோட்டத்தில் கற்பனையை ஓடவிட்டுப் பின்னப் பட்டிருக்கும் கதைகளே இவை. மகாபாரதத்தில் அர்ச்சுனன் சித்ராங்கதை என்னும் பாண்டிய குமாரியை மணந்துகொண்டான் என்று வரும் சம்பவத்தை, கற்பனை வளத்தால் அல்லி அரசாணி மாலையாக எவரோ ஒரு கவி புனைந்துவிட்டார். அதைத் தொடர்ந்து தமிழ்க் கலாச்சாரத்திற்கும் வடநாட்டுக் கலாச்சாரத் திற்கும் இணைப்பு ஏற்படுத்தும் முறையில் பல கதைகள் தோன்றின. இவ்வாறு தோன்றிய கதைகளுள் ஒன்று ஏணியேற்றம் என்பது. இக்கதைக்கு ஆதாரம் எதுவும் மகாபாரதத்தில் இல்லை. ஆனால் இக்கதையில் வரும் பாத்திரங்களெல்லாம் மகாபாரதத்தில் வரும் பாத்திரங்கள். பாண்டவர்கள் நாடு கடத்தப்பட்டிருக்கும் போது சுபத்திரை தனியாக இருந்தாள். அவளைத் துரியோதனன், தன்னிச்சைக்கு இசையும்படிக் கேட்டான். அவள் அர்ச்சுனனது மற்றொரு மனைவியான அல்லி இருக்கும் மதுரை வந்து சேருகிறாள். துரியோதனன் அவளைத் தேடிக்கொண்டு வருகிறான். அவனை

அவமானப்படுத்துவதற்காக அல்லி ஒரு தந்திரம் செய்கிருள். ஒரு இயந்திர ஏணி செய்யச் சொல்லி அதன்மீது படுத்துக் கொண்டால் சுபத்திரையிடம் அனுப்பிவிடுவதாகச் சொல்லுகிருள். அந்த ஏணியில் அவன் படுத்ததும் அது பல விடங்களுக்கு அவனைக் கொண்டு செல்கிறது. போகிற இடங்களிலெல்லாம் பெண்கள் அவனை அடிக்கிருர்கள். கடைசியில் அவன் மனைவியிடமே அது அவனைக் கொண்டு தள்ளிவிடுகிறது. இப்படி ஒரு கற்பனைக் கதையை புராண கதாபாத்திரங்களை வைத்து உருவாக்கி இருக்கிருர்கள். புராணக் கதைகளை கேலி செய்யும் முறையிலும் சில நாடோடிப் பாடல்கள் இருக்கின்றன. பார்வதி கலியாணம் இவ்வகையைச் சார்ந்தது. தட்சராஜன் கதையும் அநேகமாக அப்படித்தான். இக்கதைகளில் புராணக் கண்ணேட்டத்திற்கு நேர் எதிரான கருத்துக்களைக் காணலாம். ஆகையால் புராணக் கதைகள் என்று சொல்லும் பொழுது, நாடோடிப் பாடல்களின் கதை மாறுதலில்லாமல் புராணத்திலுள்ளதுபோல் இருக்கும் என்று கருத வேண்டியது இல்லை புராணக் கதைகளை உழைப் பாளி மக்கள் எவ்வகையில் புரிந்து கொள்கிருர்களோ அம் முறையில் இக்கதைகள் மாற்றப்பட்டிருக்கும்.

இரண்டாவது வகையான கதைகள் சரித்திரக் கதைகள். இவற்றில் முக்கியமானவை தேசிங்கு ராஜன் கதை, கட்டபொம்மன் கதை, மருதுபாண்டியர் கதை, கான்சா கிழ் சண்டை, பூலுத்தேவர் சிந்து முதலியவை, இவ்வரலாற்று வீரர் களின் சரித்திரங்கள் பலவகையான உருவங்களில் நாட்டுக் கதைப் பாடல்களாக வழங்கி வருகின்றன. இக்கதைகளில், சரித்திரத்தை நாம் உழைக்கும் கிராம மக்களின் கண்ணேட்டத்தில் காண்கிருேம். இச்சரித்திர வீரர்களின் சிறந்த பண்புகளை இக்கதைகள் போற்றிப் புகழ்கின்றன. கட்டபொம்மன், மருது சகோதரர்கள், பூலுத்தேவர் முதலிய வெள்ளையரை எதிர்த்த வீரர்களின் வரலாறு வழிவழியாக இக்கதைப் பாடல்கள் மூலம் நமக்குக் கிடைத்து இருக்கின்றன. உண்மை வரலாற்றை மறைத்துவிட ஆங்கிலச் சரித்திர ஆசிரியர் கள் செய்த முயற்சிகளை இப்பாடல்கள் முறியடித்து விட்டன. வெள்ளையர்கள் மறைத்து விட்ட பல நிகழ்ச்சிகளையும் இப் பாடல்கள் நமக்கு வெளிப்படுத்துகின்றன.

இப்பாடல்களைக் கொண்டு மட்டும் சரித்திர நிகழ்ச்சிகளை நாம் உறுதியாக அறிந்து கொள்ள முடியாது. இவற்றை ஒதுக்கித் தள்ளி விட்டும், உண்மையான நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளவும் முடியாது. கிடைக்கும் சரித்திரச் சான்றுகளையும், நாட்டுப் பாடல்களையும் உற்று நோக்கி உண்மைகளைச் சலித்துப் பார்த்து முடிவுக்கு வரவேண்டும்.

மூன்றாவதாக, சமூகக் கதைப் பாடல்கள் பல, வில்லுப்பாட்டா கவும், அம்மானையாகவும் வழங்கி வருகின்றன. வில்லுப்பாட்டு களில் பெரிய பணக்காரரின் பேராசைக்கு ஏழை உழைப்பாளிகள் பலியாவதும் ஜாதிக் கட்டுப்பாடுகளை, மீறி மணம் செய்து கொள் பவர்கள் ஜாதிக் கொடூரங்களுக்கு உள்ளாவதும், சொத்து உரிமை இல்லாத பெண்கள், கூட்டுக் குடும்பத்தில் படும் துன்பங்களும் கதைப் பொருளாக அமைந்துள்ளன, இவை தவிர, ஊராரின் நன்மைக்காக பயிர்களைக் கொள்ளை போகாமல் பாதுகாத்த வீரர் களின் கதைகளும் கிராமத்தின் செல்வமாகிய ஆடுமாடுகளைக் கொள்ளை கொண்டு செல்பவர்களை எதிர்த்துப் போராடி உயிர் நீத்தவர்களது கதைகளும் பாடல்களாக வழங்குகின்றன. உயர்ந்த நல்ல நோக்கங்களுக்காக உயிர் விட்டவர்கள் கதைப் பாடல்களில் வீரர்களாகப் போற்றப் படுகிறார்கள்.

கிராமப்புற உழைப்பாளி மக்களின் பண்பாட்டை அறிந்து கொள்வதற்கு இக்கதைப் பாடல்கள் மிகச் சிறந்த சாதனம்.

## இப்பாடலைப்பற்றி

கட்டபொம்மனைப்பற்றியப் பல பாடல்கள் கோவில்பட்டித் தாலுகாவில் கிராமங்களில் வழங்கி வருகின்றன. சில கிராமங் களில் அறுவடை சமயங்களில் கூத்தாடும் குழுவினர் எட்டுநாள், பத்துநாள் கிராமங்களில் தங்கி கட்டபொம்மன் கதைப் பாட்டுப் பாடி கூத்தாக நடிப்பார்கள்.

சில குழுக்கள் முழுவதும் தமிழ்நாட்டுப் பாடல்களாகவே பாடுவார்கள்.

வேறு சிலர் தெலுங்கும் தமிழும் கலந்த பாட்டுக்களைப் பாடு வார்கள். பொதுவாகப் பெண் கதாபாத்திரங்களின் கூற்றுக்களை தெலுங்குப் பாடல்களாகவும், ஆண் கதாபாத்திரங்களின் பேச்சுக்களை தமிழ்ப்பாடல்களாகவும் பாடுவார்கள்.

இவ்விருவகை நாட்டுக் கதைப் பாடல்களையும் தேடிக் கண்டு பிடித்து இங்கு வெளியிடுகிறோம்.

இதற்கு முன்னர் கட்டபொம்மனைப்பற்றிய கதைப்புடலை நான் பதிப்பித்திருக்கிறேன். அதனை 1962ல் நியூ செஞ்சுரி நூல் வெளியீட்டார் பதிப்பித்திருக்கிறார்கள்.

இவ்விரண்டு கதைகளும் என்னிடம் இரண்டாண்டுகளாக இருந்தன. இவற்றை வெளியிட ஆர்வத்தோடு முன்வந்த மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர். தெ.பொ.

மீனாட்சிசுந்தரனார் அவர்களுக்கும் பல்கலைக்கழக சிண்டிகேட் சபைக்கும் எனது நன்றி.

இதுபோன்றே இன்னும் சில நாட்டுக் கதைப் பாடல்களை அவர்கள் வெளியிட முன்வந்திருப்பது தமிழ் நாட்டுப் பாடல் துறைக்கு அவர்கள் செய்திருக்கும் சிறந்த நற்பணியாகும்.

கட்டபொம்மு கதைப் பாடல் பிரதிகள் பல எனக்குக் கிடைத்தன. அவற்றுள் முழுமையான வடிவத்தில் கிடைத்த பிரதியைப் பின்பற்றி இந்நூல் பிரதி செய்யப்பட்டுள்ளது.

இப்பிரதியை எனது நண்பர் ஓணமாகுளம் பெருமாள் அழகிய கையெழுத்தில் எழுதித் தந்ததோடு, பாமரவழக்குச் சொற்கள் பலவற்றிற்குப் பொருளும் கூறினார். இக்கதை நடந்த பகுதியில் வாழ்பவராதலால், அப்பகுதியில் வழங்கும் வழக்குத் தமிழ்ச் சொற்கள், பழமொழிகள் உணவு வகைகள் முதலியன பற்றிக் குறிப்புகள் எழுத விவரங்கள் கூறினார். அவருக்கு எனது நன்றி.

பாளையங்கோட்டை,
21-9-70.

நா. வானமாமலை,
பதிப்பாசிரியர்.

சக்கதேவி[1] துணை

# கட்டபொம்மு சரித்திரக்கும்மி

## வணக்கம்[2]

சீர்பொருந்துங் கட்டபொம்மு துரையின் மீதிற்
செந்தமிழ்க்கும்மி பாடல் திறமாய்ச் செப்ப
ஏர் புகழுஞ் செந்தில் வளர் கந்தன் தானும்
பரிவுடனே தயவு செய்வன் பனுவல் மாதுங்
கார் போன்ற மேனியனுங் கமலை தானுங்
கவிக்கு .நித்த மருள் புரிவான் கருணை கூர்ந்து
பேர் பொருந்து மிக்கவியை யானும் பாட இசைக்கின்றேன்
செந்தமிழோ ரேற்றந் தானே.

## காப்பு

பாரார் புகழுகின்ற பாஞ்சை நகர் மன்னவர் மேல்
சீராய் தமிழ்பாடச் சென்னி திங்கள் கங்கை கொன்றைத்
தாரார் முடிபுனையுஞ் சம்புவா புத்ர னெனுங்
காராரு மைங் கரன் தன் கழல் வினையே காப்பாமே.

அட்ட திசை யெங்கணுமே திக்கு விசயஞ் செலுத்தி யாண்மை பெற்ேறான்
கொட்ட மிடுமயலார்கள் மகுடமுடி கிடுகிடெனக் குருதிபாய
வெட்டி விருதிட்ட துரை திட்ட நகர்க் கதிபதியாம் வீரபாண்டியக்
கட்டபொம்மு தரிசனமே[3] சுப்ரமணியர் தரிசனம் போல் காணலாமே

ஓராறு மாச மழை மாரி பெய்யுமிக் காட்சினியி
லோராறு மாசங் கோடையாய் விடு முர்ப்பனஞ் சேர் 10
சீராறு பாஞ்சை செகவீர பாண்டியன் செங்கை ரெண்டும்
ஈராறு மாசமும் பொன்மாரி பெய்யு மிரவலர்க்கே

சீர் பொருந்துங் கட்டபொம்மு துரை மீதில்
செந்தமிழ்க் கும்மி தமிழுரைக்க
கார் நிறம் பெற்றருள் வேழ முகத்தோனே
கந்தா நின் பொற் பதங் காப்பாமே[4]

செல்வம் பொருந்தும் பாஞ்சால நகர் வளர்
தீரன் மேல் கும்மித் தமிழ்பாட
கல்விக் கருள் புரி வெண்டாமரை மலர்க்
கன்னியின் பொற் பாதங் காப்பாமே

தேசம் புகழ் கட்டபொம்மு துரை மீதில்
செந்தமிழ்க்கும்மி தமிழ்பாட
வாசம் பொருந்தும் நளின மலர்பதம்
வாலை மனோன் மணி காப்பாமே

பூலோக மெய்க்கும் பாஞ்சாலைப் பதிவளர்
புண்ணியவான் கட்டபொம் மேந்திரன் மேல்
கோலாகலக்கும்மிப் பாட்டுரைக்கப் பாஞ்சை
குஞ்சரன் பொற் பாதங் காப்பாமே

பாஞ்சைப் பதியில் வளர்ந்தோங்கும் வீரபாண்டியக் 30
கட்டபொம் மேந்திரன் மேல்
வாஞ்சையாய் கும்மித் தமிழ்ப் பாடதிரு
வாக்கருள் செய்வாளே சக்கதேவி

பூலோக பாண்டியன் கட்டபொம்மு துரை
மேலுங்கும்மித் தமிழ்ப் பாட்டுரைக்க
சாலோக சாமீப சாரூப சாயுச்ய
சக்கதேவி பதங் காப்பாமே

சத்தி சடாட்சரி வீரமல்லு பொம்மு
சக்க தேவி பதங் காப்பாமே

பாஞ்சைவளம்

சுத்தவீர சூரன் கட்ட பொம்முதுரை
துலங்கும் பாஞ்சை வளங்கள் சொல்வேன் 40
நாட்டுவளங்களைச் சொல்லுகிறேன்
பாஞ்சைக் கோட்டை வளங்களைக் கேளுமையா
கோட்டைகளாஞ் சுத்துக் கோட்டைகளாம் மதில்க்
கோட்டைகள் தான் கெட்டி வேலைகளாம்
வீட்டிலுயர் மணிமேடைகளாம் மெத்தை
வீடுகளா மதிலோடை களாம்
பூட்டுங்கதவுகள் நேர்த்திகளாம் பணப் பொக்கிஷ
வீடும் பார் சாஸ்திகளாம்[5]
சக்கதேவி கோவிலாலய மாந்தேவி
சன்னதி வாசல் விலாசங்களாம்[6] 50
மிக்க நெடுந் தெரு வீதிகளாம் வெகு
விஸ்தாரமாய்க் கொலு மண்டபமாம்
சப்ரகூட மஞ்சமேடை களாம் சித்ரச்
சாலையுஞ் சந்தனச் சோலைகளாம்

புஷ்ப மலராலே பந்தல்களாம் வெகு
செப்ப முடனே ஆசாரங்களாம்
ஆசார வாசலலங்காரம் துரை ராசன்
கட்ட பொம்மு சிங்காரம்.
ராசாதி ராசன் அரண்மனையில் பாஞ்சை
நாட்டரசன் கொலுவீற்றிருந்தான். 60

பூவாசம் வீசும் புகழ்வீசும் யெங்கும்
பொன்வாடை வீசும் பன்னீர்வீசும்.
வாவிக்கரைகளும் சோலைகளும் நந்த
வனமான விலாசங்களும்
வாழை பலாவும் பழஞ் சொரியும் நல்ல
மாவுங்கமுகும் வளர்ந் தோங்கும்
தாழைமலர்களும் பூச்சொரியும் நதி
தாமரை பூத்திடும் மேன்மைகளும்
விந்தையாகத் தெருவீதிகளும் வெகு
விஸ்தாரமாய்க் கடை வாசல்களும் 70

நந்தவனங்களும் சந்தனச் சோலையும்
நதியுஞ் சென்னெல் கமுகுகளும்,
வாரணச் சாலை யொருபுறமாம் பரி
வளரும் சாலை யொருபுறமாம்
தோரண மேடை யொருபுறமாம் தெருச்
சொக்கட்டான் சாரியலோர் புறமாம்
சோலையில் மாங்குயில் கூப்பிடுமாம் வளஞ்
சொல்லி மயில் விளையாடிடுமாம்
வாலை எனுஞ் சக்க தேவி கிருபையால்
பாலும் பவிசும் வளர்ந்திடுமாம். 80

அன்பு வளர்ந்தேறும் பாஞ்சால நாட்டினில்
அதிசயஞ் சொல்கிறேன் கேளுமையா
தென் பாஞ்சைப் பதி நாட்டு முயலது
திரும்பி நாயை விரட்டிடுமாம்[7]
முயலும் நாயை விரட்டிடுமாம் நல்ல
முனையுள்ள பாஞ்சால நாட்டினிலே
பசுவும் புலியும் ஒரு துறையில் வந்து
பால்குடிக்குந் தண்ணீர் தான் குடிக்கும் 90

கறந்த பாலையுங் காகங் குடியாது
கட்டபொம்மு துரை பேருசொன்னால்
வரந்தருவாளே சக்க தேவி திருவாக்கருள்
செய்வாளே சக்க தேவி

## மன்னன் கொலு

பொம்மக்காள் கோவிலின் முன்பாகக் கட்ட
பொம்முதுரையும் பேரன்பாக 100

கம்மவார் சில்லவார் தோக்குலவார் நல்ல
கம்பளத்தாருங்[8] கொலுவிருக்க
நித்யகல்யாணி மேடையிலே நவரத்ன
நாற்காலி தான்போட்டு
சித்ர விஸ்தாரமாய் மெத்தை விரித்ததில்
திண்டுவைத்து முல்லைச் செண்டுவைத்து
வாசம் பொருந்தவே கட்டபொம்மு துரை
ராசன் மகிழ்ந்து கொலுவிருக்க
ஊமைத்துரையுஞ் சிவத்தையா முத்தையா
வீமன் கருத்தய்யா வெள்ளையாவும்
சாமித்துரையான வேடப்பட்டித்துரைச்
சாமியும் வந்து கொலுவிருக்க
சின்னத்தளவாய் பெரிய தளவாயும்
மன்னன் புலிகுத்தி நாயக்கரும் 110

வர்ணப்பணிகள் துலங்கிடவே நல்ல
மாப்பிள்ளை நாய்க்கமார் வந்திருக்க
தேசம் புகழுஞ் செகவீரபாண்டியன்
செல்வன்கட்டபொம்மு ராச துரை
ராசதுரை வாசல் தானுபதியான
நல்லசிவ சுப்ரமண்யபிள்ளை
கங்கைக் குலாதிபன் மங்களக் கல்யாண
துங்கன் அதிகாரம் பார்த்திருக்க.

சிங்கார மாகவே பாஞ்சால நாட்டினில்
சங்கீத மேளந்தயாராக
பேரிகைச் சத்த முழங்கிடவே சங்கு
பேசுந் தொனியு முழங்கிடவே 120

காரியக் காரர்கள் காணிக்கரும் நல்ல
கம்பளச் சேருவைக் காரர்களும்
கெம்பீரமாகச் சபை கூடிச் சேவல்[9]
கட்டிவிட்டங்கே விளையாடி
சேயிழை மாதர் செயம் பாட ஒயில்[10]
செல்வக் குமாரர் விளையாட
வாய்பேசாப் பாண்டியன் [11]ஊமைத்துரைச்சாமி
ஞாயம் விசாரணை தான் கேட்க

பாஞ்சால நாட்டுத் துரை மார்கள் நல்ல
பார்வைக் கேற்ற ஒயில்க் காரர் 130

பூஞ்சிட்டுத் துப்பட்டா மேல் போட்டு ராச
போச மகாராசன் சீராட்டு
வட்டப் பொட்டுக்காரன் மைக்காரன் வில்காரன்
வாகுள்ள வெள்ளையன் சீராட்டு
திட்டங்களாகவே கட்டபொம்மு துரை
செய்தியைக் கேளுங்கள் நல்லோரே
மாப்பிள்ளை மார் போல வருவதுவும் சப்ர
மஞ்சத்தில் மெத்தை விரிப்பதுவும்
ஆயி மஹேஸ்வரி சக்கதேவி பொம்மு
அம்மன் பூசை தின முடிப்பதுவும் 140

ஞாயம் விசாரணை கேட்பதுவும் அந்த
ஞாயம் பைசல் பண்ணித் தீர்ப்பதுவும்
ஏழை பரதேசிக் கன்னங் கொடுப்பதுவும்
இந்திரன் போல் கொலு விருப்பதுவும்
பாளையக்காரர் பவிசுக்காரர் வீரபாண்டியர்
பாஞ்சைப் பதிராசர்
இப்படியாகத் துரைத்தனஞ் செய்து கொண்
டேயிருந்தார் கட்டபொம்முதுரை

பாஞ்சைக்குக் கேடு வரக்காரணம்

அப்படிக் கொத்த பாஞ்சை நகருக்கு
அழிவு வந்ததைக் கேளுமையா 150

வந்த விதிகளைச் சொல்லுகிறேன் அந்த
மார்க்கத்தைக் கேளுங்கள் நல்லோரே
தந்திரமாயிந்தச் சீமையோ ரெட்டுக்குஞ்
சாகிஷன் மேஷர் கலெக்கட்டராய்[12]
சென்ன பட்டணம் கெவர்மெண்டார் துரை
செப்பிய உத்திரவின் படியாய்
யென்றாஞ் சாகிஷன் மேஷர் துரை வலு
இங்கிலீசுத்துரை கெங்கு துரை
வந்தானே ராமநாத புரத்தில் துரை
வல்லமை சொல்லக் கேளும் நல்லோரே 160

சிந்தை மகிழ்ந்தல்லோ சாகிஷன் மேஷரும்
சீமைக் கதிகாரம் பார்த்தனனும்
எட்டயபுரம் பிரதானி வந்து துரை
யிடத்தில் என்ன பிராது[13] சொல்வார்

தர்மத்துரைகளே கேளுமென்று வெகு
சாதுரியமாகவே சொல்லுவாரும்
அருங்குளத்திலே கம்பங் கம்ர்ச் சாலை[14]
ஆயிரங்கோட்டையுங் கொள்ளை கொண்டார்
வருமங்களாகவே தட்டைப் படப்பிலே
பெரு நெருப்பைக் கொளுத்தி விட்டார் 170

விருதாப்[15] பொல்லாங்கு செய்யுகிறார் எங்கள்
வீட்டில்வந்து கொள்ளை யடிக்குகிறார்
எப்போதும் வென்றான் காட்டு நாயக்கன்பட்டி[16]
எல்லைச் சதிரிலே மேய்ந்த மாட்டை
முப்பது நாற்பது பால்மாட்டை ஓட்டி
முன்னூ ரெருதையுங் கொள்ளை கொண்டார்
தூத்துக்குடியிலே வெள்ளைக்காரர் வீட்டில்
தொண்ணூறு சாக்குப் பண மெடுத்தார்
பார்த்தீர்களோ ஞாயம் பார்த்தீர்களோ ஆடிக்
காத்திலே தீயைக் கொளுத்துகிறார் 180

பட்டிக்கா டெங்கும் பறிபோச்சே தட்டைப்
படப்பிலே வெகு கொள்ளையாச்சே
கட்டபொம்முதுரை துஷ்டரையா அவர்
கன்னக் களவிலே மிச்சமய்யா[17]
இப்படிக் கொள்ளை யடித்தாக்கால் நாங்கள்
யென்னமாய்க் காலங் கழித்திடலாம்
இப்போதவரை வரவழைத்துத் துரை
யிந்தச்சணம் ஞாயம் கேட்காவிட்டால்
யெங்களுக்குக்குடி யங்கேயில்லை அவர்
தங்களாலே வெகு துன்பமையா 190

இங்கே அவரை வரவழைத்துத் துரை
தாங்கள் விசாரணை செய்யாவிட்டால்
பாருங்களென்று ஒரு நொடியில்ச் சென்ன
பட்டணம் போறேன் பிராதுக் கென்றார்
பாருபாரென்றுமே சொல்லிடவே யந்தப்
பாராளுமேஷர் கலெக்கட்டரும்
சீமைக்கதிகாரி கவுனர்துரை யிந்தச்
செய்திகள் கேட்டு விளங்கிவிட்டார் 200

மாமூல் வழக்கமும் பார்த்துவிட்டார்துரை
கோபமாய்ச் செய்தியுரைத்து விட்டார்

ஜாக்சன் கோபம்

அப்படியாக் கொத்த கட்டபொம்மு தன்னை
இப்பவே தானும் வரவழைத்து
செப்பமாய் ஞாயமுந் தீர்க்கு கிறேனவர்
துற்புத்தி தன்னை யொடுக்குகிறேன்
வீரமிருந்திடும் கட்டபொம்மேந்திர தீரன்
குறும்பை யொடுக்குகிறேன்
தாரணி தன்னிலரசு செய்யுங்கர்வத்
தாலே தானேழு வருஷமுமாய்
தோப்புரு [18]பணமுஞ் செலுத்தாமல் வலு
துஷ்டனடா கட்ட பொம்மனுந்தான் 210

தாப்பான பாஞ்சைப் பதி தனிலே அவர்
தன்னரசாய்ச் சீமை யாளுகிறார்
கோட்டைகள் போட்டுத் துரைத்தனஞ் செய்கின்ற
கொள்ளைக்காரக் கட்ட பொம்மனைத்தான்
பேட்டியா வரவழைத்து ஞாயம்
பேசிடவேணு மென்றே நினைத்தார்
மாயா விநோதனும் சாகிசருமந்த
மன்னன் கமிட்டி யாலோசனையால்
ஞாயமாய் மேஷிரட்டா பீசு [19] போலீசு
ஞாயங்கள் செய்திட வேணு மென்று 220

ஜாக்சன் கடிதம்

கட்டுக்கடங்காத கட்டபொம்மு துரையை
இஷ்டமாய்ச் சந்திக்க வாருமென்று
திட்டங்களாகவே கும்பினிக் காகிதம்
சீக்கிரம் கண்டித்தே யெழுதி
டப்பை எழுபத்திரண்டு பாளையமும்
இப்பவே வந்திட வேணு மென்று
செப்ப மாய்க் காயிதம் தானெழுதி வெகு
சீக்கிரமாகவே கையெழுத்தும்
முத்திரை வைத்து முகரும் வைத்து அதை
மூன்றும் பிறை போல மடித்து வைத்து 230

விஸ்தாரக் காயிதம் தானெழுதி அதை
வேகமாய்த் தபாலிலனுப்பினாறும்
காயிதம் வந்ததே பாஞ்சைப்பதிதுரை
கட்ட பொம்மு பிரதானியிடம்

### பாஞ்சைக்குக் கடிதம் வந்தது

மாய மாய்க் காயிதம் வந்ததென்று அப்போ
வாசித்துப் பார்த்தானே பிள்ளை மகன்

வாசித்துக் காயிதச் செய்திகளை விசு
வாசன் கட்ட பொம்முராசனிடம்

நேசமாய்ச் சொல்லி உரைத்தவுடன் ஒரு
நிமிஷத்திலதி வேகமுடன்...... 240

சொன்ன சமாச்சாரம் என்னவென்று அங்கே
மன்னன் ஊமைத்துரை கேட்கலுற்ருன்

தன்னவனுகிய பிள்ளை மகன் கைச்
சன்னைகள் போட்டு மொழிந்தனனும்

மெய்வார்த்தை பிள்ளை மகனுரைக்க வலு
வேகமாய் ஊமத்துரை தானும்

கையைக் கடித்துத் துடை தட்டி யிரு
கண்ணுஞ் சிவந்து வெகு கோபமுடன்

ஆகட்டும் நாளைச் சவாரியென்ருர் நமது
அண்ணன் மனப்பாங்கு என்ன வென்ருர் 250

போகத்தான் வேணுஞ் சவாரியென்ருர்
வார பொல்லாங்குக்கோ பயமில்லை என்ருர்

### பேட்டிக்குப் புறப்பட்டனர்

சாகிஷன் மேசருஞ் சந்திப்புத் தந்தாக்கால்
தானே சபாசென்று பேட்டி செய்வோம்

மாய்கைகள் வஞ்சனை செய்தாக்கால் வலு
மண்டை சிதற உடைப்பேனென்ருர்

கட்டபொம்முதுரை ஊமைத்துரையுமே
கலந்தளப்புகள் [10] பேசிக் கொண்டார்

சட்டமாய் சாகிஷன் மேஷரைச் சந்திக்க
தானே பயணம் சவாரி என்ருர். 260

நன்ருக நம்முட சேவுகரை ஒரு நாழிகையில்
ஆசர் செய்யு மென்ருர்

என்று ஊமைத்துரை சொல்லிடவே நல்ல
தென்று பிள்ளை மகன் தானெழுந்து

மெட்டுகளாகவே கட்டபொம்மு துரை
மேவானளப்புகலேது சொல்வார்

கட்டான கும்பினிச் சாகிஷன் மேசரைக்
கண்ணாலே பார்த்திட வேணுமென்ருர்.

கும்பினிப்பட்டாளம் பார்க்கவேனும் வெகு
கெம்பீரமாய்ச் சாரி செய்யவேணும் 260
சம்பிரதாயமாகச் சாகிஷன் மேஷரைச்
சந்திப்புக் காணவே வேணுமென்றார்
சீக்கிரமாகவே சேனைத் தளங்களைச்
சேகரஞ் செய்யும் பிரதானி யென்றார்

பேட்டிக்குச் செல்ல படை திரட்டுதல்

பாக்கியவான் கட்டபொம்மு துரையிப்போ
பயணப் பேரிகை செய்யு மென்றார்
தாஷ்டீகன் உத்தரவாகிடவே நிரூபம்
தானுதிபதிப் பிள்ளை தானெழுதி
நாட்டுத் தலைவரைத் தானழைத்தார் முள்ளுக்
காட்டுச் சூரனை வரவழைத்தார். 270
கோட்டைத் தலைவரைத் தானழைத்தார் தம்பி
கொட்ட மடக்கியைச் சேகரித்தார்.
தீட்டிய வேல்க்காரத் தேவமாரும் நல்ல
சேருவைக் காரர்கள் காருபாரும்
சின்னக் கோடாலி பெரிய கோடாலி வலு
சித்துளியாங் கண்ட கோடாலி
மன்னவன் சில்லவார் தோக்குலவார் ஒயில்
வரிசைக் கம்பளச் சேருவையும்
கந்தன் சிவத்தையா முத்தையாவும் முத்துக்
கருத்தையாவும் சிவத்தையாவும் 280
உத்தமனான குமரய்யாவும் மாதி சித்தன்
தளகர்த்தன் வெள்ளையாவும்
சின்னத் தளவாயும் பெரிய தளவாயும் மன்னன்
புலிகுத்தி நாயக்கரும்
சென்னவ நாயக்கர் பொன்னையாவும் தம்பி
மன்னார் கோட்டைச் சுப்பையாவும்
சின்ன வலக்கையா பெரிய வலக்கையா
சேர்ந்த கெடுவிட்லு நாயக்கரும்
மன்னவன் சின்னன் வீரணனும் சரி
மாதரி வெள்ளையன் பூவணனும் 290
காவக்காரன் மகன் கோபக் காரனவன்
கண்ட யிடமெல்லாம் சண்டைக்காரன்
சேவல்க் கட்டில் வெகு கெட்டிக்காரன் சட்ட
திட்டக்காரன் கண மெட்டுக்காரன்

முச்சாணே வைத்திடும் வேலெடுத்தான் படை
முன்னே குதித்தானே பாதர்வெள்ளை
பச்சைத் தலைப்பாகு கட்டினபேர் நல்ல
பிச்சுப் பூமாலைகள் தான் முடித்தார்
தாய்க் கிராமம் பசுவந்தனைச் சாமி
நாயக்கமாரை வெகு மூர்க்க மதாய் 300

மார்க்கமுள்ள நாகம்பட்டி வசீகரன்
வண்டாணங் கெட்டி வண்டனுடன்
வில்லெடுக்குஞ் சுத்த வீரருடன் நல்ல
வேடபட்டித் துரை மன்னவரும்
குவ்லிலி என்று குலவையிட்டு நல்ல
குண்டப் பெருமாள் குளத்தைவிட்டு
முள்ளுப்பட்டி முத்துவீரணனும் அந்த
முள்ளுக் காட்டு வீரபாண்டியனும்
வள்ளி நாயக புரத்தாரும் ஒயில்
வரிசைக் கம்பளச் சேருவையும் 310
குலைய நல்லூரு வீரண நாயக்கரும்
குதிரைக் குளத்திலே தும்பிச்சியும்
மேல மருதூருப் பாண்டிய நாயக்கர்
வீரலெக்கன் சின்ன மல்லுடனே
ஆதனூரு அழகண்ணனும் வெகு
கோலாகல முள்ள பாவணனும்
பூதலப்புரங் குமரணனும் நல்ல
அய்யரும் பட்டியில் மெய்யணனும்
சண்முக புரத்தினில் சென்னவ நாயக்கர் 320
தட்டான் குளத்தூருப் பொட்டி நாயக்கர்
கம்மாவார் சில்லவார் தோக்குலவார் படை
மேன் மேலுங் கூடவே கம்பளத்தார்
ஆறு குளத்தூரு நாட்டாரும் பொம்மு
அம்பலவாணனும் தம்பியரும்
பேருபெற்ற மன்னரெல்லாங் கூடியே
பேசிக் கைவீசியே வந்தனராம்.
ஏழு கிராமத்தில் மாடசாமி தம்பி
இங்கிதக் கரானதிகாரி
வேளூர் புரத்தில் கருத்த முத்து வெகு
வேடிக்கைக் காரன் சிவத்த முத்து

புனுகுச் சந்தனப் பொட்டழகன் பொடிப்
　　பூச்சழகன் கைவீச்சழகன்
கழுவிலிருந்து காலாட்டிடுவான் கை
　　காட்டிடுவான் கல்வி மூட்டிடுவான்
கொங்கலாக் குரிச்சிப்பிள்ளை மகன் தம்பி
　　குலையங்கரிசலாறு முகம்
சிங்காரமாகிய மும்படி பட்டியில்
　　சிங்க முத்துத்தம்பி சேருவையும்
இருளப்ப புரம் முருகப்பபிள்ளை நல்ல
　　இசைந்த அம்பலவாணபிள்ளை　　　　340

நிருபன் சுந்தரலிங்கம்பிள்ளை மகன்
　　நிசவான் சுப்பரமணிய பிள்ளை
மணியாச்சித்துரை மன்னருடன் புது
　　மாப்பிள்ளை போலவே வருகையுடன்
கணிசமாகவே புறப்பட்டுத் தனி காங்குரு
　　மால்காட்டிச் சுங்குவிட்டு
காருக்கவுண்டன் கரிக்கவுண்டன் காயங்
　　கட்டும் சிவசங்கு நாடானும்
வீரர்க்குள் வீரனும் முத்துக் கருப்பனும்
　　வீரசூரன் தம்பி மேகவர்ணன்　　　　350

அங்கை மகன் சின்னப் பொம்முடனே நல்ல
　　அஞ்சடையான் குட்டிச் சேருவையும்
மங்கையர்க் கிங்கிதன் பங்காரு நாயக்கன்
　　வாரசிங்காரத்தைப் பாருமையா
மெட்டுக்காரன் வட்டப் பொட்டுக்காரன் பதி
　　னெட்டாம் படியனும் கொட்டாப்புளி
கொட்டுங்குலவை முழக்கிக் கொண்டு வெகு
　　திட்டம் கெட்டிக்காரன் வாரான் பார்
மம்மது தம்பியும் முகமது தம்பியும் மார்க்க
　　முள்ளதம்பி வரிசையுந்தான்　　　　360

தர்மன குணவான் புராமுசாயுபும் தம்பி
　　இசுமாலு ராவுத்தனும்.
சாத்தன் காலாடி யுஞ்சாத்தணனும் மொட்டைச்
　　சங்கரன் காலாடி குட்டையனும்
கூத்தன் காலாடியும் மாடக்குடும்பனும்
　　குடிமகனும் கூனத்தூங்கனுடன்

விருப்பமாய்ப் பள்ளக்கருப்பணன் காலாடி
பிறப்பட்டரின் சின்னக் கோடாலி
பிறப் பெரியானும் பொட்டிப் பகடையும் 370
முத்தன்பகடையும் பொத்தயனும்
தட்டப்பாரைச் சின்ன வக்கையனும் தம்பி
சக்கையனும் பெரிய வக்கையனும்
கோலாகலமாகப் பாஞ்சைப் பதியிலே
கும்பாகக்[21] கூடுதே கம்பளமும்
காலாடி தானொரு சேகரமாய்க் கைக்
காரப்பகடை[22] யொரு புறமாய்
வசந்த காலத்தில் மேக சஞ்சாரம்போல்
வந்து நிறைந்ததே கம்பளமும்
இசைந்த சிங்கங்கள் புயங்கள் கட்டியே
ஏகாந்தமாகவே கம்பளமும் 380
கோலாச் சாரிகளும்[23] செய்தல்லோ சிலர்
கூட்டுச் சாவலுகள் போலே நின்றார்.
வாலுச் சாவலுகள் போலேயல்லோ ஒயில்
வரிசை செய்தாரே கம்பளமும்
கட்டபொம்முதுரை சமூகத்தில் வந்தல்லோ
கண்டு கொண்டாரல்லோ கம்பளமும்
கெட்டி கெட்டி என்று ஊமைத்துரை வெகு
திட்டமாய்ச் சேனையைப் பார்த்தனனும்
வேந்தன் ஊமைத்துரை சந்துட்டியாகவே
வேகங்கொண்டே புயந்தட்டினனும் 390
சேர்ந்து நின்ற சுத்தவீரர்தனைக் கண்டு
தீரன் பிரதானி தான் மகிழ்ந்து
பூலோக பாண்டியன் கட்டபொம்முதுரை
போசன் சமூகத்திலேது சொல்வார்
மாலோனே ஆலோசனைகளென்ன சேனை
வந்ததென்றான் சுப்ரமணிய பிள்ளை
அந்தச் சமாச்சாரம்தான் கேட்டுத் துரை
ஆனந்தமாகவே ஏது சொல்வார்
வந்திடும் சேவகரெல்லார்க்கும் ஒரு
மாதரியாய் வரிசை செய்யு மென்றார் 400
சாகீசன் துரையையும் பேட்டி செய்ய இப்போ
தானே சவாரிகளாகையினால்

தேகியென்று வந்த பேருக் கெல்லாம் தர்மம்
செய்திடக் கர்மம் விலகு மென்றார்
கட்டையனும் சிறு குட்டையனும் பட்டைக்
காட்டுவான் தன்னை வரவழைத்து
இஷ்டமா யாயிரத்தெட்டுப் பொதியிலே
யிப்போ கவுணிகள் வேணு மென்றார்
கோட்டைக்குத் துப்பட்டாக் கொண்டுவரச் சொல்லி
கொற்றவனுத் தரவாகிடவே 410
நாட்டுக் கெவுணி[24] அஞ்நூறு பொதிமன்னர்
கோட்டைக் கெவுணி யெண்ணூறு பொதி
கொண்டு வந்தான் துரையைக் கண்டு நின்றான்
செயங்கொண்டேன் வெகு நயங் கொண்டே னென்றான்
சண்டப்பிரசண்டனும் கட்டபொம்முதுரை
சந்தொட்டி[25] யாகவே யேது சொல்வார்
காயிதம் போட்டவன் சாகிஷன் மேசரைக்
கண்டு போட்டி செய்யப் போறதினால்
ஆயிரம் கம்பளச் சேருவைக்கும் நல்ல
அஞ்ஞாறிள வட்டச் சேவுகர்க்கும் 420
ஒன்றுபோலே சோமன்[26] கட்டுமென்றார்
படைமன்னரெல்லாம் இடை கட்டுமென்றார்
மன்றளந்தானை மனதில் வைத்து ஒயில்
மண்டி வரிசைகள் செய்துகந்து
கெண்டை போட்டலேஞ்சி தொங்கலிட்டு வெகு
கெச்சிதமாய்ச் சிரசில் சுங்கு விட்டு
முண்டாசிக் கட்டுகள் கொண்டைக் கட்டாய்க் கட்டி
முழங்குங் கம்பள மெட்டுகளாய்
வல்லவேட்டுகளுந்தான் போட்டு ஒயில்
மண்டி வரிசைகள் செய்துகந்து 430
மல்லிகை முல்லை இருவாட்சி பிச்சி
வாசம் பொருந்தும் மருக்கொழுந்து
பூ வெடுத்தார் பிச்சிப் பூமுடித்தார் ராச
போசனும் கட்டபொம் மேந்திரதுரை
வாவென்றார் வங்கணச் சேவுகரை ஒரு
மாதிரியாய்ப் பொட்டு போடு மென்றார்
நெற்றியினில் திருநீறணிந்தார் வெகு
நேர்த்தியாய்க் கண்ணாடி பார்த்து கந்தார்

கத்திப்புருவங்கள் போலிருக்கும் கடைக்
கண்ணுக்கு மையிட்டு பன்னீரிட்டு 440

சாந்துபுனுகு சவ்வாதணிந்தார் நல்ல
சந்தணப்பொட்டு விலாசம் வைத்தார்
காந்தியாய் துப்பட்டா மேல்போட்டார் கையில்
கல்கட்டுமோதிரம் தானுமிட்டார்
கண்டி சரப்பளி மோகன மாலைகள்
யெண்டிசை யெங்கும் துலங்கிடவே
சுண்டுவில்லுங் கையில் தானெடுத்தார்
சில சுத்த வீரர் கத்தி தானெடுத்தார்
இந்த விதமாகச் சந்திரர் போலவே
இப்படிச் சிங்காரஞ் செய்திடவே 450

சிந்தை மகிழ்ந்தனர் கட்டபொம்முதுரை
சிவத்தையா ஊமைத்துரையுடனே
போசன் தானுதிபதி சுப்ரமணியபிள்ளை
புண்ணியவான் சிங்கேறு தன்னுடனே
வாசமுள்ள பூசை செய்திடவே மகா
ராசமன்னர்கள் புகழ்ந்திடவே
கெங்கை நதியிலே நீராடி வெகு
கெச்சிதமாகவே சீராடி
மங்களமா யேழு லிங்கம் வைத்து அருள்
தங்கும் சிவபூஜை தான்முடித்து 460

பொங்குமுடன் சங்குதான் முழங்கச்
சிவபூஜை குருபூஜை மால்விளங்க
எங்கும் பிரபலமாகவேதான் பிர
பலமாய்த் தான தருமங்கள் செய்தார்
பூரண சாஸ்திரம்தான் பார்த்தார் தீரன்
போஜன சாலையில்தான் புகுந்தார்
சீரான போஜன சாலையிலே துரை
தேபூசை செய்திட வேணுமென்று
வந்திருந்தார் சுயபந்து சனத்துடன்
வாழையிலை போட்டு நேர்மையுடன் 470

சந்தொட்டியாய்ச்சில தாதியர்கள் கறி
தானும் வைத்துச் சம்பாச் சாதம் வைத்து
சம்பாச் சாதமும் ரொம்ப[27] வைத்தாரதில்
சாதிக் கோழிக்கறி மேலே வைத்தார்

உண்பதற்கேற்ற முயல்கறியும் கது
வாலியறுத்துப் பொரிக் கறியும்
பாலுடன் சர்க்கரை தேனமுது நள
பாகம் பதினெண் வகைக் கறியும்
நாலா வகைப் பலகாரங்களும் மக
இராசனருந்தி மகிழ்ந்தனராம் 480

வந்து படை வீரர் சேவு கரெல்லார்க்கும்
வரிசையாகவே பந்தி வைத்து
சந் தொட்டியாகவே கட்டபொம்மேந்திரன்
தம்பியுஞ் சேனை தளங்களுடன்
சாப்பிட்டு மெள்ளத் தகையாரியவர்
தாம்பூலம் போட்டு இளைப்பாறி
மாப்பிள்ளைமார் போல வீற்றிருந்தார் சிலர்
மாமரத் தோப்பிலே வீற்றிருந்தார்
அப்போது கட்ட பொம்முதுரை பிர
தானி ஆலோசனை ஏது சொல்வார் 490

தப்பாமல் காயிதம் போட்டவன் கும்பினிச்
சாகிசன் மேசரைச் சந்திக்கவே
பயணப் பேரிகை செய்யச் சொல்லித் துரை
பாஞ்சைப் பதியுந்தான் விட்டேகி
தயவுள்ள பிரதானிக்குஞ் சேனைக்குஞ்
சகல பேர்க் கொரு சேதி சொல்லி
கண்ட சனம் நீங்களெங்கே போறீரென்று
கண்டிப்பாய்க் கேட்டவர் தங்களுக்கு
என்குலம் போற்றிய குற்றால நாதரை
இப்போ தெரிசிக்கப் போறோமென்று 500

சொல்லுங்கள் சொல்லுங்களென்று கட்டபொம்மு
துரையுஞ் சொல்லி வழிகூடி
வில்லுங்கையுமாக ஊமைத்துரை தானும்
வேங்கைப் புலி போல நடக்கலுற்றார்
தானாபதிப் பிள்ளை தாட்டிகர்களும் வழி
தானடைந்தார் சுத்த வீரரெல்லாம்
சேனை தானாபதி, கட்ட பொம்மு துரை
சித்தமாயுள்ளதி லன்பு வைத்து
ஆயிமனோன்மணி சக்காதேவி பொம்மு
அம்மனைப் போற்றி வணக்கஞ் செய்தார் 510

தாயே உமையே பரி புரியே சக்க
    தேவியெனைக் காக்க வேணுமம்மா
ஆண்டவளே லோக நாயகியே யென்னை
    ஆதரிக்குஞ் சக்க தேவியம்மா
வேண்டிய வரங்கள் தனைக் கொடுக்கும் எங்கள்
    வீரமல்லு சக்க தேவியம்மா
ஒன்பது கம்பள வீரமல்லு நல்ல உத்தரவு
    சக்கா தேவி சொல்லு
நம்பின பேர்க்கு உதவி செய்வாய் லோக
    நாயகியே சக்கதேவி சொல்லு 520

தஞ்சம் உனை யல்லாலில்லை யடிமா
    தேவதையே சக்க தேவி சொல்லு
அன்புடன் நல்வாக்குச் சொல்ல வேணும் நானும்
    கும்பினியார் பேட்டி செய்ய வேணும்
ஞாய மென்று சொல்லி கும்பினியாரிப்போ
    நம்முட பாஞ்சை நகர் மீதில்
காயிதம் போட்டவன் சாகிஷன் மேசரைக்
    கண்டு பேட்டி செய்யப் போறதினால்
காட்டிக் கொடுக்காதே சக்க தேவி கடைக்
    கொம்பிலே நில்லாதே சக்க தேவி 530

யென்று பணிந்தாரே கட்டபொம்மு துரை
    யெல்லோருங்கை கூப்பித்தான் தொழுதார்
நின்று தொழுதான் பிரதானி, அப்போ
    நிமித்தஞ் சொன்னளே சக்க தேவி
பல்லி நிமித்தம் பல பலென்று சொல்ல
    நல்லது சோசியம் பாரு மென்றார்
வல்லவன் தும்பிச்சி நாயக்கரும் சோசியம்
    மார்க்க மாய்ப் பார்த்து மொழிந்தனராம்.
காரியமாகவே நேர்மையுடன் கெவுளி
    ஒலி பார்த் தங்கே மொழிய லுற்றான் 540

வீரிய மாகவே சொல்லு தென்றான வீர
    பாண்டியனே சொல்லக் கேளுமென்றார்
இந்த நிமித்தம் பலன் சொல்லுதே நாம
    ளிப்போ பயணம் புறப்படவே
சந்தேகமில்லா மல்ச் சாகிஷன் மேசரும்
    சந்திப்புப் பேட்டி கொடுக்க மாட்டார்

சத்தியமாகவே கத்திப் போர் ரெத்தப்போர்
இரத்தக் காடாகுமென் சாமியென்றார்
உத்தமன் இவ்விதம் சொல்லிடவே அப்போ
ஊமைத்துரையுந் துடித்திடவே 550

கையைக் கடித்து உதறினரே ரெண்டு
கண்களும் பொறி பறக்கத்தானே
வையாபுரித் துரையை நினைத்தார் வெகு
ஒய்யாரமாகவே தானெழுந்தார்
தெய்வ உதவி நமக்குமுண்டு சக்க
தேவி கிருபை நமக்குமுண்டும்
செய்வதென்ன பின்னஞ் செய்வதென்ன அண்ணா
சீக்கிரம் பயணமே செய்யுமென்றார்
பிறந்தன்னக்கே இறந்தகாயம்[28] பின்னம்
பின்னே உயிர் வைத்து பார்க்கலாமா 560

கரந்த பாலையுங் காகங் குடியாது
கட்டபொம்மு துரை பேரு சொன்னால்
சத்துராதி[29] நெஞ்சந் திடுக்கிடுமே துஷ்ட
பேய்கள் பயப்படுமே
வெற்றியாகி வரலாகுமென்றார் சுத்த
வீரர்கள் சேரப் புறப்படென்றார்

பேட்டி காணப் பயணம்

காயிதம் போட்டவன் சாகிசன் மேசரைக்
கண்ணாகவே பார்த்திட வேணு மென்றார்
ஆயிரம் பேருஞ் சபாரி யென்றார்ந்தச்
சாகிசர் சமர்த்துகள் பார்போ மென்றார் 570

பட்டத்துக் குதிரைக்குச் சீனிவைத்தார் பரி
வைபோகி மட்டத்திலேற லுற்றார்
மெட்டுள்ள வெள்ளைக் குதிரையின் மேலேறி
கட்டபொம்முதுரை சாரி செய்தார்
திக்கு விசயன் சிவத்தையா முத்தையா
தேசிவைபோகி மேலே நின்றார்
சக்க தேவி துணை யென்று பிரதானியும்
தண்டிகை மீதினிலேறிக் கொண்டார்
பாஞ்சைப்பதிக் கோட்டை விட்டகன்றார்
பெரும் பாதையைக் கூடி நடந்துசென்றார் 580

வாஞ்சை உள்ள துரை மன்னவரும் மகுட
வர்த்தனரும் வழிசென்றனராம்

ஆனைபரிசேனை ஒட்டகையும் அதின்
மேலான பேரிகை தான் முழங்க
மானபரனை கட்டபொம்முதுரை
வாரசிங்காரத்தைப் பார் தோழி [30]
தம்புரு வீணை முழங்கிடவே வெண்
சாமரம் போடத் தமிழ்பாட
கெம்பீரமாய்க் கட்டியங் கூறப்பாரு,
எச்சரிக்கை [31] யென்று சொல்வாரே 590

மங்கையர் மங்களம் பாடிவர வெகு
சிங்கார நாட்டிய மாடிவர
சங்கீத மேளங்களுந் தொனிக்க நாக
தரமும் வாசித்து தான் முழங்க
வல்லையம் நேரிசம் வேல்க்காரர் பந்தி
வரிசை யாகவே சூழ்ந்துவர
உல்லாசமாகவே கம்பளச் சேருவை
யெல்லொருங் கூடிவழி நடக்க
தாழை மடல்களும் பிச்சி யிருவாட்சி
சாந்து சவாது கமகமென 600

பாளையத் தூடே தானும் ஊமைத்துரைவீர
பாண்டியர் வாரதைப் பாருமையா.
சாமி பாருக் கெச்சரிக்கை, யென்றுசொல்ல
சங்கர வட்டக்குடை தானிழற்று
பூமிதனில்ச் சுத்த வீரசூரன்கட்ட
பொம்முதுரை வாருர் பார்தோழி
பாஞ்சால நாட்டுத்துரைமார்கள் நல்ல
பாருவுக் கேற்ற ஒயில்க்காரர்
பூஞ்சிட்டுத் துப்பட்டா மேல் போட்டுஅவர்
போறசிங் காரத்தை பாருமையா 610

நன்னகர் பொன்னகர் குற்றால நாட்டினில்
மன்னன் கட்டபொம்மு வந்தனராம்
சன்னதி வாசலின் முன்பாக அங்கே
சகல பேர்க்கும் முன்பாக.
பக்தியாய் குற்றால நாதர்தெரிசனம்
பார்த்து மகிழ்ந்து தொழுதபின்பு
விஸ்தாரக் கூடாரம் போட்டார்களங்கே
வேடிக்கை யாய்ச்சபை செய்தார்கள்

குத்துக்கால் வெள்ளி விலாசம் பூசும்முகச் 620
சித்திரக் கூடாரம் உல்லாசம்

மெத்தை விரித்து ஒலுகுவைத்து அங்கே
வீற்றிருந்தார் கட்ட பொம்முதுரை

சின்னத்துரை யுஞ்சிவத்தையா முத்தையா
சேருவை காரரனை வோரும்

கர்ணன் தானு பதிப்பிள்ளையுடன்படை
மன்னரெல் லோரும் மகிழ்ந்திடவே

சன்னதி வாசலில் கட்ட பொம்முதுரை
சமர்த்தர் வந்து கொலு விருக்க

இன்னமுங் கதைகள் சொல்லிடவே நீங்கள் 630
எல்லோரும் கேளுங்கள் நல்லோரே

சீமைக் கதிபதியாக வந்த இந்தத்
தேசத்து கலெக்டர் மேசர்துரை

ராமநாதபுரம் விட்டேகி இந்த
நாடெல்லாம் பார்த்து நலமாகி

திருக் குற்றலம் வடபுறம் பாளையஞ்
செய்தாரே கும்பினிக் கூடாரம்

பெருக்க மாகவே சாகிசன் மேசரும்
பேரணி யாகவே சோஷர்களும்[32]

மேசைப் பலகைகள் போட்டுக் கொண்டார் அதில் 640
மேலேயுந் தீனிகளும் வைத்துக் கொண்டார்

பாஷைகள் பேசுற பொட்டிலரும் நல்ல
இராஜக் காரர்கள் மிஸ்டேதரும்

சிப்பாகி மார்கள் சிமேதாரும் வெடி
துப்பாக்கி வெள்ளித் தடிக்காரரும்

தப்பாமல் சேவகர் பாருநிற்க அங்கே
டப்பை எழுபத்திரண்டிருக்க

கல்லு வெடிக்காரர் பில்லாங் குழல்காரர்
கட்டுள்ள பட்டாணி மாவுத் தரும்

சல்லிகட்டி வெடி சூழ்ந்திருக்க துரை 650
சாகிஷன் மேசரும் வீற்றிருக்க

சங்கையுடன் சபை செய்திருக்க அங்கே
ரெங்கப்பன் துப்பாகி கிட்டேநிற்க

பொங்கமுடனந்தச் சாகிஷன் மேசரும்
சிங்கம் போல் வாய்விட்டு தான்முழங்க

பொட்டிலர் முகம் பார்த்துப் பாசை[33] சொல்வான்துரை
எட்டடி வேங்கை போலத் தட்டிடுவான்
சட்டபொம்மு வந்து துஷ்டத்தனங்களைக்
கண்டாயே சிப்பாயி மார்க[34] ளென்றார்
சட்டதிட்டப்படி நடக்கா விட்டால் அவனை
வெட்டிடுவேன் பட்டாக் கத்தியாலே 660

ஞாய மிருக்க நடுவிருக்க எந்த
நாளும் நமக்கு வலுவிருக்க
காயிதா[35] மேலே ஒழுங்கு தப்பிவந்த
கட்டபொம்முதுரை துஷ்டனடா
வாளிருக்க வடி வேலிருக்க இரு
தோளிருக்க கெதி தானிருக்க
எழு அக்குரேணி[36] தளமிருக்க யெந்த
நாளும் பட்டாள மிகவிருக்க
பாஞ்சைக் கதிபதி கட்டபொம்முதுரை
பாளையஞ் சேர்த்துக் கொண்டிங்கு வந்தார் 670

மாய்ந்து போன காலமாகையால் கும்பினி
மாத்தானைப் போலிவர் தோணுதென்றார்.
அத்தரி பாணிச் சோத்மாதரிச் சோநதென்று[37]
அடித்தானே தொப்பியை நாற்காலிமேல்
கர்த்தனருள் பெற்ற சாகிசன் மேசரும்
கமிட்டி மார்க்கங்கள் செய்யலுற்றார்

கட்டபொம்மு சந்திப்புக் கேட்டார்

இந்த விரோதந் தெரியா மலங்கே
என்ன சொல்வார் கட்டபொம்முதுரை
சந்தேகம் இல்லாமல் சாகிசன் மேசரைச்
சந்திப்புக்கேளும் பிரதானி யென்றார் 680

நல்லதென்று சொல்லிப் பிள்ளை மகன்
நாயக்கருத்தரவின் படியாய்
மெல்லவேசாலை வழியில்ச் சென்றார் பாரு
மெட்டுக் கண்டார் திட்டசட்டங் கண்டார்
கோலாகலஞ் சேர்தானபதி கும்பினிக்
கூடார வாசல் வரும்போது
காலனைப் போல் நின்று சிப்பாகியுமங்கே
அவுல்தாரி[38] வேகமா யேது சொல்வான்
அத்தாரி பாணிச் சோமாதரிச் சோலவுண்டி[39]
அடா நீயிங்கே வந்தா யென்றான்

கத்திரிக் காயுண்டு தோட்டத்திலே நானும்
கட்டபொம்மேந்திரன் பிரதானி
வந்த சமாச்சாரம் சாகிஷன் மேசருக்கு
வாசல் சிப்பாகி நீர் சொல்லு மென்றார்
விந்தையாய் தானாபதி யுரைக்க அந்தச்
சணமே சிப்பாகி தானேடி
சாகிசன் மேசரிடத்தில் சென்று அவன்
பாஷையிற் சொல்லியே கிட்டேநிற்க
வாகுள்ள பாஞ்சைப் பிரதானிப் பிள்ளையும்
மார்க்க மாயிங்கே வரட்டு மென்றார் 700

## சந்திப்புக்குச் செல்லுதல்

அந்தச் சமாசாரம் தானாபதிப் பிள்ளை
அறிந்து சிந்தை மகிழ்ந்திடவே
சந்தொட்டியாய் வந்து சாகிசன் மேசரை
சந்திப்புச் செய்து சலாமுஞ் சொல்லி
மார்க்மாய்கும் பினிச் சாகிசன் மேஷரும்
வாவென்று மெள்ளச் சலாமுஞ் சொன்னார்
தீர்க்கமுள்ள பிரதானிப் பிள்ளையவர்
வாக்குமூலச் செய்தி யேதுரைப்பார்
கட்டபொம்முதுரை தம்பியுடன் துரையைக்
கண்டு பேட்டி செய்ய வந்ததினால் 710
சட்டமதாகவே சந்திப்புக் கேட்கவும்
தான் வந்தேன் நான் பிரதானி யென்றார்.
சாகிசன் மேசர் துரை கேட்டு மிகு
வேகமாய்க் கோப மாங் காரமிட்டு
இகீகீ யென்று குறுஞ் சிரிப்பாய் துரை
யிதுவே சந்திப்புச் செய்வதில்லை
நேசமுள்ள திருநெல்வேலி மாநகர்
வந்தால் பேட்டிகள் தாரோ மென்றார்
ஆசராக வந்து சேருமென்று துரை
சாகிசன் மேசர் பயணம் வைத்து 720
நயவஞ்சகமாய்த் தானுரைத்து துரை
நடந்தான் சாலைவழி பார்த்து
செயமுள்ள மட்டமுஞ் சீனிவைத்து அங்கே
சொன்னானே சாகிஷன் மேசர்துரை
நாடெல்லாம் போற்றுந் திருநெல்வேலி சென்று
கூடாரஞ் செய்தங்கே உள்ளிருந்தார்

ஓடிவந்தான் பிரதானிப்பிள்ளை மகன்
உத்தமன் கட்ட பொம்மேந்திரனிடம்
நடந்த செய்தியடங்க ளென்றான் பின்னே
நாமும் பயணச் சவாரி யென்றார் 730

கடுங் கோபங்கொண்டுமே ஊமைத்துரைச்சாமி
கையைக் கடித்தங்கே யேது சொல்வார்
பெண்டுகள் பிள்ளைகள் மேலாசை வைத்தபேர்கள்
பின்னாலே தானே வாராதிருங்கள்.
சண்டை முகிழ்த்தமுஞ் செய்ய வென்றானந்தச்
சாகிஷன் மண்டைக்கு நாச மென்றார்
சிப்பாகி மார்களைச் சோஷர் மேசரை
துண்டஞ் துண்டஞ் செய்ய வேணுமென்றார்.
இப்போதே நாமுஞ் சவாரி யென்றார் துரை
கெற்புலி போல எழுந்து நின்றார் 740

சேனைத் தளத்துடன் கட்ட பொம்முதுரை
திருநெல்வேலி நகர் சேர்ந்தார்
தானாதிபதி அப்போ சாகிஷன் மேசரை
சந்திப்பு கேட்க நடக்கலுற்றார்
கூடார வாசல் போய் நுழைந்தார் தம்பி
குனிந்து மெல்லச் சலாமுஞ் சொன்னார்
நாடெங்குங் கும்பினிச் சாகிசன் மேசரை
நன்மையாய் சந்திப்பு தாருமென்றார்
அந்நேரஞ் சாகிசன் மேசர் துரையங்கே
யென்ன சொல்வான் கலெக்டர்துரை. 750

மன்னனே ஸ்ரீவில்லிபுத்தூரினில் வரச்
சொன்னேனடா பேட்டி அங்கே யென்றார்.

பயணம் பயணம் என்று சொல்லித்துரை
பாதையைக் கூடி நடந்து சென்று
செயஞ் செயஞ் என்று ஸ்ரீவில்லிபுத்தூரில்
சேர்ந்தானே சாகிஷன் மேசர்துரை
கமிட்டி மார்க்கமாய் சொன்ன சமாச்சாரம்
கட்டபொம்முதுரை சமுகமதில்
சமுகந் தன்னிலே வேக மதாகவே
தானாபதிப்பிள்ளை சொல்லிடவே 760

பேரணியாகவே கட்ட பொம்முதுரை
பின்னுடன் சேவுகர் தன்னுடனே

சீரணியாகவே ஸ்ரீவில்லிபுத்தூரில்
சேர்ந்தாரே கட்டபொம் மேந்திரனும்.
சிந்தை கலங்காமல் தானாதிபதிப்பிள்ளை
சொன்னாரே சாகிசன் மேசரிடம்
தந்திரமாகச் சலாமுஞ் சொல்லித் துரையைச்
சந்திப்புக் கேட்டாரே பிள்ளை மகன்
சங்கையாய்ச் சாகிசன் மேசரேது சொல்வார்
சங்கரனார் கோவிலில் பேட்டி யென்றார், 770
இங்கே சரிப்படா தென்று சொன்னார்துரை
அங்கே வாவென்று நடந்து சென்றார்,
சாலை வழியாய் சாகிசன் மேசரும்
சங்கரனார் கோவில் போய்ச் சேர்ந்தார்.
ஆலோசினை யாகத் தானாபதிப்பிள்ளை
அந்நேரம் கட்டபொம்மேந் திரனிடம்
சொல்லி முடிக்கு முன்னே அங்கே
நல்ல தென்று விரைந் தேகிப் பின்னே
வல்லமையாகவே சேனை தளத்துடன்
உல்லாச சங்கரனார் கோவில் 780
சங்கரனார் கோவில் வந்திறங்கித் துரையைச்
சந்திப்புக் கேட்டானே பிள்ளை மகன்,
கங்கை குலாதிபன் தானாபதி கேட்க
கண்டிப்பாய் கலெக்டரேது சொல்வார்
அச்ச மில்லாது திருச்சுழிக்கு வந்தால்
அந்தச் சணம் பேட்டிதாரோ மென்றார்
இச்சணமேவர வேணு மென்றான்; துரை
கெற்சிதமாக நடந்து சென்றார்,
திருச்சுழி நகர் போய்ச் சேர்ந்தானே துரை
தனித்துக் கூடாரஞ் செய்திருந்தான் 790
அரைச்சணந் தருகாமல்த் தானாபதி
அந்நேரங் கட்டபொம்மேந் திரனிடம்
கும்பினிச் செய்தி மொழிந்திடவே கேட்டுக
கம்பளத்தாரும் மகிழ்ந்திடவே
தம்பியுஞ் சேனையுந் தானும் பிரதானியும்
சகலருந் திருச்சுழி சென்று
பூமானெனும் பிரதானிப் பிள்ளையப்போ
போசன் சாகீசன் துரையைக் கண்டு

ராமா ராமா வென்று சலாமுஞ் சொல்லி இங்கே
சேமமாய்ச் சந்திப்புத் தாரு மென்றூர் 800

சந்திப்புக் கேட்கவே பிள்ளை மகனப்போ
சாகிசன் மேசரு மேது சொல்வார்

வந்தாயோ பிள்ளை மகனே யென்றூர் கமுதி
வந்தாலுஞ் சந்திப்புச் தந்தோ மென்றூர்

நிதி பெருகுங் கமுதி நகர்தனிலே அங்கே
நிச்சயமாய்ப் பேட்டி செய்வோ மென்றூர்

பதிலுரைத் தங்கே சாகிசன் மேசரும்
வந்தார் கமுதி நகர் சேர்ந்தார்

விதிவச மென்றுமே பிள்ளை மகனப்போ
அதிக யோசனையாகவே தான் 810

கெதியுள்ள கட்டபொம்மேந்திர துரையிடம்
விதிவசஞ் சொல்லி மொழிந்திடவே

கண்டறிவோ மென்று தானுபதியுடன்
கலந் தளப்புகள் பேசிக் கொண்டு

மண்டலம் புகழுங் கமுதி மார்க்கஞ் சென்று
வந்தாரே கட்டபொம் மேந்திர துரை

முன்னேறித் தானுபதி யோடித் துரை
முன்பாக நின்று சலாம் போட்டு

கும்பினிச் சாகிசன் மேசரே,
சொன்ன சொல்போல் பேட்டி தாரு மென்றூர் 8[illegible]

தன்னிமையாகவே சாகிசன் மேசரைச்
சந்திப்புக் கேட்கவே பிள்ளை மகன்

அந்நேரஞ் சாகிசன் ஏது சொல்வார் தம்பி,
அலங்கா நல்லூரிலே பேட்டி யென்றூன்

தலங்க ளெங்கெங்கும் சுத்தி[40] வந்தோ மென்று
தானு மனஞ் சலிப்பில்லாமல்

அலங்கா நல்லூரில் வாங்களென்று அதி
சீக்கிரம் பேட்டிகள் தாரோ மென்றூர்

குறுவை போட்டு அலங்கா நல்லூரில் தானும்
கூடாரஞ் செய்தான் சாகிசன் துரை

உரமாய்த் தானுபதி யோடி அங்கே
திறமாய்க் கட்ட பொம்மேந் திரரிடம்

அலங்கா னூரிலே பேட்டி யென்று துரை
அந்தாலே[41] போறூன் சவாரி யென்றூன்

இலங்கை போனாலும் கூடத் துயருவேன்
    என்றானே கட்ட பொம்மேந்திர துரை
ஊமத்துரையுடன் சேர்ந்து சனங்களும்
    உச்சிதப் பேச்சுக் கைவீச்சுகளும்
எமனைப் போலவே வேகங்கொண்டு அபி
    ராமத்து மார்க்கம் நடந்து சென்று    840
அஞ்சல் நடையாகக் கட்ட பொம்மு துரை
    அலங்கானூரிலே போய்ச் சேர்ந்தார்.
என் செய்வேன் கர்த்தனே யென்று சொல்லித்தமி
    ழாய்ந்தவன் பிரதானியுந்தான்
சாகிசன் மேஷரைக் கண்டு சலாஞ் சொல்லி
    சந்திப்பு கேழ்க்கவே பிள்ளை மகன்
ஞாயமாயச் சந்திப்புத் தான் கேழ்க்க என்ன
    ஞாயஞ் சொல்வார் கலெக் கட்டர் துரை
நாளைக்குத் தான் நல்லவேளை யென்றார் அங்கே
    ராமநாதபுரம் பேட்டி யென்றார்.    850
பாளையந் தன்னை யெழுப்பிக் கொண்டார் துரை
    பாதையே கூடி நடந்து சென்றார்.
ராமநாதபுரம் போய்ச் சேர்ந்தான் ஒரு
    சாமத்துக்குள்ளே சாகிசனுந்தான்
சேமமாய் மேல்வீடு பார்த்தார் துரை ராம
    லிங்க விலாஸமும் போய்ச் சேர்ந்தார்.
ஆசார வாசலலங்கரித்தார் துரை ராசாங்கம்
    மேல் வீட்டில் செய்திருந்தார்
தேசங்க ளெல்லா மதிகாரஞ் சட்டம்
    செலுத்துஞ் சாகிசன் ஒய்யாரம்    860
காயித வேலை யொரு புறமாம் சமுக
    காரியக்கார ரொரு புறமாம்
ஞாயம் விசாரணை யோர் புறமாம் துரை
    ராசா காணிக்காரர் ஓர் புறமாம்
திங்கள் வதனஞ் சிவந்திருக்கத் துரை
    சிங்கம் போல் சாகிசனங் கிருக்க
ரெங்கப்பன் துப்பாகி கிட்டே நிற்க சங்கர
    லிங்கப்பன் மேல் புறமாயிருக்க
மேசைப் பலகை விலாச மிட்டு அதன்
    மேலேயுந் தினிவைத்துச் செப்பனிட்டு    870

தேசத்து முந்திரிச் சாராய மதில்
செய்திடும் கோதும்பை ரொட்டிகளும்
போதாவாகவே தானும் வைத்துக் காணல்
பூரித்து மெள்ளச் சலாமுஞ் சொல்லி
சாதித் துரையான சாகிசன் மேசரும்
சந்தோட்டியாய்ச் சொந்தம் பாராட்டி
கோட்டைக்குக் சர்னல் ஷிட்டன் துரையுடன்
கூடி அளப்புகள் பேசுவாராம்
நாட்டிலே கோட்டை களென்ன வென்றார்
பாஞ்சை நாட்டை ஒடுக்கிடவேணு மென்றார் 880
கையைக் கடித்து உதறிக் கொண்டார் துரைகள்
காதில் ரகசியம் பேசிக் கொண்டார்
வையகத்தில் துரை கோபமுற்றார் பாஞ்சை
மன்னன் மேலேவர்மம் மனதில் வைத்தார்
கெக கெக கென்று சிரித்துக் கொண்டார் துரை
கீ கீ கீ யென்றங்கே பேசிக் கொண்டார்
சக்கரம் போலே வளைந்திருக்கு மெட்டுத்
திக்குத் திசைகளை திரும்படி
யெட்டடி வேங்கை போல் சீறிடுவார் துரை
பொட்டில்லா முகம் பார்த்துப் பாஷை சொல்வார் 890
கட்டபொம்மு வலுதுஷ்டனடா நாமும்
கண்டிப்புச் செய்யவே மாதரிச்சோத்
தெற்குச் சீமைக்கொரு கட்டபொம்முத் துரை
சின்ன நாவாபு போலிருக்கான்
முக்கியமாகவே கட்டபொம்மு துரை
மூர்க்க முள்ள பிரதானியுந்தான்
ஏகாந்தமாகவே ஊமத்துரை யவர்
யெக்களிப்பா யிங்கே வாறாரே
சாகத் துணிந்தவர் தன்னை மறந்தவர்
சண்டைக்கு வந்தவர் போல்வாறார் 900
சேனை தளங்கள் அநேகமதாய் பிர
தானி முறுக்கு விரோதங்களாய்
ஆனை மேல் பேரிகை தான் முழங்க வெகு
சேனை தளங்கள் படை நெருங்க
கும்பினி ஒழுங்கு தப்பிச் சென்று வலு
கொள்ளைக்காரன் போலவே துள்ளிக் கொண்டு

வம்புக் குறும்புகள் செய்யுகிறார் வலு
மாற்றானைப் போலவரிங்கு வாரார்
கிஸ்திப் பணமுஞ் செலுத்தாமல் துரை
கேள்விக் கெல்லாம் பதில் சொல்லாமல் 910

முஸ்தீப்புச் செய்தவர் போலே யாச் சுகன
மோடிகளாக வரலாச்சு
அத்தரி பாணிச்சோ மாதிரிச் சோதென்
றடித்தானே தொப்பியை நாற்காலி மேல்
மித்திர வஞ்சகம் செய்தாரே கெட்ட
புத்தியால் மோசம் வளர்த்தாரே.
எட்டியா புரங்கொள்ளை யிட்டாரே; யிங்கே
ஏகமாய் வந்தெதிர்த் திட்டாரே
கட்டபொம்மு துரை தன்னைப் பிடித்துமே
காயிதாச் சட்டதிட்டப்படி 920

கால் விலங்கு கைக்குத் தோள் விலங்கு பூட்டிக்
கண்டிப்புச் செய்திட வேணு மென்றார்
பச்சையாய் ரத்தங் குடித்திடுவார் வீர
பாண்டிய கட்டபொம்மேந் திரதுரை
மிச்சமாய் ரத்தங் குடித்திடுவார் தம்பி
மூளை யுருஞ்சுவாரும் துரை
வீரியம் பேசும் ரணசூரன் காவல்
வெள்ளையன் கைவீச்சாய் வாரதைப் பார்
பாருவசம் பண்ணிக்கட்ட பொம்மைச் சென்ன
பட்டிணம் போய்ச் சேறச் செய்யவே னென்றார் 930

துஷ்டத்தனம் செய்யும் கட்டபொம்மை யெந்தன்
துப்பாக்கியால் சுட வேணு மென்றார்.
மெட்டுகளும் ராமலிங்க விலாஸமும்
கெட்டியாய்ப் பாரு நிறுத்தலுற்றார்
கோட்டை வாசல் பாருச் சிப்பாகி நாலு
கொத்தள மெட்டுக்கும் பீரங்கி
நாட்டி வைத்தார் மருந்தூட்டி வைத்தார்;
பாஞ்சை நாட்டுத்துரை மதில் வாமம் வைத்தார்
சொல்லுரை சொல்லும் அவில்தார் சிமையதார்
சோஷர்கள் மேஷர்தனை யழைத்தார் 940

கல்லு வெடிக்காரச் சிப்பாகி அங்கே
கபாத்துலயன் வீதி செய்யு மென்றார்

சோஷர்கள் மேஷர்களாச ரென்றார் சில
சிப்பாகி மார்கள் வரிசை யென்றார்
பாசைகள் சொல்லிக் கபாத் துப்பழக்கவும்
பாருபா ரென்று வெடிமுழக்க
வார்ப் பண்ணிச் சிப்பாயி எல்லோரும் அபின்
வங்கியதைத் தின்று மகிழ்ந்து நின்றார்
சேர்க்கையாய் நின்று முழங்கினரும் ஒயில்
மார்க்க வரிசைகள் செய்தனராம் 950

தம்பூரடித்துலயன் வீதி யெங்கும்
கெம்பீரமாகவே கும்பினியார்
வம்பு வரு மென்று சாகிசன் மேஷரும்
தென்பு ஆலோசினையா யிருந்தார்.
இந்த விரோதங்கள் தானினைத்துத் துரை
எக்களிப்பாக யிருக் கையிலே
பந்தியாய்ச் சேனைத் தளத்துடனே வீர
பாண்டிய கட்ட பொம்மேந் திரதுரை
அலங்கா நல்லூர் விட்டேகி நல்ல
தாகட்டு மென்று வழிநடந்தார். 960

பல விதமான யோசனையாகவே
பாதையைக் கூடியே வேகமதாய்
அஞ்சல் நடையாகப் பாஞ்சைப் பதித்துரை
அஞ்சாத வேங்கைப் புலி போலே
மஞ்சுலவுஞ் சோலை ராமநாதபுரம்
வந்து சேர்ந்தான் கட்டபொம்முதுரை.
ஓட்டம் நடையுமாய்ச் சேனை தளம் ஒரு
நாழிகையில் ராமநாதபுரம்
கோட்டைக்குத் தென்புறமாகவே தானொரு
கூடாரஞ் செய்து கொலு விருந்தார். 970

விஸ்தார பேல்கட்டில் முத்திலங்கப் பஞ்சு
மெத்தை மேல் திண்டுகள் தான்துலங்க
உத்தமன் கட்டபொம்மேந்திர துரைஏதி
சித்தன் சிவத்தையா ஊமத்துரை
சிங்காரமாகக் கொலுவிருக்க அங்கே
சேவுக ரெல்லோருஞ் சூழ்ந்திருக்க
கங்கை குலாதிபன் பிள்ளைமகன் சித்திரக்
கம்பளிச் மேல்ச் சபை செய்திருக்க

நாட்டியமாட ஒயிலாட நல்ல
நங்கையர் மங்களம் பாடிவர 980

நாட்டுக் கதிபனும் பாஞ்சைப்பதித்துரை
ராசரென்று கட்டியங் கூறும்

காவல்காரன் மகன் வெள்ளையன் சிங்கேறு
சேவல் கட்டி விளையாடுவானும்

சேவல் எடுத்துப் பறவை விட்டு வெள்ளைச்
சாவலைக் கட்டிக் குதிபோட்டு

சொக்கட்டான் சாரிகள்தான் பரப்பிக் காயைக்
முற்கட்டும் பிற்கட்டுமாய் நிரப்பி

கல்கெட்டு மோதிரம் தான்துலங்கக் கையில்
கயிறு சாருகத்தான் துலங்க 990

எட்டுப் பகடையும் பன்னிரண்டு மென்று
சொல்லிக் கயிறுதான் போட்டு

கட்ட பொம்மேந்திரன் தனுபதி சொல்லக்
கட்டான காயும் விழுந்திடவே

இப்படியாக யிருக்கிற வேளையில்
ஏறிட்டுப் பார்த்தாரே சாகீசரும்

செப்பமாய் மேல்வீடு தானிருந்து மெள்ளத்
திரும்பிப் பார்த்தான் சாகீசன் துரை

கட்டபொம்முதுரை சேனை தளத்தையும்
கண்ணாலே பார்த்துத் துரையுஞ் சொல்வார் 1000

எட்டாத கொம்பிலிருக்கின்ற தேனென்று
எண்ணுகிறான் பல யோசனைகள்

கையையும் வாயில் வைத்துக் கடித்துத் தொப்பி
கழத்தி[42] நாற்காலி மேலடித்தான்

ஒய்யாரமாய் வந்தகட்ட பொம்மு தன்னை
ஒழுங்குப் படியுமே செய்யா விட்டால்

தீனிகளுந் தின்கிறதில்லை யென்றான் சற்றும்
சென்னி கவிழ்ந்து படுக்கே[43] னென்றான்

பானஞ் சபாரியு மாட்டே னென்றார்பல
கார ரொட்டி தின்கமாட்டே னென்றான் 1010

சத்துருப் போல்வந்தார் கட்டபொம்மு அவர்
சமர்த்துப் பார்த்திட வேணு மென்றார்

பத்திரமாய்ப் பாரு நில்லு, சிப்பாகியே
அத்தரி பாணிச்சோ மாதரிச்சோத்

மேசைப் பலகை மேலிருக்கலாமோ? அதின்
மேலேயுந் தீன்வைத்துத் தின்னலாமோ?
தேச தேசாந்திர மாண்டு இந்தச்
சீமைக் கலக்கட்ட ராகலாமா?
கருதுப் பலகை மேலிருக்கலாமா? ஒயில்
காலிலே பாப்பாசும் மாட்டலாமா 1020
குதிரை மேல் சீனியும் வைக்கலாமா பாச்சல்கள்
கொண்டு சவாரி நடத்தலாமா
சாரட்டுப் போட்டு நடத்தலாமா அசல்
சாதி வெள்ளைக்கார ராகலாமா
கோர்ட்டார் போர்ட்டார் இங்லீசுக் கொடி
கும்பினி ஞாயம்போல் செய்வேனென்று
அந்தச் சணமேதான் சாகிசன் மேசரும்
அச்சடிக் காயிதம் தானெடுத்து
விந்தையாய் வக்கணை தானும் வைத்து வரி
விரைந் தெழுதினன் காயிதமும் 1030
சேனைத் தளங்களும் வாராமல் மற்றைச்
சேவுக ரெல்லோரும் வாராமல்
தானுபதியுடன் தானுந்தான் தம்பியும்
சாக்கிரதையாக மூன்று பேரும்
வந்தால் பேட்டிகள் செய்வோமொன்று வெகு
சந்தோட்டியா இங்கே வாங்களென்று
தந்திரமாய் முகர்தானும் வைத்தான் அமுல்
தாரிடத்தில் கொடுத்தே துரைப்பான்.
தீர்க்கமாய்க்கட்ட பொம்மேந் திரனிடஞ் சென்று
சீக்கிரம் கூட்டிவா வென்றுரைதான். 1040
மூர்க்கவான் கும்பினிச் சாகிசன் மேஷரும்
தாக்கீதை அமுதார்க்குச் சொல்ல
காயிதம் வாங்கி அமுல்தாரு மங்கே
கட்டபொம்மேந்திரன் சமுக மதில்
போய்நின்று காயிதம் தான் கொடுத்துக்கட்ட
பொம்மு துரையே புறப்படென்றான்
தாக்கீதாய் வந்த காயிதச் செய்தியை
தானறிந்த பிரதானிப் பிள்ளை
சாகிசன் மேசரும் செய் வஞ்சகமித்திரம்
மோசங்க ளெல்லாந் தெரிந்து தென்றார் 1050

அந்நேரம் கட்டபொம் மேந்திரதுரை ரொம்ப
ஆலோசினைகளுஞ் செய்தனராம்
என்னென்ன காரியமாச்சுதென்று அங்கே
எண்ணுகிறார் பல யோசினைகள்
ஊமத்துரையும் வெடு வெடென்று அண்ணு
உத்த சமாச்சாரம் சொல்லு மென்றார்
நேர்மையுடன் பிரதானிகைச் சன்னைகள்
ஊமத்துரைக்கு நிச முரைத்தார்
ஆனாலும் ஊமத்துரை தானுமப் போ
அதிகக் கோபங் கொண்டேது சொல்வார் 1060

அச்சடிக் காயிதங் கொண்டு வந்த பையன்
யாரடா சேவுகா சிப்பாகி
இச்சணம் பேட்டிகள் காண்பதற்கு நாங்கள்
எல்லோருமாக வருவோமடா
எல்லோருமாக வருவோமடா இல்லையானல்
வருவது மில்லையடா
பொல்லாங்கு வந்தால் வரட்டுமடா உங்கள்
பொல்லாங்குக்கோ பயமில்லையடா,
வாரதில்லை யென்று சொல்லு போடா அந்த
மாலுட்டக்காரன் சாகீசனிடம் 1070

காரிய மென்னகவை யென்னடா நானுங்
கட்டபொம்முதுரை தம்பியடா
வெத்தியுள்ள ஊமைத்துரையுமடா எந்தன்
புத்தியைக் கேளடா சிப்பாகி
புத்தியில்லாதவன் சாகிசன் மேசரைக்
கத்தியால் வெட்டிப் பிளந்திடுவேன்.
இத்துனை தூரம் வரவழைத்து இப்போ
சத்துரு மோசங்கள் செய்தானே,
ரத்தங் குபீரென்றெழும் பிடவே அவனைக்
கத்தியால் வெட்டிப் பிளந்திடுவேன், 1080

பல்லைக் கடித்துப் படபடென்று சொல்ல
நல்லதென்று அமுல்தார் முடுகி
சில்லரை செய்யாதே பாகி யென்றான் உங்கள்
வல்லமையெங்கள் முன்னில்லா தென்றான்.
கோபங்களாக உரைத்து அமுல்தாரும்
கோட்டையை நோக்கி நடக்க லுற்றான்.

காவல்காரன் மகன் வெள்ளையனுங்கையா
லோங்கினான் பூண்கட்டிக் கம்பாலே

கொட்டுக் கொட்டென்றுமே பொட்டிப் பகடையும்
கொல்வே னென்றான் தடிக் கம்பாலே 1090

சட்டுச் சட்டென்று சிலம்பு வரிசையில்
வட்ட மிட்டாடினான் பாதர் வெள்ளை

அப்போத முல்தாரு மெப்படி யென்றுடம்
பாடினான் ஓடினான் மெய் பதறி

சிப்பாகி அமுல்தார் கடு நடையாகத்
திரும்பித் திரும்பிப் பார்த்தோடு வானும்

சாகீசன் மேசரைக் கண்டு சலாஞ் சொல்லி
சன்னை சொல்லிப் பாசையென்ன சொல்வான்

காயிதந்தன்னைக் கொடுத்ததுவும் அங்கே
கட்ட பொம்மேந்திரன் மொழிந்ததுவும் 1100

துஷ்டத் தனஞ் செய்யும் சுட்டி ஊமைத்துரை
துடித்துப் பல்லைக் கடித்ததுவும்

பட்டினத்துப் பொலியெருது போலவே
பொட்டிப் பகடையுங் கம்பாலே

அடிக்க வந்தானே, பாதரு வெள்ளையன்
இடிக்க வந்தானே, கம்பாலே

நொடிக்குள்ளே தப்பி வந்தே னென்றான்
அவர் நோக்கமும் வேறேயிருக்கு தென்றான்

சந்திப்புச் செய்யவும் வாரதில்லை யென்றார்
சனப் பெருக்கமாய் வாறே னென்றார். 1110

மந்திரி தானபதிப் பிள்ளையும் வ.........
னிந்தச் சமாச்சாரந் தானுரைத்தார்

என்று சொன்னானே அமுல்தாருமப்போ,
யென்ன சொல்வான் துரைசாகீசரும்

நன்றா யிருந்தது பார்த்தீர்களோ, ஞாலம்
நாமணிந்தச் சீமையாண்ட தெல்லாம்

வம்பருக் கேத்த காலமாச்சு, இந்தக்
கம்பளத் தார்க்குக் குறும்பாச்சு,

கும்பினியா ரான்றறியாமலிங்கே
குறும்பு செய்கிறார் கம்பளத்தார் 1120

சிந்தை மகிழ்ந்திடக் கோபாலையனை
சீக்கிரமாயழைத்தே துரைப்பான்

கட்ட பொம்முதுரை ஊமையன் தன்னையும்
கங்கை குலப்பிள்ளை மகனையுந்தான்

இஷ்டமாய்க் கூட்டிவா வேதியனே இங்கே
ஏகமாய்ச் சேவுகர் வாராமல்

மூன்று பேர் தன்னையுங் கூட்டிவந்தால் நீ
ஆண்டு கொள்ள பூமி நான் விடுப்பேன்

வேண்டுந் திரவியம் தான் தருவேன் பாகி
மேன்மையாய் உத்யோகம் நான் கொடுப்பேன் 1130

கூட்டிவா கம்பளத்தானே யிங்கே யென்று
கூறினனே துரை வீரியமாய்

தாஷ்டீகன் உத்தரவாகிடவே அந்தச்
சணமே அய்யருமேகிடவே

கட்ட பொம்முதுரை சமூகத்தில் சென்று
கண்டு கொண்டு ஆசிர்வாத மென்று

அட்டாவ தானியைப் போலே கோபாலையன்
மெட்டுகளாகச் சதுரிலே தான்

புண்ணியவான் அய்யர் வந்திருக்கக் கட்ட
பொம்மு துரையும் பணிந்திருக்க 1140

தன்னவனு மிந்தக் கோபாலையனென்று
மன்னன் தானுபதி தெண்டனிட்டார்

ஊமைத்துரையுமே தெண்டனிட்டார் எனக்
குற்ற செய்தி சொல்ல வேணு மென்றார்

சாமி கோபாலையர் அப்போது கைச்
சன்னைகள் போட்டென்ன சொல்லலுற்றார்

மின்னல் பறக்குதே கோட்டைக் குள்ளே வஞ்ச
வினைகள் செய்கிறான் கோட்டைக் குள்ளே

மூலைக்கு மூலை, கொத்தாளத்திலே வெகு
மூர்க்கமாய் பீரங்கி வைத்திருக்கான் 1150

காலனைப் போலவே சாகீசன் மேசரும்
ஆலோசினையாகத் தானிருக்கான்

சிப்பாகி மார்களுந் துப்பாகி சகிதமாய்
எப் போதுங்க பாத்துப் பழக்குகிறான்

தப்பிப் பிழைக்கவே யோசனை களிப்போ
தனித் தளப்புகள் செய்யு மென்றார்

உத்த சமாச்சாரம் கோபாலையன் வெகு
உண்மையாய்ச் சொல்லி உரைத்தலுற்றான்

முத்தணி மார்பனுங் கட்ட பொம்முதுரை
சித்த மகிழ்ந்தங்கே யேது சொல்வார் 1160

தானுபதி யுடனுன் வாரேனென்று சொல்லிச்
சாகிசன் மேசருக்கு சொல்லு மென்றான்

மேனாடு காவலாள் இதோ வாருரென்று
வீரியமாய்த் துரைக்குச் சொல்லு மென்றான்

சந்தேக மில்லாமலந்தக் கோபாலையன்
சாகிசன் மேசரும் சமுகஞ் சென்று

சொந்தமாகச் செய்தி சொல்லு வாராந்துரை
சந்தொட்டி யென்று மகிழ்ந்தனராம்,

மெய்யென்று கும்பினிச் சாகிசன் மேசரும்
ஒய்யாரமாக யிருந்தனராம், 1170

அய்யர் போன பின்பு கட்ட பொம்மு துரை
மெய்யெல்லாம் வெம்பினது நொந்து.

வம்புகளாக வர வழைத்தான் துரை
மன்னனே சந்திப்புச் செய்யாமல்

பாஞ்சைப் பதி நோக்கிப் போவோ மென்றால் டப்பைப்
பாளையக்காரர்கள் சிரிப்பார்கள்

சாஞ்சு வந்தா னென்று எட்டையா புரத்தானும்
சற்றுங் கெணியாமல் சொல்வானே

இத்தனை தூரங்கள் வந்து விட்டுப் போனல்
மெத்த இழப்புகளாகுமென்று 1180

சற்றும் தருகாமல் கட்ட பொம்மனுயிர்
வைத்திரேன் வைத்திரே னென்றுரைத்தார்.

வினை முகத்துக்கு மஞ்சாத ஊமையன்
சினந்து வேகமாய் ஏது சொல்வான்

பனை மரத்திலே யேறலாமா யேறிப்
பாளை தொடாம விறங்கலாமா

வந்தது வந்தோமே யிந்த மட்டும் இனி
பிந்தி ஆலோசினை செய்யலாமா

யிந்தச் சாகிசன் துரையைக் கண்டு நாமள்
சந்திப்புச் செய்யாமல் போகலாமா 1190

சங்கு சுட்டாலும் நிறம் போமா பசுந்
தங்கங் கெட்டால் நிறந்தான் குன்றுமோ

சிங்கத்தின் முன்னே நரி யெதிரோ துரைச்
சிங்கம் நரிக்குப் பயப் படுமோ

ஆயிமனேன் மணி சக்க தேவி பொம்மு
அம்மன் கிருபையருளாலே
காயிதம் போட்டவன் சாகீசன் மேசரை
கண்டு பேட்டி செய்ய வேணு மென்றார்
சந்திப்புத் தந்தாக்கால் பேட்டி செய்வோம்
அல்லால் சற்றே ஒரு கைதான் பார்ப்போமென்றார் 1200

எந்தன் சமர்த்தும் அவன் சமர்த்தும் இப்போ
பந்தயம் கை வைத்து பார்ப்போ மென்றார்
பாஞ்சைப் பதிக் கொரு வேங்கைப் புலி நானும்
பாளையங் கோட்டை மதப்புலி தான்
காஞ்சபால் ரொம்ப கசக்கு தென்றார் ரத்தங்
கண்டால் மனத் திடமாகு மென்றார்
மானபிமான பரனை துரை மன்னன்
கட்ட பொம்மு தம்பி யென்பேர்
ஆனாலு மாகுது போனாலு போகுது
அடிக்கிறேன் பாரொரு தம்மாசு 1210

வெற்றிப் போர் செய்து வெகுநாளாகுது
இனிக் கத்திப்போர் செய்துதான் பார்ப்போ மென்றார்
இப்போதே கோட்டைக்குள் போவோ மென்றானங்கே
மல்ப் போராகப் பேட்டி செய்வோ மென்றார்
தாராளமாகவே கம்பளத்தார் இப்போ
பாருபா ரென்றங்கே தானடந்தார்
பாருச் சிப்பாகியைத் தள்ளி விட்டாரங்கே
பரிந்து கோட்டைக்குள் நுழைந்தார்
உள்ளாயுதங்கள் பளபளெனப் பாதர்
வெள்ளையன் போறதைப் பாருமையா 1220

துள்ளித் துள்ளி லயன் வீதி சென்று அங்கே
தொங்கலில் போறார் சிங்கேறுகள்
கோணவாசல் மெட்டுத் தான் கடந்து வெகு
கோலகலமாக முன்னடந்து
தானையமாகவே கோணவாசல் மெட்டில்
ராணுவத்தார்களே நில்லு மென்று
ராமலிங்க விலாஸம் சேர்ந்தார் துரை
நாலணியாய்ச் சனம் மேல் புறமாய்
ஊமைத்துரையுடன் சேர்ந்த கைக்காரரும்
உள்வாச லோரணியாக நின்றார் 1230

காரிக்காரர் காணிக்கரை ஒயில்
    கம்பளச் சேருவைக் காரரையும்
மாறியடித்தானே பாருக்காரன் அந்த
    வாசலுக்கப்புறம் போகாமல்
மேல் வீடு மெத்தை வீட்டோரத்திலே காவல்
    வெள்ளையத் தேவனைத் தான் தானிறுத்தி
சேவுக வீரரைத் தான் பார்த்து ஒரு
    செய்தி சொல்வார் கட்டபொம்மு துரை
எச்சரிக்கையாக நிற்பீ ரென்றார் நம்மோ
    டெதிர்த்த பேரை மடக்கு மென்றார் 1240
அச்சமில்லாமலே நிற்க வேணும் கை
    மிச்சமாய் வேட்டை களாடவேணும்
சீக்கிரமாய் யொன்று கூடவேணும் செக
    சாலஞ் செய்து வெளியேற வேணும்
யென்றல்லோ உத்தரவு கொடுத்து அங்கே
    சென்றாரே கட்டபொம்மு துரையும்
நன்றாகப் பேட்டிகள் செய்வோ மென்று அங்கே
    தென்றற் காற்று போலவே வீசிக் கொண்டு
கட்டபொம்முதுரை தானுபதியுடன்
    திட்டமாய்ச் சாகீசன் துரையைக் கண்டு 1250
கண்டு சலாஞ் சொல்லிக் கொண்டார்க ளங்கே
    நின்று ஆலோசனை செய்தார்கள்
வண்டத்தனமாகச் சாகிசன் மேசரும்
    திண்டு முண்டாகத் தலை கவிழ்ந்து
வாயில் விரலை வைத்துக் கடித்துத் துரை
    சாகிசன் மேசர் துடிதுடித்து
காயிதம் பார்க்க கடுகடுப்பான் துரை
    ராய சக்காரைப் பார்த்துரைப்பான்
கர்னலை கூப்பிடு சிப்பாகி அரே
    யென்னடா ரெங்கப்பன் துப்பாகி 1260
மன்னன் கட்டபொம்மு வந்திருக்கானவனை
    மடிப்பிடியுமாக பிடியு மென்றான்
வெளியே போக விடாதே யென்றான் இந்த
    மேல் வீட்டுக் கதவைச் சாத்து மென்றான்
வழியை மறித்துப் பிடியு மென்றானிருகை
    மட்டும் விலங்கு யெடுங்களென்றான்

சாகிசன் சொல்லுஞ் சமாச்சாரமது
 சாடை அறிந்தானே பிள்ளை மகன்
ஓகோயி தென்ன கொடுமை யென்றான் இப்போ
 ஆகாத பேச்சுப் பிறக்கு தென்றான் 1270

புன்ன விதியாய் யிருக்கு தய்யோ துரைகள்
 சன்னைகள் செய்கிறான் மோச மய்யோ
சின்னத் தனமாயிருக்கு தய்யோ நாமுஞ்
 செய்யுஞ் சமர்த்து களெப்படியோ
தன்னிமையாக[44] வரவுஞ் சொல்லி யிந்தச்
 சற்பினை செய்தானே சாகிசனும்
அன்னியாயமாக யிருக்கு தய்யோ யிங்கே
 யின்னமும் நிற்கக் கூடாதே யென்றான்
அந்த சமாச்சாரங் கட்டபொம்மு கேட்டு
 யிந்தச் சணம் வெளியேறென்று 1280

எந்த விதம் வெளியேறுவது நாமும்
 சந்திப்புக்கு வந்த நேரமது
பொல்லாங்கு மெத்தவே வந்த தென்றார் கட்ட
 பொம்மு துரையும் மனது நொந்தார்
அல்லல் வரு மென்று கோபாலையருங்
 கண்ணால் சிமிட்டியே போகு மென்றார்
வேகமாய் கட்ட பொம்மேந்திர துரை மேல்
 வீடு விட்டு வெளியேறி நின்றார்
போகாதே யென்று சாகிசன் மேசர் கட்ட
 பொம்மு மடிபிடித்தே யிழுத்தான் 1290

அப்போது கட்டபொம்மேந்திர துரையுமே
 ஆலகால விடம் போலச் சினந்து
டப்பை யெழுபத்தி ரெண்டு துரைகளும்
 கட்டபொம்மு முந்தி தொட்டதில்லை
இப்போது கும்பினிச் சட்டதிட்டப்படி
 யென் முந்தி பற்றியே தொட்டிழுத்தாய்
தப்பிதஞ் செய்யாதே சாகிசன் மேசரே யிங்கு
 சல்லியம் பண்ணாதே விட்டி டென்றார்
முந்தியைப் பற்றி இழுக்காதே பாவி
 மோசங்கள் வந்து சேரு மென்றார் 1300

சந்திப்புச் செய்யவும் வந்ததற்கு யெனக்
 கிந்த மரியாதை போது மென்றார்

இருபேரு மல்லுக் கட்டாகக் கீழே
யிறரங்கினுர் சரி மெட்டாக
வெறி வந்தால்ப் போல் குரவையிட்டான்
காவல் வெள்ளையன் பாதர் விலக்கி விட்டான்
குலவைச் சத்தங்களானவுடன் ரெம்பக்
கூக்குரல் போட்டாரே ஊமத்துரை
வலது விசை படபடென்ன அவர்
வல்லையக் கம்பு கிடுகிடென்ன 1310

கடகரிகள் திடுக்கிடவே யம
காலனென்னவே வரும் போது
அடமிகுத் திடப் பொல்லாங்கு வருமென்
றமர்த்தினுர் கட்டபொம்மு துரை
கொணவாசல் மெட்டுந்தான் கடந்து பாதை
கூடி ஆசார முகப்பில் வந்து
வீணை பொல்லாங்கு வந்து தென்று லயன்
வீதி வழி போனுர் வேகங் கொண்டு
காவல்காரன் மகன் வெள்ளையனும் பூண்
கட்டியகம்பு தயாராக 1320

கோபங்களாகவே பொட்டிப் பகடையும்
குறட் கம்பு தயாராக
வெத்தி வெத்தி[46] யென்று முத்தன் பகடையும்
வெத்திச் சங்கு வாயில் வைத்தூத
கத்தி வீசிக் கொண்டு சுத்த வீரருடன்
கட்ட பொம்மு துரை போனுர் பார்.
அப்போது சாகிஷன் மேசருக் கல்லோ அங்கே
எப்படிக் கோபங்களாகு தங்கே
தப்பிதஞ் செய்தாரே கட்ட பொம்மு இப்போ
சமர்த்துச் செய்துமே போறுர் காண் 1330

வம்புகளாகவே கம்பளத்தார் நமது
மரிசல் மீறித்துக் கிரதமாய்
சம்ருதாயஞ் செய்து போறுரே
கும்பினியார் பகை செய்தாரே
கிஸ்திப் பணமும் செலுத்தாமல் நமது
கேள்விக் கெல்லாம் பதில் சொல்லாமல்
அத்தரி பாணிச் சோ மாதரிசோலவுண்டி
அன்றுலே போறுனே கட்டபொம்மு

காவல்க் காரர்வலு கொள்ளைக்காரர் நமது
காயிதாத்தப்பியே போருயே 1340

உல்லாச மாகவே போருனே நமது
உத்தரவு தப்பிப் போருனே காண்

கட்ட பொம்மு துஷ்ட்டன் போகலாமா நாமுங்
கண்ணுலே பார்த்து மிருக்கலாமா?

மெட்டுள்ள கோட்டைகள் தான் பிடித்தோம்
சாதி வெள்ளைக்கார னென்று பேரெடுத்தோம்

வங்காளம் கொங்கு மலையாளம் கொச்சி
மக்க தேசம் :வயிருவி தேசம்.

யெங் கெங்கும் சீமைகள் தான் பிடித்தோம்
நாமு மிங்கிலீசுக் கொடி நாட்டி விட்டோம். 1350

பார்த்தா லித்தினிப் பாளையக்காரண்டா
பாஞ்சைப் பதித்துரை மன்னனடா

மாத்தான் போறதைப் பார்த்தீர்களோ? கோட்டை
வாசல் கதவை அடைந்தீர்களோ?

வாசல் கதவை அடையு மென்ருன், வலு
மோசக் காரனைப் பிடியும் மென்ருன்.

பாசைகள் சொல்லச் சாகிசன் துரையங்கே
பாருபா ரென்ருனே அஷ்டன்[48] துரை

மேல்வீடு விட்டு வெளியேறிலயன்
வீதி வழி சென்று முன்னே 1360

கேள்வி அஷ்டன் துரை குதித்துக் கோட்டை
கிழக்கு வாசல் கதவடைத்தான்

கும்பினிப் பட்டாளஞ் சூழ்ந்து வளைந்தங்கே
கம்பளத்தாரை மறித்திடவே

கம்பளத்தாரை மறித்துக் கொண்டார் அரே
கட்ட பொம்மு துரை நில்லு மென்ருன்

வாகான கும்பினி மெட்டாகச் சுத்தி
வளைந்துதே கோட்டைக் கட்டாக

போகாதே போகாதே கட்ட பொம்மு வலுப்
பொல்லாங்கு செய்யாதே கட்ட பொம்மு 1370

என்று அஷ்டன் துரை அங்கே நின்றல்லோ
கம்பளத்தார் திகைக்க

கட்ட பொம்மு கையைத் தான் பிடித்தான் துரை
மெட்டுக் கடக்காதே பாவி யென்ருன்

### ஜாக்சன் பேச்சு

மட்டுக் கடந்து நீ போனு கால் குட்டை
மாட்டு வேனிப் போது தப்பாமல்
காயிதாத் தப்பியே போனுக்கால் உந்தன்
காலுக்கு துட்டு விலங் கடிப்பேன்

### சிப்பாய்கள் பேச்சு

ஞாயம் விசாரணை செய்திடவே உன்னைச்
சாகிசன் மேஷர் வரவுஞ் சொன்னுர் 1380
நல்ல மனதாய்த் திரும்புமென்றுர் ரெம்பப்
பொல்லாங்கு செய்யாதே பாகியென்றுன்
வல்லமையாக அஷ்டன் துரை சொல்லி
மல்லுகட்டாக வேதானிழுத்தான்

### கட்டபொம்மு செயல்

அன்னேரங் கட்டபொம்மேந்துரைக் கல்லோ
அதிக கோபங்கள் மீறுதங்கே
யின்னேரமங்கே வரமாட்டேன் என்னை
விட்டி டென்றுன் கையை விட்டி டென்றுன்
இப்படியாக யிரு பேரு மங்கே
கைப்பிடிமல் பிடியாகவே தான் 1390
சற்பினையாகவே சண்டை நடக்குதே
சல்லியமாகுதே யென்ன சொல்வேன்,
பிடி பிடி யென்ற அஷ்டன் துரைகட்ட
பொம்மு மடியிலே கை போட்டான்
மடிப்பிடியாகவே தானிழுக்க அப்போ
மன்னன் கட்ட பொம்மு தானிழுக்க
சந்திலயன் வீதி தூள்க்கிளம்ப இப்போ
சண்டை வருங்கையை விட்டிடென்றுன். 1400
முந்தியைப் பத்தியிழுக்காதே பாவி,
மோசங்கள் வந்து லபிக்கு மென்றுர்.
என்ன மோசமடா சொல்லு சொல்லென்றுமே
மன்னன் அஷ்டன் துரையிழுக்க
கன்னி சக்காதேவி வீர மல்லென்றுமே
கட்ட பொம்முகுலவை யிட்டானே

அல்லல் வந்ததென்று ஊமைத்துரை தானும்
வல்லயங்[47] கையிலெடுத்தான் காண்.
கில்லிலி யென்று குலவை யிட்டுத் தம்பி
பல்லைக் கடித்தங்கே யேது சொல்வார்
காகம் பறக்காதே கட்ட பொம்மு வென்றால்
கரிக் குருவியும் லாந்தாதே 1410

யேகமாய்ப் பட்டானந்தான் திரண்டிளங்கே
மேகம் போல்ச் சுத்தி வளைந்து கொண்டு
வாய் பேசா ஊமைத்துரை வீர பாண்டிய
மன்னனுக்கே கோப மீறிடவே
ஆவேசம் வந்தாப் போல் ஊமைத்துரை வெகு
கோபங் காரமாயேது சொல்வார்
பிறந்தன்றைக்கே யிறந்த காயமிது
பின்னே உயிர் வைத்துப் பார்க்கலாமா
கறந்த பாலையுங் காகங் குடியாது
கட்ட பொம்முதுரை பேரு சொன்னால்
வேப் பெண்ணையுந்தான் பாலாகிடுமே நமது 1420

காப்புக் கம்பளங்கள் பேரு சொன்னால்
தீப்பறக்கும் பாரென்று சொல்லி ஒரு
ஏப்ப மிட்டாரே ஊமத்துரை
தண்டு வாரமுண்டான் நமது தமையனைக்
கண்டார் சிரிக்கவும் நாளாச்சு
வண்டத் தனமாகச் சோசர் வெள்ளைக்காரன்
மடி பிடித்தே யிழுக்குறான்
மானமழிய உயிர் காவலென்னடா
நானும் ஊமைத்துரைப் பாண்டியன்டா 1430

ஆனாலுமாகுது போனாலும் போகுது
அடிக்கிறேன் பாரொருதம்மாசு
புத்தியெடுத்துக் கைவீசிக் கொண்டான்முதல்
சக்தி பூசைக்கென்று பேசிக்கொண்டான்

சண்டை முதிர்ந்தது

அழகுயீட்டியைக் குலுக்கினானே கர்னல்
அஷ்டனைக் குத்திமலத்தினானே
தலைகுப்புற அஷ்டன் விழுகவே[48]
குலவையிட்டானே பாதர் வெள்ளை 1440

பாதரு வெள்ளையன் தூதரைப் போலவே
பரந்தடிப் பதைப் பாருமையா

வாதக் காலச்சிப்பாகி பட்டானே வெடி
வார்க்கார சிப்பாகி கெட்டானே

துப்பாகி போட்டு மடிந்தானே கன
சிப்பாகி மார்களிறந்தாரே,

அப்பாடா அப்பாடா கொல்கிருனேயென்று
முப்பது பேரங்கே பாடாச்சு [49]

பாதிப் பட்டாள மழிந்திடவே லயன்
வீதிப் பட்டாள முறிந்திடவே

துரை ஒருத்தனும் பாடாச்சு அரெ
கிரண்டப் பட்டாளம் வேறுச்சு 1450

கரையேறு மென்றுகம்பளத்தார் கோட்டைக்
கதவைத் தானும் தகர்த்தெறிந்தார்

பஞ்சுபோல கம்பளத்தார் பறந்தார் கடைப்
பாதை வழியாகவே நடந்தார்.

மஞ்சள் கொழுப்புச் சரிந்திடவும் கர்னல்
மாரென்று சொல்லி மகிழ்ந்திடவும்,

பட்டாளம் பீரெங்கி தான்விடவே குண்டு
பாரினிலே யிடி வீழ்ந்தாற்போல்

சுட்டானே பீரங்கி முன்னூறு நானூறு
கட்டபொம் மேந்திரன் படைநெளிய 1460

கொட்டாப் புளிதுடை தட்டிடவும் கடை
நெட்டுவழி சென்று முட்டிடவும்

மின்னியிடிகள் விழுந்தாற் போலங்கே
மின்வெட்டி மின்னது ஆர்த்தாப்போல்

உன்னியெழுந்திடக் குண்டு தைத்து அங்கே
ஒருத்தன்கைமேலே பாடாச்சு

ஆரென்ருல் ஊமத்துரை புறத்துப் பையன்
அடைப்பக் காரனும் பாடாச்சு

நேரேயிருந்த படைக்கார ரெல்லோரும்
நிமிசத் திலங்கே பாடாச்சு 1470

மாறிச்[50] சுடச்சொல்லிக் கட்டபொம்மு துரை
வரிதி சொன்னரே சேவுகர்க்கு
வீரியம் பேசி வெடிமுழக்க மங்கே
மென் மேலுந்தாமதிப் பில்லாமல்
வலுச் சாவலுகள் போலேயல்லோ தம்பி
மயங்கிப் போகுதே கம்பளமும்
நீலச் சாவலுகள் போலேயல்லோ அங்கே
நெருங்கிப் போகுதே கம்பளமும்
காட்டுச் சாவலுகள் போலேயல்லோ அங்கே
கலங்கிப் போகுதே கம்பளமும் 1480
கூட்டுச் சாவலுகள் போலேயல்லே அங்கோ
குணங்கிப்[51] போகுதே கம்பளமும்
சின்னக் கடைவீதி யென்னுந் தெருவிலே
சேரத் திரண்டுதே கம்பளமும்

கொள்ளையோ கொள்ளை

நன்னய மான கடைவீதி ஒரு
நாழிகையில் கொள்ளை கொள்ளை யென்றார்
பொன்னும் பணத்தையு மள்ளிக் கொண்டார்
பிச்சிப் பூவுங் கொழுந்துகள் கொள்ளையிட்டார்
சன்னக் கம்பிச் சோமன் தானெடுத்தார் நல்ல
சாயச் சேலைகளும் கொள்ளையிட்டார் 1490
தட்டுப் புனுகு சபாதுடனே நல்ல
சந்தணங் கொந்தப் பொடியுடனே
வெட்டிவேர்எலிமிச்சை மிச்ச மென்றார் சிலர்
பட்டுக் கயிறுகளும் கொள்ளை யென்றார்
வேண்டுதல்லாஞ் சிலர் தானெடுத்தார் பாக்கு
வெற்றிலை புகையிலை கொள்ளையிட்டார்
பாணியென் பார்கள் சில பேர்கள் சோத்துப்
பானையெடுப்பார் பல பேர்கள்
வண்ணான் துறைதனில் வந்தார்கள் அந்த
வண்ணானை பூசை கொடுத்தார்கள் 1500

எண்ணாமல் வண்ணானை வைத்து தணக்
கேத்த புடவையுங் கொள்ளையிட்டார்

ஊர்நோக்கிப் புறப்பட்டார்கள்

கிழக்குப் பாதை நோக்கிச் சற்றே
கீழ்ப்புறம் மேல்ப்புறம் தானே
பழக்கம் பேசியே கம்பளத்தார் பெரும்
பாதையே கூடி நடந்தார்கள்
பட்டனம் விட்டு வெளியேறிக் கள்ளி
வட்டாரங் கண்டுமே முன்னேறி
கட்டக் கட்டக் உச்சி நேரத்திலே பெரிய
சணமாய் நடந்துவழி கூடி 1510

வெள்ளாலுத்திர கோச மங்கை வழி
விஸ்தாரமாகவே கம்பளத்தார்
பிள்ளை மகன் பிரதானிப் பிள்ளை யின்னம்
பிறகே தான் வரக்காணோ மென்றார்
முன்னேறிப் பாதை வழிகூடி நேரே
மூலையில் மேல்ப்புறம் முன்னோடி
கன்னி மார் கோவில்பளைய டேந்தல் கரை
கட்டபொம்மு தளம் வந்தார்கள்.
ஊமைத் துரையுடன் சேர்ந்த ஜனங்களும்
ஒண்டொடிக் காரரனை வோரும் 1520

எல்லோரும் வந்தார்கள் தானாபதியைக் காணவில்லை

தாமதம் செய்யாமல் வந்தார்கள் பின்னுந்
தானாபதி வரக் காணாமல்
ஆவலாய்க் கட்டபொம் மேந்திரதுரை யென்ன
ஆலோசினையாக யேது சொல்வார்
மேல்வீடு நின்றானே பிள்ளை மகன் நம்மைத்
தாவி வரவில்லை யென்றுரைத்தார்.
பாளையக் காரரைச் சேவுகரைச் சரி
பார்த்தாரே கட்டபொம்மேந்திர துரை
தாளை மலர் முல்லை வாசம் பொருந்திய
தம்பி அடப்பத்தைக் காணோ மென்றார். 1530

கொட்ட மடக்கிதான் பட்டானோ அந்தக்
கோட்டைக்குள் தப்பி யம்பிட்டானோ[63]
கட்டபொம்மு துரை சொல்லி மயங்கவே
பொட்டிப் பகடையுமேது சொல்வான்.

ஊமத்துரைக்கு அடப்பக்காரன் நல்ல
உத்தமனுஞ் சிறுபிள்ளை யாண்டன்[53]
காமனுக்கே நெஞ்சி குண்டுதைத்து உடன்
கைமேலே தானங்கே பாடாச்சு
பட்டன வீதியில் கோட்டை வாசலோரம்
பட்டுக்கிடக்கிறான் சாமி யென்றான் 1540

கட்ட பொம்மேந்திரன் தம்பி யுடனவர்
கண்ணைப் பிசைந்துமே நொந்து கொண்டார்
மானுபரன் ஊமத்துரை சாமி
மன்னனுக்கு கோப மீறிடவே
தானுபதிப்பிள்ளை யில்லாமல் நாமள்
தாளித்துத்தான் சீமை ஆளலாமா
பாளையக் காரர்கள் சிரிப்பார்கள் நமது
பாஞ்சைப்பதி நெருப்பாகுமாய்யா
கோழையாய்ப் போறது ஞாயமல்ல இன்னஞ்
கோட்டைக்குப் போவோம் திருப்புமென்றார் 1550

ராமநாதபுரம் போய்ச் சேர்ந்து இன்னம்
கோ நாலு தெரு வீதி கொள்ளையிட்டு
சேமமாய் நம்முட தானுபதியையும்
சீக்கிரமாய் வரவழைத்து
சாகிசன் மண்டைதானுடைத்து அவன்
சங்கைக் கடித்து ரத்தங்குடித்து
போலிட்டு வாரதே காரிய மென்று புறப்பட்டார்.
ஊமைத்துரை தானும்
கன்னிமார் கோவிலின் உச்சத்திலே கெவுளி
கெச்சுக் கெச்சுக் சென்று நிமித்தஞ் சொல்ல 1560

தென்னன் புலிக்குத்தி நாயக்கர் சோசியம்
சீக்கிரம் பார்த்து மொழியலுற்றார்.
நிமித்தம் நல்ல நிமித்த மென்றார் வேறே
நிபந்தனைகள் இல்லை யென்றார்
சமர்த்தன் தானுபதிப்பிள்ளைக்கு உயிர்
தான் சேதமில்லை யென்றே யுரைத்தார்
கண்டினை தொண்டினை மெத்த உண்டு ரெம்பக்
காயிதாச் செய்வான் கலெக்கட்டராம்
தெண்டனைக்குள்ளாகி தானுபதிப்பிள்ளை
சென்னப் பட்டனமும் போய்ச் சேர்ந்து 1570

சென்னல் துரைகளைக் கண்டு பேட்டி செய்து
யென்னுன மேன்மை செய்திடவே
நன்னயமாகவே தானுபதிப்பிள்ளை
நாற்பதாம் நாள் வரவேணுமென்றூர்
நாற்பதாம் நாளைக்குள் பாஞ்சைப்பதி நாட்டில்
நன்மையாத்தான் தானுபதி வருவான்
தீர்க்கமிது வென்று சோசியம் சொன்னனே
தீரன் புலிக்குத்தி நாயக்கரும்
சொல்லவே கேட்டு மன மகிழ்ந்து ஊமைத்
துரையுங் கட்டபொம்மேந்திரனும் 1580

நல்ல தென்று வழிகூடி நடந்துமே
நன்மையாய்ச் சிங்கள சத்திரத்தில்
சேகரமாகவே போயிறங்கித் துரை
நாகரீகமுள்ள சத்திரத்தில்
தாகமுந் தீர்த்து இளைப்பாறிச்சிங்கள
சத்திரம் விட்டு வெளியேறி
செழிய நல்லூரா மார்க்கமாயிப்போ
சேது பாதை தீர்க்கங்களாய்
வளமிகுந்திடுஞ் சோலை கடந்து தென்
கிளுவை நாடு கடந்தார்கள். 1590

மெட்டுகளாகவே யெட்டி நடந்து மேல்
மாந்தை நகரம் போய்ச் சேர்ந்தார்கள்
கட்டுள்ள கம்பளத் தானின பந்துடன்
இஷ்டங்களாக யிருந்தார்கள்.
இருந்திடும் போதினில் தானிருந்து நாமு
மிப்போ சமையல்கள் செய்யலா மென்றூர்
விருந்து சமையல்கள் தானிருந்து துரை
வேடிக்கையாக மனம் மகிழ்ந்தார்.
அரைச் சணத்தில் துரைதானும் படையுமே
அன்னமருந்தி மகிழ்ந்தார்கள். 1600

திருச்செந்தூர் பாதைதான் கூடி அங்கே
ஒருச் சாமத்துக்குள் முன்னடி
காற்றுடி போல் விசை கொண்டார்கள் அங்கே
தூத்துக்குடி நகர் சேர்ந்தார்கள்.
தூத்துக்குடி வெள்ளைக் கார வீட்டில்
கொள்ளை சூரையடித்திடவேணு மென்று

கும்பினியாருட செம் பொனுடைமையைக்
 கொள்ளையடித்தாரே கட்டபொம்மு.
வம்புகள் செய்கிருரென்று சொல்லி அங்கே
 வந்தான் பிரான்சுத் துரை மார்கள். 1610

அன்னயாஞ் செய்யாதே கட்ட பொம்முனைக்
 காபத்து வந்திடு மென்று சொன்னுர்.
வினைகளல்லவோ கும்பினிப் பொல்லாங்கு
 வேண்டாமடா கட்டபொம்மு துரை
கொள்ளையடிக்கிருய் ஞாயமில்லை இது
 கூக்குரலாகுமே பொல்லாங்கு
சள்ளை செய்தாய் யென்று வெள்ளைக்காரர் சொல்லி
 துள்ளியே கட்டபொம்முதுரை சொல்வார்
பூண்கட்டிக் கம்பாலடிக்கிறே னென்றுங்கள்
 பொல்லாப்புவந்தால் நல்லாப்பு வைப்பேன். 1620

நாங்கள் பயணச் சவாரிசெய்து அங்கே
 ராமநாதபுரம் போய்ச் சேர்ந்து
சாகிசன் மேசரை கண்டு பேட்டி செய்து
 கிகிகியென்று சிரித்து வந்தோம்.
ஆயிரம் பேருக்கு ஞாயமானபடி
 அம்பது பெட்டி பணமெடுத்தேன்.
சேவுகர் சம்பளம் சொல்லாமல்படிச்
 செலவுக்கில்லாமல் கொள்ளை[54] கொண்டேன்.
கொள்ளையிட்டான் கட்டபொம்மு யென்றுசொல்லி
 கும்பினிக் காயிதம் போட்டாயானுல் 1630

கள்ளத்தனஞ் செய்தால் நானுனக்குப் பொல்லாக்
 காலனென்றுன் கட்டபொம்மு துரை
தன்னிகரில்லாமல்தான் பேசிப் பாஞ்சைத்
 தலத்தை நோக்கியே கைவீசி
மாகவே கொள்ளையிட்ட பணம்
 அம்பது பெட்டியும் முன்னடக்க
பந்தியாய் பாளையக்காருடன் வீர
 பாண்டியக் கட்டபொம் மேந்திரதுரை
சிந்தைமகிழ்ந்திடப் பாஞ்சைப் பதி வந்து
 சிங்காரமாகக் கொலு விருந்தார் 1640

கன்னி சக்கதேவி பாதத்தைப் போற்றியே
 கட்டபொம் மேந்திரன் கொலுவிருந்தார்.

இன்னி மேலுங் கதைசொல்கிறேன் வெகு
நன்னமாய்ச் சேளும் நல்லாரே
ராமநாதபுரம் கோட்டையிலே அங்கே
நடந்தஞாயத்தைக் கேளுங்களே
பூமியதிரவே பேட்டைக்குள்ளே அங்கே
போராட்டம் மாகுதே கோட்டைக்குள்ளே
கட்ட பொம்முதுரை திருப்புகிருரென்று
கலக்கமாகுதே பட்டனத்தில் 1650

ராமநாதபுரத்தில் கலக்கம்

பட்டுக்கிடந்திடும் அஷ்டன் துரையுட
பட்டாள மேசருங் கிட்டவந்தார்
மேல் வீட்டிலிருந்த சாகிசன்மேசரும்
வேகமாய் வேளியேறி வந்தார்
பாவி பழி மோசஞ் செய்தானேயென்று
கோபங்களாய் துரையேது சொல்வான்
கண்ணுலே பாருங்கள் வல்லவரே யிது
காரியமோ சொல்லும் நல்லவரே
மண்ணுலே மாண்டவர் மெத்தவுண்டுயிந்த
வையகந் தனிலே தானுமிப்போ. 1660

ஜாக்ஸன் பேச்சு

கட்டபொம்மு துரைவந்தவன்தான் நமது
கட்டுக் கடந்தவன் போகலாமா
துஷ்டத் தனங்களுஞ் செய்தானே அவன்
துர்ப்புத்தியாலே மோசம் போளுனே
விண்ணேரறிந்திடஞ் சொல்லுகிறே னெங்கள்
வேதமொழிப் படி தப்பாமல்
எண்ணி எட்டு நாளைக்குள்ளாக அவனை
ஏலேலத் தூக்கிலே போடாவிட்டால்
என்பேரு சாகிசன் மேஜரல்ல நா
னெடுத்ததுவும் பட்டாக் கத்தியல்ல 1670
சம்ரதாய மினிப்பார்ப்போ மென்றுமனம்
வெம்பி அஷ்ட்டனைத் தானடக்கி
வீரியமாகத் துரை மனதில் வெகு
வேகங்கொண்டான் லயன் வீதியிலே

ராசிகளாக வரவழைத்தான் கெட்ட
ஞாயங்கள் பேசி மடிபிடித்தான்.
பொல்லாங்கு மெத்தவே செய்யலுற்றான்கட்ட
பொம்முதுரையை மடிபிடித்தான்
வல்லமை யாகவே சாகிஷன்மேஷரும்
மானபங்கஞ் செய்தா னென்றுரைத்தார்
கம்பளத் தாரைப்பிடித்த தினலங்கே
கலகம் நடந்தது ஞாயமென்றான் 1750

அன்பாகப்பிள்ளை மகனுரைக்க ஏழு
ஆலோசினைத் துரை[63]தான் கேட்டு
நடந்தசெய்திக் கெழுதாமல் கெவுணர்
ஞாயத் தாருத்தரவில்லாமல்
அடங்கள்செய்தானே சாகிஷன் மேஷரும்
அந்நியாய மாகவே சீமையிலே

ஜாக்சனுக்குத் தண்டனை

வருமங்கள் செய்தவன் சாகிஷன் மேசருக்கு
வாவல் அபராதங் குறியு மென்றான்
தருமத்துரைகளும் ஞாயங்கள் பார்த்தங்கே
சாகிஷன் மேசர் மேல் குற்றமென்றார். 1760

அந்தச்சணமே கெவுணர் துரைகளும்
ஆலோசனை செய்து அந்நேரம்
சந்தனந் தாம்பூலந் தானெடுத்து அந்தத்
தானாபதி கையில்தான் கொடுத்து
சற்சித்துரைகள் மனமகிழ்ந்து பிர
தானி முகம் பார்த்து யேது சொல்வார்

கவர்னர் துரையின் வேண்டுகோள்

இச்சணம் உம்மிட கட்டபொம்மேந்திரனை
இஷ்டமாயிங்கே வர வழைத்தால்
சட்டமாய்ப் பேட்டிகள் கண்டிடலாம் வெகு
சந்தொட்டியாய் மொழி பேசிடலாம் 1770

எட்டு நாளைக்குள் தருவியென்று வெகு
திட்டமாய்த் துரைகள் செப்பிடவே
நல்லதென்று சொல்லிப் பிள்ளை மகன் வெகு
உல்லாசமாகவே தான் திரும்பி

எல்லையெங்கும் புகழ் கட்டபொம்மு துரையை
இப்போ வருவிக்க வேணு மென்று
சென்னல் துரையிடம் சொல்லிக் கொண்டார் அங்கே
மன்னன் தானுபதிப் பிள்ளைமகன்
கர்னல் கெவுணர்கள் தன்னிடஞ் சொல்லிக் கொண் 
டின்னேரம் பிள்ளை மகன் தானும் 1780

தானுபதி தெற்கு நோக்கிப் பயணமானுர்

சீக்கிரமாகவே சொல்லிக் கொண்டான் தெற்குச்
சீமையை நோக்கி வரவுஞ் சென்ருன்
பாக்கியவானந்தப் பிள்ளை மகனுமே
பாஞ்சைப்பதி நோக்கித் தானடந்தான்
தேசம்புகழுந் தென் பாஞ்சைப் பதிதனில்
சேர்ந்தானே பிள்ளை மகன் தானும்

கட்டபொம்முவிடம் வந்தார்

வாசமிகுந்திடுங் கட்டபொம்மு துரை
போசன் சமுகத்தில் வந்து நின்று
கட்டபொம்மு துரையைக் கண்டு நின்ருன் வெகு
மெட்டுகளாய்ச் செய்தி விண்டு நின்ருன் 1790
திட்டமுள்ள சென்னல் எட்டு[64] கெவுனர்கள்
சீமையில் தர்மத்துரைக ளென்ருன்
நன்னயமாகவே சென்னல்த் துரை சொன்ன
ஞாயங்களெல்லாம் மொழிய லுற்ருன்
மன்னிப்பு சன்னிப்பு[65] த்தான் கொடுத்தார் உம்மை
மார்க்கமாய்க் கூட்டி வரவுஞ் சொன்னுர்
என்று சொன்னனைந்தப் பிள்ளை மகனப்போ
என்ன சொல்வார் கட்டபொம்முதுரை
நன்றுகாண் பிள்ளைமகனே உம்மை நானுங்
கண்ட போதே நன்மையாச்சு தென்ருர் 1800
இன்னமும் யோசனை யென்ன வென்ருர் அங்கே
சென்னபட்டனஞ் சபாரி யென்ருர்
கன்னி சக்கதேவியைத் துதித்தார் நல்ல
வர்ணப்பரிசுகள் சபாரிவைத்தார்
பவுசுடனே துரை வீரப்பாண்டியன் பார்த்திபன்
கட்டபொம்மேந்திரதுரை

நவுரிப்[66] பேரிகைதான் முழங்க மகா
ராசன் சிவிகையின் மேலேறி
ஊமத்துரை ஒரு சேகரமாய் வெகு
சேமத்துடனே தான் செற்சிதமாய் 1810

பூமான் சிவத்தையா முத்தையா வெள்ளையா
பொதிந்து கம்பளஞ் சேர்ந்து வர
வில்லுங் கைவங்கியு மண்டாவும் ஈட்டி
மிகுந்த கத்தியும் பட்டாவும்
வல்லமையாகவே தானெடுத்து வெகு
சொல்லுறுதிக் கார ரெல்லோரும்
சிங்கேறு போல வெளியேறி நின்றாரங்கே
சென்னல் நகரம் போய்ச் சேர்வோ மென்றார்

கட்டபொம்மு சென்னைக்குப் புறப்பட்டார்

வங்களர் சிங்களர் கொங்கர் புகழ்ந்திடும்
வல்லவன் கட்டபொம்மேந்திர துரை 1820

தங்கமிலங்கிய பொன் கண்டிகை யேறித்
தாஷ்டீகன் வாரதைப் பாருமையா
சங்கீத மேள முழங்கிடவே துரை
தம்பியும் ஊமைத்துரை தானும்
எங்கும் வலம்புரி சங்கு முழங்கிட
சிங்காரமாகவே தானடந்தார்
மாற்றலர் போற்றுஞ் செகவீர பாண்டியன்
மன்னன் தானுபதி தன்னுடனே
கூற்றை யுதைத்தவன் தன்னருளால் வழி
கூடி நடந்தார்க ளெல்லோரும் 1830

தேசம் புகழுந் தென்பாஞ்சைப் பதிதுரை
சென்னல் நகரம் போய்ச் சேரவென்று
நேசமதாகவே சேனை படைகளும்
நில்லாம லன்னேரமே நடந்தார்
மாட கூட மணி மேடைகளாம் புது
மண்டபஞ் சேர்வையை மானதியாம்
நாடெல்லாம் போற்றிய தென் மதுராபுரி
நாடிவந்தார் கட்டபொம்முதுரை
மதுரை நகர்தனில் போய்ச் சேர்ந்த துரை
மன்னவன் கர்னலைப் பேட்டி செய்து 1840

சதிரருள் தென்கூடல் வாசமென்று அங்கே
தானே பசலி யிறங்கினர்கள்
சம்புசதாசிவ சொக்கலிங்கம் எங்கள்
தாயே பரஞ்சோதி மீனுக்ஷி
நம்பின பேரையுங் காத்து ரட்சியென்று
நாற்பது பொன்னங்கேதான் கொடுத்தார்
பூசை நெய்வேதியந்தான் பார்த்துத் துரை
போசனஞ் செய்துமே தான் முடித்து
பேசுந் தெய்வ மதுரை மீனுக்ஷி யென்று
பேரணியாகவே தானடந்து 1850

கட்டபொம்மேந்திரன் சேனைத் தளத்தையும்
கம்பளத்தார் சம்ரதாயத்தையும்
மெட்டான கர்னல் சகிஷன் துரையுமே
விஸ்தாரமாய் நின்று பார்த்திடவே
மதுரை விட்டு வெளியேறி துரை
மன்னவன் வர்ணப் பரியேறி
விதுரன் போலவே கட்டபொம்மு துரை
மேலூர்ப் பாதைவழி நடந்து
சேனைத்தளத்துடன் தானே விலாசமாய்த்
திருச்சிராப் பள்ளி நகர் சேர்ந்தார். 1860

ஆனையேறி வீதி சுத்தினராமங்கே
தானே மசலி யிறங்கினராம்.
அங்கே துரை மார்கள் பங்களாவும் மேஷ
ரிங்கிலீசு வெள்ளைக்காரரர் வீடும்
சங்கையுடன் பேட்டி செய்தனராம் வெகு
யிங்கிதமாகவே நடந்தனராம்.
திருச்சிராபுரந் தான் கடந்து அங்கே
சென்ன பட்டணமும் போய்ச் சேர்ந்து
மருமலர் வாசனுங் கட்டபொம்மு துரை
பிரபலமாகக் கொலுவிருந்தார். 1870

விஸ்தாரக் கூடராம் வேடிக்கையாய்ச் செய்து
மேன்மைகளாய்க் கொலுவீற்றிருக்க
கஸ்தூரி வாசங் கமகமென அங்கே
கம்பளத்தார் வந்து சூழ்ந்திருக்க
மெட்டுகளுங் கோட்டை திட்டுகளும் சென்ன
பட்டணம் பார் பாரா மெட்டுகளும்.

எட்டுத்திசை யுமதிர்ந்திடவே அங்கே
எழும்பும் பீரங்கிச் சத்தங்களும்
கோட்டையைச் சுற்றி அகில் கிடங்கும் அதில்
கோபுரவாசலும் மேடைகளும் 1880

நாட்டை ஒடுக்குந் துரைமார்கள் பங்களா
நடப்புஞ் சாரிகள் கண்டனராம்.
அந்நேரந் தானுபதிப் பிள்ளையு மங்கே
என்னென்ன யோசனை சொல்லலுற்றார்.
இன்னேரஞ் சென்னல் துரையிடத்தில் நான்,
தனிமையாகவே போய்வாரேன்.
சற்சித் துரைகளைக் கண்டு பேட்டி செய்து
இச்சணம் வாரேனென உரைத்தார்.
கெற்சிதமுள்ள பிரதானிப் பிள்ளையும்
சற்சி, கெவுணரைக் கண்டனனும் 1890

சென்னலுக்கே சலாஞ் சொல்லினனும் வெகு
தீர்க்கமாய்ச் செய்தி மொழிந்தனனும்
முன்னாலே துரைகளுத்தர வின்படி
யென்னும் பாஞ்சைத் துரையிப்போது
மார்க்கமாய் வந்து இருப்பதினால் வெகு
தீர்க்கமாய் பேட்டி செய்ய வேணுமென்றான்.
சேர்க்கையுள்ள துரை மார்களெல்லாம் இந்த
வாக்கு மூலச் செய்தி தான் கேட்டு
அப்படியே வெகு மேன்மை செய்வோம் நல்ல
தாகட்டும் நாளைக்குப் பேட்டி யென்றார். 1900

செப்பமுள்ள துரை மாருரைக்க அந்தச்
சுப்பிரமணிய பிள்ளையும் தான்திரும்பி
கட்டபொம்முதுரை சமூகந்தனில் வந்து
இஷ்டமாய்ச் செய்தி மொழிந்திடவே
அஷ்டலக்ஷ்மி விலாசம் பொருந்தவே
அதிகந் தொட்டியாகிடவே
மறு நாளுதைய காலத்திலே துரை
மார்களாலோசினை யேது சொல்வார்
திரசுடனொரு பாஷை சொன்னாரங்கே
சென்னபட்டணஞ் சிங்காரஞ் செய்தார். 1910

மங்களமாய் வெகு இங்கிதமாய் துரை
மாருட பங்களாவீடு

எங்கெங்கும் வாழைகள் தானுட்டிச் சபை
இலங்க மேசைகள் தான் போட்டு
மேசைப்பலகை விலாசம் வைத்து அதின்
மேலேயுந் தீன்களெடுத்து வைத்து
சீசா பெட்டித் திறந்து வைத்து நல்ல
சீனியுங் சற்கண்டு தீன்கள் வைத்து
கோதுமை ரொட்டி குமித்து வைத்து நெய்க்
குடங்கள் வேணு தெடுத்து வைத்து 1920

சாதங்கனிகளும் தீங்கனிவர்க்கமும்
போதரவாகவே வைத்தார்கள்.
எள்ளுப் போட இடமில்லாமலங்கே
ஏகமாய்க் கும்பினிச் சேகரமாய்.
வெள்ளைக்காரத் துரை சென்னலும் கன்னலும்
மேசரீசர் கட்டுப் பிறகட்டுடன்
சென்னல் கெவுணர் துரைமார்கள் அங்கே
சேரத்திரண்டு ஒரு முகமாய்
வர்ணத்துக் காயிரம் பட்டாளம் அங்கே
வகைவகையாகத் தானிருத்தி 1930

ஐயாயிரந்தான் துருப்புக் குதிரையும்
அணியணியாகவே தானிருத்தி
வரிசையாகவே தம்பூருக்காரரை
வகைவகையாகத் தானிருத்தி
கருசனையாகவே அஞ்ஞூறு பீரங்கி
கலந்து வைத்தங்கே பாளையத்தில்
எல்லாந்தயார் பண்ணிப் பாசைச் சொல்லி சோஷர்[68]
மல்லர்கள் சேர வரிசையென்று
உல்லாசமான கெவுணர் துரைமார்கள்
உகந்தாலோசனை யேது சொல்வார் 1940

சென்னல் சமூகத்தில் முன்னேதான் பாஞ்சைச்
செல்வன் கட்டபொம்மு ராசனைத்தான்
தனிமையாக அழைத்துவரச் சொல்லித்
தர்மத்துரைகள் மொழிந்தார்கள்.
துரைகளுத்தரவின் படியே ஒரு
சோஷர் வந்தானே சாகீஷன் துரை
வாவல் வெள்ளித் தடிக்காரனும் அங்கேயும்
வந்தானே கட்டபொம்மேந்திரனிடம்

வெள்ளித்தடிக்காரன் வந்து நின்று வெகு
விற்பனமாய்ச் செய்தி யேது சொல்வான். 1950

தெள்ளிமையாகவே பேட்டி செய்ய நீங்கள்
சீக்கிரம் வாருங்கள் என்றுரைத்தான்.
உத்தரவான மொழி கேட்டு நல்ல
உத்தமன் கட்ட பொம்மேந்திர துரை
சித்தமகிழவே சேனைத்தளத்துடன்
சென்றானே சென்னல் துரையிடத்தில்
வர்ணச் சிவிகையும் விட்டிறங்கி மகா
ராஜன் வரிசையாய்த் தம்பியுடன்
தென்னவன் பாஞ்சைத்துரை வீரபாண்டியன்
சென்னலுக்காயிரம் பொன்னும்[69] வைத்து 1960

சென்னல்துரை பேட்டி செய்தனராம்.
சலாம் செய்தங்கே சித்தம் மகிழ்ந்தனராம்
அந்நேரஞ் சென்னல் துரைகளும் கெவுணரும்
ஆயிரம்பேர் வெள்ளைக்காரர்களும்
கட்டபொம்முதுரை மெட்டான பாண்டியனை
கண்ணாலே பார்த்தங்கே ஏது சொல்வார்
அட்டாள தேசமுங்கண்டதில்லை பாவி
ஆளிலழகனென்ன உரைத்தார்
அன்புள்ள கட்டபொம்மேந்திரனைப் பார்த்து
ஆலோசினைத்துரைகளேது சொல்வார். 1970

கண்டிப்பாய் மேஸ்திரட்டாபீசு[70] போலீசு
கனம் பொருந்துந்துரைமார்கள்
மண்டல மேழும் புகழுஞ் சென்னல் துரை
மார்க்கமாய் ஞாயம் விளக்கினராம்
செந்நெல் விளை நல்ல ராமநாதபுரம்
சிங்காரமாய் வளர் கோட்டையிலே
கர்னல் அஷ்டன் துரையைக் குத்தியங்கே
அல்லல் செய்த தென்ன பாகியென்றான்.
கும்பினியார்கள் ஒழுங்கு தப்பி அங்கே
கொள்ளையடித்தீரே நீங்களுந்தான் 1980

கம்பளத்தாரென்று பேரெடுத்து ரொம்ப
அல்லல் செய்த தென்ன சொல்லுமென்றான்,
ஒழுங்கு தப்பிதஞ் செய்தாயே, பதி
லுரையென்று துரைமார் கேட்க

களங்கம் உன்மேலிருக்குதடா பாவி,
கட்டபொமமு துரையே சொல்லுமென்றான்
இப்படியாகத் துரைமார்கள் கேள்வியில்
என்ன சொல்லுவார் கட்ட பொம்முதுரை.
அன்புள்ள பேட்டிகள் தாரோ மென்று சொல்லி
அநியாயஞ் செய்ததைச் சொல்வாராம். 1990

நம்புதலாக வரவழைத்து ரெம்ப
வம்புகள் செய்ய அளப்பெடுத்து[71]
தேசங்களெங்கும் அலையப்பண்ணிதுரை
மோசங்கள் செய்ததை என்ன சொல்வான்.
ராசிகளாக வரவழைத்தான் அங்கே
ராமநாதபுரம் பேட்டி என்றான்
பேட்டிகளாக வரவழைத்தான் மடி
பிடித்தென்னை மானபங்கஞ் செய்தான்.
கோட்டைக்கதவை அடைக்க சொன்னான்
துரையைக் கும்பினிப்பட்டாளஞ் சூழ்ந்து கொண்டார். 2000

வேட்டை ரணவேட்டை வாய்த்ததென்று சற்றே
வேட்டை விளையாட்டுச் செய்தேனென்றான்.
தாட்டிமையாகவே கட்ட பொம்முதுரை
சல்லியஞ் செய்தேனென உரைத்தார்,
பார்த்தார்கள் ஞாயத்தைக் கும்பினியார்களும்
பாஞ்சைத்துரையைப் பார்த்தேது சொல்வார்

துரைமார் கூறிய குற்றச்சாட்டுகள்

தூத்துக்குடி வெள்ளைக்காரர் வீட்டிலங்கே
தொண்ணூறு சாக்குப் பணமெடுத்தாய்
பார்க்குமோ கும்மினி பொல்லாங்கு நீ செய்தாய்
பதில் சொல்லென்று மொழியலுற்றார். 2010

சீக்கிரமாய்க் கட்ட பொம்மேந்திரனும் பதில்
செய்திகளேது மொழியலுற்றார்.
சேவுகர் சம்பளம் செல்லாமல்ப் படிச்
செலவுக்கில்லாமல் முட்டாக
பாவங்கள் வந்தால் வரட்டுமென்று நானும்
பண்பாய்க் கொள்ளையடித்தே னென்றார்.
அந்த நல்வேளையில் கெவுணர் துரைகளும்
ஆகட்டுஞ் சொல்கிறேன் பாவியென்றார்.

இந்தக் குற்றங்களிருக்க வென்றார் துரை
இன்னொரு குற்றமிருக்கு தென்றார். 2020

மட்டுக் கடங்காத துஷ்டத் தனங்களாய்
சண்டித் தனமாகத் திண்டு முண்டாய்
எட்டையபுரஞ் சமீந்தாருட சீமையில்
ஏகமாய்க் கொள்ளையடித்த தென்ன ?
எப்போது வென்றாலும் காட்டு நாயச்கனுபட்டி
எல்லைச் சதிரிலே மேய்ந்த மாட்டை
எண்ணூறு மாட்டையுங் கொள்ளை கொண்டாய்
இது என்ன ஞாயமடா பாவியென்றார்.
அருங்குளத்திலே கம்பஞ் சாணையிலே
அஞ்ஞூறு கட்டுக் கதிரெடுத்தாய். 2030

வருமங்களாகவே கொள்ளை யடித்தாயே
மார்க்கமோ தீர்க்கமோ யோக்கியமோ ?
சத்துரு மோசங்கள் செய்தாயே அங்கே
தட்டப்படப்பிலே தீப் போட்டாயே.
குற்றங்குறை மெத்தச் செய்தாயே வல்ல
கும்பினிக் காயிதாத் தப்பினாயே.
ஞாயக் கெடுதிகள் செய்யலாமா யிது
ராசநீதிக்கு ஒழுங்காமா ?
காயிதாத் தப்பி நடக்கலாமா பாவி,
கன்னங்களவுகள் செய்யலாமா ? 2040

என்று துரைமார்கள்தான் கேட்க அங்கே
நின்றுகட்டபொம்மு யேது சொல்வார்.

### கட்டபொம்மு பதில்

நன்றாக என்னுட வெள்ளாண்மை தன்னிலே
கன்றுங்காலுச்சியை [72] விட்டழித்தான்.
அழிவு சேதங்கள் செய்ததினால் துரையே
களவு கன்னங்கள் செய்தே னென்றார்.
உழவு காட்டிலே வந்ததென்று மாட்டை
ஓட்டி உழுதேனென உரைத்தார்.
காட்டு நாய்க்கனுபட்டி எல்லைச் சதிரிலே
காட்டிலிருந்த படப்பதனில் 2050

பூட்டியாக நெருப்பிட்ட தவறல்லால்
பொல்லாங்கு நான்செய்ய வில்லையென்றார்.

அருங்குளத்திலே சாணைக்கதிரிலே
அஞ்ஞூறு கட்டுகள் தானதிலே
ஒரு கதிராலும் நாமெடுக்க வில்லை
ஒன்னுனை தப்பிதமில்லை யென்றார்.
அந்நேரஞ் சென்னல் துரைமாரும்
அங்கே அதிகக் கோபங்கொண்டே ஏது சொல்வார்.

## துரைமார் கோபம்

இன்னொரு குத்த மிருக்குதடா பாவி
ஏழு வருஷத்துத் தோப்புருப் பணம் 2060

ஏழு வருஷத்துக் கிஸ்திக் காணிக்கைகள்
ஏண்டா செலுத்தவு மில்லை பாவி,
வாழுங் கெவுர்மெண்டார்கள் கேட்க
அந்த மன்னன் கட்டபொம்மு ஏது சொல்வார்
மழைகள் தண்ணீர்களில்லாமல் குடி
வடக்கே தாளுேடிப் போச்சு தென்றார்.[78]
விளையவுமில்லை தழையவுமில்லை காட்டில்
வீண் பாடாய்ப் போச்சுதென உரைத்தார்.
ஏழு வருஷம் மழையில்லாமல் காட்டில்
இட்ட பயிரு முளையாமல் 2070

தாழ்வாகப் போச்சுதே வெள்ளாண்மைக் குடி
தாபந்தஞ் சொல்லத் தொலையாது.
வானங்கள் செய்த கொடுமையினுல் இந்த
மட்டும் விநோதங்கள் வந்ததென்றார்
ஆதலினுலிப்போ கும்பினியா ரென்னை
ஆதரிக்கவேணு மென்றுரைத்தார்.
கட்டபொம்முதுரை வாக்கு மூலங்களைக்
கர்னல் கெவுணர்கள் தான் கேட்டு
சட்டதிட்டப்படிமால் பார்த்துத் துரை
சகல ஞாயமுந்தான் தீர்த்து 2080

கட்டபொம்முதுரை கெட்டிக்காரத்தனம்
கண்டதில்லை பாகி என்றுரைத்தார்.
மட்டுக்கடங்காத துஷ்டத்தனஞ் செய்தாய்
வாவல பராத மாத்துவ னென்றார்.
இந்தத் தடவைக்கு மாப்புத் தந்தோம் பாகி
என்றார் கெவுர்மெண்டார் துரைகள்.

சிந்தை மகிழ்ந்தனர் கட்டபொம்முதுரை
செய்திகளேது மொழிய லுற்றார்
பாஞ்சைப்பதி நகர் போய்ச் சேர்ந்து
கிஸ்திப்பணங்கள் தன்னை யனுப்புகிறேன். 2090

கட்டபொம்மன் பாஞ்சைக்குத் திரும்பினான்

மன்னர் புகழவே தொண்டை மான்பூமியில்
மார்க்கமாய்க் கூடி வழிநடந்து
அம்புவியோர் புகழ் கம்பளத்து ராசன்
அங்கங்கே பாளையந்தானிறங்கி
வம்புசெய்யும் பேரைத் தானொடுக்கித் துரை
மார்க்கமாய்ப் பாஞ்சைப் பதியில்வந்து
கும்பினியாருடபேட்டி செய்து அங்கே
கோலாகலமாக வாழ்ந்திருந்தார்.
சம்ரதாயமாக வந்திருந்தார் கதை
சாற்றுகிறேன் கேளும் நல்லோரே! 2100

அட்டதிசையும் புகழ்ந்திடவே துரை
அரசு செய்கின்ற நாளையிலே
மெட்டுள்ள பாஞ்சைப் பதிதனக்கு வந்த
விதியைச் சொல்கிறேன் நல்லோரே!
கட்டபொம்மு துரை தானாபதி அந்த
கங்கை குலாதிபன் பிள்ளைமகன்

தானாபதியின் வேண்டுகோள்

சட்டஞ் செலுத்தும் பிரதானி நல்ல
தர்மன் சிவசுப்ரமணிய பிள்ளை
தேசம்புகழ் மெய்க்கப்பூசை பண்ணும் தம்பி
தீரன் குமாருதன் பிள்ளைமகன் 2110

வாசம் புகழ்பெற்ற மாலானபுத்திரன்
மகனுக்கே கலியாண மென்று
பார்த்திபன் கட்டபொம்மேந்திரன் சமுகத்தில்
பாக்கு வைத்தானந்தப் [74] பிள்ளைமகன்.
சாத்திர விதிப்படித் தப்பாமலிந்தத்
தாஷ்டீகன் ஊமத்துரைச் சாமி
என்னவென்று மெல்லக் கேட்கலுற்றான்.
இன்னமெடுத் துரைத்தானே பிள்ளைமகன்.

சன்னைகளாகவே சொல்லலுற்ருன் கைச்
சன்னைகள் போட்டு மொழியலுற்ருன் 2120

என்மகன் செல்வக்குமாரனுக்குச் செயம்
இஷ்ட முகூர்த்தமும் வைத்திடவே
தென்பாஞ்சைப்பதி தெல்தேசம் இந்தச்
சீமைக் கெல்லாம் பாக்குவைத்திடவே
நல்லமுகூர்த்தமும் வைப்பதற்கு இப்போ
நாலாயிரம் பொன்னுவேணு மென்ருர்
செல்வக்கலியாணம் செய்வதற்கு இப்போ
சீரகச்சம்பா நெல்வேணு மென்ருர்
அப்போது ஊமைத்துரைக்கல்லாவோ மெத்த
அதிகச் சந்தொட்டி யாகிடவே 2130

முப்பது நாற்பதுவண்டி தயார் காளை
முன்னூறு நானூறு மாடு தயார்
எருதுமாடுகள் எத்தனையோ பொதி
யெடுக்கும் கோணியல் எத்தனையோ
காரியக் காரப்பிள்ளை மகனுக்கு
கன்னிக் கலியாணம் செய்வதற்கு
சேவுகவீரரைச் சேகரித்தார் தம்பி
செல்வ னூமைத்துரை கொக்கரித்தார்

திருநெல்வேலிக் களஞ்சியத்தில் கொள்ளை [75]

தேவமார் சேருவைக்காரருடன் அங்கே
சேர்ந்தான் திருநெல்லையம்பலத்தில் 2140

திருநெல்லையம் பலந்தன்னில் நகர்வளஞ்
சேர்ந்த கருசல்க் கொட்டாரத்திலே
கருசல்க் கொட்டாரம் காவல்காரன் கும்பினி
காவல்காரன் சம்பர தாயக்காரன்
தாவளமாகிய காவல்காரன் நல்ல
தலைமைக்காரன் நிலைமைக்காரன்
காவல்காரன் சங்குத்தேவனையும் பூண்
கட்டிய கம்பாலடித்து விட்டார்.
அடித்திடவேதான் கோபங்கொண்டு அங்கே
சொன்னனே கும்பினி காவல்காரன். 2150

துடித்திடவேதான் வேகங்கொண்டு வெகு
ஆங்காரமாகவே தான் சிறி

கும்பினியார் மேலே ஆணையென்று சொல்லி
கூறினனே சங்குத் தேவனுந்தான்
கும்பினியானை தலைக்கு மேலேயென்று
கொள்ளையடித்தானே பிள்ளை மகன்
பிள்ளைமகன் நெல்லைக் கொள்ளையடிக்கவே
பிற்கட்டு மேஷர்தன் சேவுகன்தான்
வல்லமையாகவே சொல்லி யெதிர்நின்று
வாய்பேசா மன்னன் துரையிடத்தில் 2160

அல்லல் வருமென்று சொல்லிடவே கட்ட
பொம்மு துரைதம்பி யேது சொல்வார்.
வல்லமைசேர் கர்னல் சென்னல்துரைகளும்
வந்தால்வரட்டு மென்றே யுரைத்தார்
கொட்டாரம் தன்னிலே கட்டியிருந்திடும்
கும்பினியார் சீமை நெல்லையெல்லாம்
பட்டப்பகலிலேதான் கொள்ளை கொண்டான்.
வெளிப்பட்டரை நெல்லையுங் கொள்ளைகொண்டான்.
ஆயிரதஞ்நூறு கோட்டை நெல்லைஅரை
நாழிகையில் வாரிக்கொள்ளை கொண்டான் 2170

பாயும்புலிபோல ஊமைத்துரை வீர
பாண்டியன் சமர்த்துகளேது சொல்வார்.

ஊமைத்துரைப் பேச்சு

வானம் பொழிந்தது பூமிவிளைந்தது
மன்னவன் கும்பினிக்கேன் கொடுப்பேன் ?
சீனிச்சம்பா நெல்லுஏன் கொடுப்பேன்
தம்பி சீரகச்சம்பா நெல்லு ஏன்கொடுப்பேன் ?
தானியதவசமும் ஏன்கொடுப்பேன் நமது
சாமியோ பூதமோ தம்பிரானே ?
நானும் உழுது விதைக்கும் போதுஅவன்
தானும் உழவுக்கு வந்தானே ?[76] 2180

உழவு தலைக்குத் தான் வந்தானே நமது
உழப் பெருதுகள் மேய்த்தானே ?
களைகள் முளைகள் எடுத்தானே நமக்கு
கஞ்சித் தண்ணீர்க் கொடுத்தானே ?
சனமோ சாதியோ கும்பினியான் நமது
சம்பந்தக் காரனே கும்பினியான்.?

மனதுபோல நடப்பானோ நமது
மச்சானோ தம்பியோ கிச்சானோ[77]
என்னைப்போலே வெள்ளாண்மை செய்தாரா?
துரைகளென்ன உபகாரஞ் செய்திருக்கார்? 2190

மன்னவன் கும்பினி வந்தாக்கால் கத்தி
வாள்முனையில் கிஸ்திப்பண மென்றான்.
குலவைச் சத்தங்களாகு மென்றான் நெல்லை
கோசாலையிலே[78] பிடியுமென்றான்.
செலவுக்கு நெல்லுகள் பத்தாது அதி
சீக்கிரம் வண்டியிலேற்று மென்றார்.
சம்பா நெல்லுச் சரிபார்த்தான் தன
தானிய தவசம் பொதிபிடித்தான்.
செம்பாதி ராத்திரி செல்லுமட்டும் பரு
நெல்லைவாரிக் கொள்ளை யிட்டான். 2200

சீரகச்சம்பா நெல் செவ்வலில் கட்டிய
சித்திரக்காலி நெல் பொத்தவெள்ளை
வாரிவாரி நெல்லைக் கொள்ளையிட்டு அந்த
மன்னன் ஊமைத்துரை என்ன சொல்வான்?
இன்னஞ் செலவுக்குப் பத்தாது நெல்லு
கண்ட இடமெல்லாம் கொள்ளையிட்டான்.
தூத்துக்குடி நெல்லுக் கொள்ளையிட்டான்
வெடி துப்பாக்கிமார்களைத்[79] தானடித்தான்
காத்திருந்திடும் கும்பினியார் காவல்
காரனையும் பூசைதான் கொடுத்தார். 2210

கும்பினியார் சீமைநெல்லை எல்லாம் சரி
கொள்ளை கொண்டானந்தப் பிள்ளைமகன்.
கும்பினியார் பேரிலாணையிட்டானந்தக்
கொள்ளை கொடுத்த பிற்கட்டு[80] துரை
கும்பினியாணை தலைக்குமேலே யென்று
கொள்ளை கொண்டானந்தப் பிள்ளைமகன்.
கும்பினியாருட பிற்கட்டு மேசருங்
கூக்குரல் செய்கிறான் பட்டணத்தில்.
பட்டணந் தன்னிலே போய்ச் சேர்ந்து துரை
பாங்கான வெள்ளைக்காரர்களிடம் 2220

சட்ட மதாகக் கெவுணர் முன்பாகவே
சந்தித்துக் கொண்டான் பிற்கட்டு மேஷர்

தொப்பி கழற்றிச் சலாமுஞ் சொல்லிவர்மம்
சொல்வானே தர்மத் துரைகளிடம்
எப்படி ராச்சியம் ஆளவந்தீர் சீமை
எங்கெங்கும் கொள்ளையாய்ப் போச்சு தென்றார்.
தென்பாஞ்சைப் பதிக்கம்பளத்தான் நமது
கும்பினியார் நெல்லைக் கொள்ளை கொண்டான்.
வம்புகளாகவே கொள்ளை கொண்டான், பாவி
மட்டுக் கடங்காத துஷ்டனென்றான். 2230

கொள்ளைக்காரர் வலு கம்பளத்தா ரங்கே
கும்பினி ஆணையுமில்லை யென்றார்.
பிள்ளை மகனாலே வந்த கொள்ளையென்று
பிற்கட்டு மேசருரைத்திடவே
வல்லவனாகிய சென்னல் கர்னல் துரை
மார்க்கமாய்ச் செய்திகள் தான் கேட்டு
நல்லது நல்லது பாவி என்றார் பல்லை
நற நறென்று கடித்துச் சொல்வார்.
கட்டாமிராசுக் கோல் சன்னப் பிரவீச்சுக்[81]
கட்டபொம்மு வலு துஷ்டனாச்சு. 2240

எட்டு நாளைக்குள் விசாரணை வைத்துமே
துட்டு விலங்கிலடித் திடுவோம்.
சிந்தை கலங்காமல் கம்பளத்தார் நம்மள்
சீமையில் கொள்ளை யடித்ததினால்
இந்த விசாரணை செய்திடவே துரை
எழுதிப் போட்டாம்ர காகிதமும்
காயிதம் வந்ததே பாஞ்சைப் பதித்துரை
கட்டபொம்மு பிரதானியிடம்
தாகீதை[82] யாய் கும்பினிக் காயிதம்
தள்ளி வைத்தான் கட்டபொம்முதுரை. 2250

ஊமைத்துரை வீரபாண்டியனும் நெல்லை
ஒருமிக்க வாரியே கொள்ளை கொண்டான்.
தாமதஞ் செய்யாமல் பாஞ்சைப் பதிவந்து
சாவல் கட்டு விளையாட்டுகளும்
சீரிய சந்தணப் பூச்சுகளும் தம்பி
கெற்சிதமான கைவீச்சுகளும்
ஊருக்கு மேற்கே[83] ஒத்தப்புளியிலே
ஊமைத்துரையுட சாவல் கட்டும்

வில்லுங் கையுமாகத் திரிவதுவும் வரி
வேங்கையைப் போல வருவதுவும் 2260

மல்லிகை முல்லை முடிப்பதுவும் ஒயில்
வரிசையாய்க் கும்மியடிப்பதுவும்
வேடிக்கையாய்க் கொலு விருப்பதுவும்
துரை விஸ்தாரமாய்ச் சபை செய்திருந்தார்.
ஆடி ஆவணி மாஸ் தையிலே[84] சபை
கூடி ஊமைத்துரை யேது சொல்வார்.
நமக்கெதிரிகளில்லை யென்று பாஞ்சை
நாட்டரசன் கொலு வீற்றிருந்தான்.
கமுட்டி மார்க்கமாய் கும்பினிக் காயிதம்
கண்டெழுதிக் கெவுர் மண்டார்கள் 2270

என்னென்ன யோசனை செய்யலுற்றார்.
அங்கே யென்னென்ன கோப மெடுத்துரைத்தார்.
சின்னத்தனஞ் செய்தான் கட்ட
பொம்முதுரை சொல் தப்பினான் மாதரிச்சோத்
புத்தியில்லாமலே கொள்ளையிட்ட கட்ட
பொம்முதுரை யிங்கே வந்து சேர
எத்தனை நாளாச்சு காயிதங்கள் போட்டு
இன்னம் வரக்காணோமே மாதரிச்சோத்
சத்துருவானானே கம்பளத்தானவன்
சமர்த்தினாலே நிராகரித்தான். 2280

அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத் லவுண்டி
ஆகட்டு மாகட்டு மென்றுரைத்தார்.
கத்தி வெடிகளும் கட்டாரி ஈட்டியும்
கல்லு வெடிகள் தயாரு செய்தார்.
பத்தியெழும் புஞ்சப்பாரி யென்றார் அங்கே
பாஞ்சைப் பதியிலே தீனியென்றார்.
எந்தெந்தத் தேசங்கள் யெந்தெந்தத்
துரைகளுக் கெழுதிப் போட்டாரே காயிதமும்
அந்தந்தச் சீமையின் கும்பினிப் பட்டாளம்
ஆசராக வந்து சேர்ந்த தென்றான். 2290

கிண்ணிப் பட்டாளமும் வந்ததென்றார்
வல்ல கிரண்டப் பட்டாளம் பெருகு தென்றார்.
எண்ணத் தொலையாத பட்டாளமுமங்கே
ஏகமாய்க் கூடி வருகுதென்றார்.

மின்வெட்டி மின்னது ஆர்த்தாப்போல்
　　மேக சஞ்சாரங்கள் கூடினுப்போல்
விண்ணில் மழைகள் பொழிந்தாப் போல்
　　அங்கே மென்மேலும் வெள்ளங்கள் வந்தாப் போல்
சென்னல் கெவுனரா லோசினையால் துரை
　　சொன்ன மொழிப் படிதப்பாமல் 2300

சின்னப் பிரட்டன் பெரிய பிரட்டனும்
　　செம்புகத் தீயக்கண்டம் போலட்டனும்
மக்காளித் துரை லாட்டனுந் தம்பியும்
　　மக்களொடு துரை லாஷ்டனுமே.[85]
எக்களிப்பாக நெருங்கி விட்டாரொரு
　　மிக்கச் சவாரிகள் பிரப்படென்றான்.
சாதி வெள்ளைக்காரர் மாதிரிக் காரராய்
　　சட்டைக்காரச் சோஷர் கெட்டிக்காரர்
பூத கணம் போலே சோஷர் வெள்ளைக்காரர்
　　போதைலகிரி நடத்திக் கொண்டார் 2310

மலங் காடுகள் போலே தலைகளாம்
　　பனைமரம் போலேகாலுங் கையாம்
வலைக் கொம்பு போலுதடுகளாம் பருங்
　　கத்தரிக்காய் போல முழிகளாம்
முழிகளும் பூனைக்கண் முழிகளாம்
　　அவர்மூஞ்சி முகஞ் சுத்த வெள்ளைகளாம்
குமுதாழி போலே வயிறுகளாம் பருங்
　　குன்று மலைகள் போல் தோளுகளாம்[86]
சாராய வெறிக் குணங்களாம் கணக்
　　காருயிரம் சோஷர் மேஷர்களாம் 2320

சூராதி சூரர்கள் வீரர்களாம் ஒரு
　　சொல்லுக் கடங்காத கோபிகளாம்
பாட்டைச் செம்பட்டை மயிருகளாம்
　　வயிறு பருபருத்திடுந் தொந்திகளாம்
உருட்டி முழித்துமே பார்த்து விட்டார்
　　வலுமுரட்டுச் சோஷர்கள் வந்து விட்டார்.
மல்லர்கள் சோஷர்கள் எல்லோரும்
　　ஒரு மாதிரியாய்ச் சாதிக்காரர்களும்
அல்லா பாதந்துணையெனவே அசல்ப்
　　பட்டாணி மார்களனைவோரும் 2330

கல்லு வெட்டிகளெடுத்துக் கொண்டார்
 அவர்காலிலே பாப்பாசு மாட்டிக் கொண்டார்.
சொல்லுக் கடங்காத சோஷர்கள் மேஷர்கள்
 புல்லாங்குழல்க்கார வல்லவர்கள்
காடு தாங்கிகளும் போட்டுக் கொண்டார் நல்ல
 காங்குச் சட்டைகள்தான் பூட்டிக் கொண்டார்
சோடு சோடாகவே சேர்ந்து கொண்டார்
 நல்ல சுவடு தாரிகள் மாட்டிக்கொண்டார்
நாற்பது நாளைக்குள் பஞ்சைப் பதியிலே
 நாட்டுகிறேன் திசைக் கம்பமென்று 2340

வார்ப்பண்ணி பீரங்கி தானிழுத்தார் படை
 மன்னரெல்லோரும் வழி நடந்தார்.
பாசு பதமென்ற[67] பீரங்கி தன்னைப் பத்துப்
 பதினைந்து பேரிழுத்தார்.
வாசிதமென்றொரு பீரங்கி அங்கே
 வருதே கட்டபொம்மேந்திரன் மேல்
கூழைப்பாளையங்கள் தான் சேர்ந்து
 வழிகூடி நடக்கவே முக்கியமாய்
பாளையந் தம்புரு தான்முழங்க நல்ல
 ஏழு துரை மாருமேயெழும்பி 2350

சதிருடனே வழி நடந்தார் அங்கே
 மதுரையில் வந்து தானிருந்தார்.
மதுரை விட்டு வெளியேறி வழி
 மார்க்கம் சவாரி நடந்தேறி
கயத்தாறிலே வந்திறங்கித் துரை
 காங்கு கூடாரமுந்தான் துலங்க
கயத்தாறு விட்டு வெளியேறி வலு
 கட்டபொம்மு கோட்டை யெங்கே யென்று
ஓட்டப் பிடாரம் வழி மார்க்கஞ் சென்று
 போட்டானே பீரங்கி திடீரென்று 2360

போட்டசத்தம் முழங்கிடவே பாஞ்சை
 நாட்டிலே கேட்டதே அந்நேரம்.
கேட்டதே சப்தம் பாஞ்சால நாட்டிலங்கே
 கோட்டையேறிக் கட்டபொம்மு துரை
ஓட்டப்பிடாரம் வழி மார்க்கம் நமது
 நாட்டிலே பாளையம் வருகுதென்றார்.

பாளையம் வாரதைப் பார்த்தநேரம் அங்கே
பாயும் புலி போலே சீறினாம்.
வாளையெடுத்து துரை வெட்டினராம் கை
வாளு வீச்சுகள் வீசினராம். 2370
அந்நேரங் கட்டபொம்மேந்திர துரை
அங்கே யென்ன ஆலோசினை சொல்லினராம்.
மின்னலிடி போலே தோணு தென்றார்
அங்கே மென்மேலும் பாளையம் வருகுதென்றார்.
கிழக்கே பார்த்தாலும் பட்டாளம் அங்கே
கீழ்க்கடல் பொங்குதே பட்டாளம்.
தெற்கே பார்த்தாலும் பட்டாளம் அங்கே
தென்கடல் பொங்குதே பட்டாளம்.
வடக்கே மேற்கேயே பார்த்தாலும் சுத்தி
வளைந்து கொண்டதே பட்டாளம். 2380
கடல் வெள்ளம் போலே தோணு தென்றார்
தம்பி கணங் கொள்ளாச் சேனைவருகுதென்றார்.
கோட்டையிலே சனம் இல்லையென்று வீரம்
கூறினார் கட்டபொம்மேந்திர துரை.
வேட்டை ரணவேட்டை யாடலாமென்றல்லோ
வேந்தன் சிவத்தையா தானுரைத்தான்
எத்தனை பட்டாளம் வந்தாலும் இங்கே
ஏகமாய்ச் சுத்தி வளைத்தாலும்
சத்திவளர் சக்கதேவி யம்மாளுக்குத்
தான் பெலியாகக் கொடுத்திடலாம் 2390
என்று சிவத்தையா சொல்லிடவே சபா
சென்று கட்டபொம்மு ராசதுரை
குன்றுமலை போலக்கொலு விருக்கச் சபை
கூடி ஆலோசினை செய்திருக்க
கும்பினிப் பட்டாள மேசரும் சோஷரும்
கும்புகும்பாகத் தம்பூரடித்து
கம்பளத்தார் கோட்டையெங்கே யெங்கே
யென்று கும்புகும்பாகவே தான் திரண்டு
மொட்டைப் பரம்பிலே தானேறி அங்கே
முன்னூறு குதிரைகள் தான் வரவே 2400
பட்டாளமே சருமெட்டு மெட்டாகவே
பாளையம் வந்து இறங்கினார்கள்.

காலந்துரை வந்து சேர்ந்திடவே அது
கம்பளத்தார் களறிந்திடவே.

ஞாலம் புகழ் சித்திரமேடையிலே அங்கே
நாட்டரசன் சபை செய்திருந்தார்.

சக்கதேவி கோவில் முன்பாக அங்கே
சகல பேர்களு மன்பாக

உக்ரமன் சிங்கேறு கட்டபொம்மு துரை
ஊமைத்துரையுங் கொலுவிருக்க 2410

சின்னதளவாய் புலிகுத்தி நாய்க்கரும்
செல்வன் சிவத்தையா முத்தையாவும்

மன்னன் குமாரு தளவாயும் நல்ல
மாப்பிள்ளை நாய்க்கர் வெள்ளையாவும்

வில்லுறுதிக் காரர் வீரர்களும் நல்ல
வேடபட்டித்துரை மன்னர்களும்

சொல்லுறுதிக் காரச் சேவுகரும் நல்ல
சுத்தவீரர் களனைவோரும்

செல்லத்துரை மக்கள் நல்லத்துரை மக்கள்
சில்லவார் தோக்குல வார்களும் 2420

வல்லமைக் காரரனை வோரும் ஒயில்
வரிசையாகவே வந்தார்கள்.

ஒன்று போல சோமன் கட்டினார்கள்
உருமாலுங் கட்டிச் சுங்கு விட்டார்கள்.

புனுகு சவாதுமே பொட்டணிந்தார் கடை
கண்ணுக்கு மையுமே தானணிந்தார்.

முத்துக் கடுக்கன் முகமிலங்க முத்து
மோகனமாலை புய மிலங்க

அஸ்த கடகங்கள் முன் கைமுதாரிகள்
அணிந்தார் ராச துரத்தரர்கள் 2430

மெட்டுகளாகவே கட்டபொம்மு துரை
விஸ்தார மாகக் கொலுவிருக்க

பட்டாளம் வந்ததைப் பாருமென்பார் கொள்ளைப்
படை குருவி போல் தோணு தென்பார்.

சேவுகர் சேரத்திரளுமென்றார் அதி
சீக்கிரம் வேசிடைக் கெழும்பு மென்றார்.

காவல்காரன் மகன் வெள்ளையன்தான் வரிக்
காணுமே யென்னடா தாமதந்தான்.
என்னடா தாமதமென்று சொல்லித்துரை
மன்னர் கட்டபொம்முதுரை தான் கேட்க 2440

அந்நேரஞ் சுந்தரலிங்கமுந் தானங்கே
அதிகசலையில் தானோடி
வேகமுடனே நடந்தானே பாதர்
வெள்ளையன் வீட்டினில் சென்றானே,
மோகனெனும் பாதர் வெள்ளையன் தான்
தலைமுழுகி நித்திரை போரானே.
காவல்காரன் மகன் நித்திரையில் ,நாமும்
கை கொண்டெழுப்பவும் கூடாது.
கோபங்களாக எழுந்திடுவான் ஒரு
குத்தினாலே குத்திக் கொன்றிடுவான். 2450

கத்தி தலைமாட்டில் வைத்திருக்கானிந்தக்
காவல்காரன் வலுக் கோபியென்பான்.
புத்தி கெட்டுப்போய் நான் வந்தேனென்றான்.
கட்டபொம்முதுரைக் கென்ன சொல்வேனென்றான்.
கிட்டநின்று எழுப்பக் கூடாதென்று
எட்டாவட்டத்தில்தானே நின்று
மட்டுக் கடங்காத காளையைத்தான் சோளத்
தட்டையினாலே யெழுப்பலுற்றான்.
காவல்காரன் மகன் எழுந்திடவே இரு
கண்ணுமே சீறிப் பொறி பரக்க 2460

சேவுகன் சுந்தரலிங்கமே வந்திடுஞ்
செய்தியைச் சொல்லடா வென்று சொன்னான்
எங்கே சொல்லென்று கேட்கவுஞ்
சுந்தரலிங்கமுஞ் செய்தியுரைக்க லுற்றான்.
பொங்கமுடனந்தப் பாதரு வெள்ளை தன்
மங்கையே சாதங் கொண்டாருமென்றான்
காவல்காரன் மகன் வெள்ளையன் பெண்சாதி
பூவிலு மெல்லிய இயல்புடையாள்
சீவுகும்பாவிலே சோறு கறிகளாம்
சீருடனே கோழிச் சாறுகளாம் 2470

சர்க்கரை சீனி கற்கண்டுகளாம் கனி
வர்க்க வகைப் பலகாரங்களாம்.

வர்க்கவகைகள் வெகு பிரியம் அது
வாலியுடும்புப் பொரிக் கறியும்

செப்பமுள்ள துரை பாதரு வெள்ளைக்குச்
சித்தத்துக்குச் சரியானபடி

முப்பாலுஞ் சர்க்கரை பாலமுது நல்ல
கற்புள்ள மங்கை படைத்தனளாம்.

வஸ்திகளாம் சத்தி பூசைகளாம் மது
மாமிசம் வான்கோழி முட்டைகளாம். 2480

சித்த மகிழ்ந்து படைத்தனளாம் அதி
சீக்கிரம் சாப்பிட் டெழும்பினராம்.

பட்டுக்சரை சோமன் கட்டலுற்றான்.
வெகு பவிசுடனே தலைப்பாகை வைத்தான்

சட்டம் புனுகு சவாதணிந்தான் வெகு
திட்டமாய் நெற்றியில் பொட்டணிந்தான்.

கீரியே சந்தணம் பூசி நின்றான் யெங்கும்
பேர் பெற்ற பாதரு வெள்ளையன் தான்.

மார்பில் பதக்க மணிந்தனனும் சுத்த
வீரன் கை வில்லை யெடுத்தனனும். 2490

கண்டி சரப்பளி தானிலங்கத்தம்பி
கைதனில் வில்லுமே தான் துலங்க

கொண்டைக் குப்பிச்சி மலர் முடித்தான் மருக்
கொழுந்து காதிலிடுக்கலுற்றான்.

வெள்ளி பிடித்த சமுதாடுவெகு
விஸ்தார முள்ள வளதாடு

உள்ளாயுதங் கையில் தானெடுத்தான்
சபை உச்சிதமாக நடக்கலுற்றான்.

கச்சை இருக்கியே கட்டுகிறான் இடைக்
கட்டுகிறான் தொடை தட்டுகிறான். 2500

கெற்சிதஞ் செய்து புறப்பட்டான் வெள்ளையன்
கில்லிலி என்று குலவை யிட்டான்.

கட்டாத காளை புறப்படவே எதிர்
கண்டபேர் நெஞ்சந் திடுக்கிடவே

மெட்டுள்ள காளை புறப்படவே வெள்ளை
மீசை படபடவென்று ஆடிடவே

காவல்காரன் வெள்ளை புறப்படவே
அப்போ காகமுங் கட்டிக் குறுக்கிடவே

கூவென்று பல்லி குழறு தென்றாள் தண்ணீர்
குடித்த செம்பு தவறு தென்றாள்[68] 2510

பாவி யொருகுரல் தானேயழுகிறாள்
பராசக்தி தேவி தானறிய.

காவல்காரன் மகன் வெள்ளையன் பெண் சாதி
ஆவிபடபடென்று ஆடினளாம்.

வண்டணி பூங்குழல் மாதரசி அவள்
கண்ட சகுன விநோதங்களை

சண்டைக்குப் போகவுங் கூடாதென்றாள்.
நான் கண்ட சகுனம் பொல்லாதென்றாள்.

இன்றைக்கு உன்னை இழந்தே னென்றாள்.
இனி என்றைக்குக் காண்பேனோ வென்றழுதாள். 2520

என்றவள் கையை நெறித்தனளாம் மங்கை
நின்று நெடுமூச்சுக் கொண்டனளாம்.

வல்லவன் வெள்ளையன் பெண்சாதி மனம்
மருகிச் செய்திகள் ஏதுரைப்பாள்:

பொல்லாத சொப்பனங்கண்டே னென்றாள்
இப்போ போகாதே யென்று பின் தொடர்ந்தாள்.

வழக்குஞ் சொல்ல மனந்துணிந்தாள் மண
வாளன் மடியைப் பிடித்திழுத்தாள்.

குளிக்க மஞ்சளரைத் தேனென்றாளது
கொம்பன் கரியாகப் போச்சு தென்றாள் 2530

கறிக்கு மஞ்சளரைத் தேனென்றாளது
கன்னங்கரிபோலே போச்சு தென்றாள்

நரிக்கொம்பு போலிருக்கு தென்றாள் வெகு
சுருக்குடனே யிப்போ போகாதே.

வாழையுந் தோப்பு மழியக் கண்டேன்
அய்யோ மல்லிகைப் பூவுங் கருகக் கண்டேன்.

பாழூராகவே போகக் கண்டேன் இந்தப்
பாஞ்சை நகர மழியக் கண்டேன்.

கூந்தல் அவிழ்ந்து உலையக் கண்டேன்.
அய்யோ கொண்டையில் பூவுங்கருகக் கண்டேன். 2540

ஆந்தை அலறிவிழுகக் கண்டேன் ஒரு
அநியாயக் கூகை குழறக் கண்டேன்.

கோட்டை சிதறவும் கொம்மை தகரவும்
கொத்தாளம்[89] நெட்டு[90] இடிந்திடவும்
நாட்டிலே மண்மாரி பெய்யக் கண்டேன் பாஞ்சை
நாடுவிட்டோர் பெண்ணும்[91] போகக் கண்டேன்.
கீழக்கோட்டை வாசலிலே அரைக்
கீரைப்பாத்தியான தோட்டத்திலே
வேளையிலே குண்டு தைக்கக் கண்டேன்.
அங்கே வீணாக உன் தலை போகக் கண்டேன் 2550

நயமுள்ள நம்ம தானாபதியையும்
நாகலாதபுரத்தில் தூக்கக் கண்டேன்.
கயத்தாத்திலே கட்டப் புளியிலே
கருத்தையா தலை தூங்கக் கண்டேன்.
பட்டத்தானை பட்டுப் போயிடவும் இந்த
பாஞ்சை நகர மழிந்திடவும்
புட்டுக்கு மண் சுமந்தாரறிய[92] நானும்
பொல்லாத சொப்பனங் கண்டேனென்றாள்.
காகங் கதறுதே என் கணவா கருங்
குருவி[93] கட்டுதே என்கணவா 2560

போகாதே போகாதே என்கணவா நானும்
பொல்லாத சொப்பனங் கண்டேனென்றாள்.
என்றந்தக் கன்னியுரைத்திடவே அய்யோ
என்றவன் கையை நெறித்திடவே
இன்றைக்கு உன்னை இழந்தே னென்றாளப்போ
ஏது சொல்வான் பாதர் வெள்ளையனும்.
என் புத்தி கேட்பாரே கோடி லட்சம், நானும்
பெண்புத்தி கேட்பேனோ பாதர் வெள்ளை
அன்புடன் அன்னங் கொடுத்தவர்க்கு இப்போ
ஆபத்து வேளைக் குதவுதற்கு 2570

போக வேண்டாமென்று சொன்னதினாலிந்த
லோகத்துக் கேற்குமோ பெண்ணரசே!
ஆகாக் காலங்கள் வந்தாக்கால் இப்போ
சாகாமல் தப்பவும் கூடாது
சுத்த வீரனென்று பேரெடுத்து நம்மள்
கர்த்தனைக் காட்டிக் கொடுக்கலாமா ?
யுத்தகளத்துக்குப் போகா விட்டால் நமக்கு
சுத்த வீரனென்று பேரேது ?

போடி நீ அப்புறம் போடி யென்றான் வந்த
பொல்லாங்குக்கோ பயமில்லை என்றான். 2580

கோடிப்பாம்பு போல் நின்றாடினான் வலு
கொடிய வேங்கை போல் சீறினான்.
நல்லவள் சொல்வார்த்தை கேளாமல் அவளை
நில்லென்று சொல்லி நடந்தானே.
வல்லமை யான புயங்கள் தட்டியங்கே
வந்தானே கட்ட பொம்மேந்திரனிடம்.
கட்ட பொம்மேந்திரனைக் கண்டு கொண்டானங்கே
கம்பளத்தாருடன் வந்து நின்றான்.
எட்டுத் திசையுமதிரும்படி புயந்
தட்டிச் சிலம்ப வரிசை செய்தான். 2590

மட்டுக் கடங்காத பாதரு வெள்ளையன்
கொட்டுக் கொட்டென்று குதிபோட்டான்.

முதல் போர்

பட்டாளஞ் செய்தியைக் கேளுமய்யா
அந்தப் பாஞ்சை நகரத்து எல்லையிலே
நீராவிக் கரை மேடையிலே அங்கே
நிறுத்திபீரங்கி போட்டானே,
போட்டானே பீரங்கி கோட்டை தகர்ந்திட
போரிட்ட சண்டையில் பாருவெட்டி.
சாட்டை யில்லாப் பம்பரம் போலேவெடி
மூட்டினான் காலன் சமர்க்களத்தில். 2600

மின் வெட்டி ஆற்றல் ஒளிர்வது போல்
மழை மேர்பு கிழியப் பொழிவது போல்
வன் பிற்கட்டுக் காலன் துரை [94] படை
மாரி பொழிவது போல் பொழிந்தார்.
விண்ணு மண்ணும் புகைக் காடாகக் கட்ட
பொம்மு கோட்டையுஞ் செந்தூளாக
கண்வெட்டி மூடுமுன் பிற்கட்டுக்கல் வெடி
காட்டினான் தேவர்கள் காட்சி பெற
தேவர் மூவர் முதல் பூலோகந்தன்னிலே
தீரன் கட்டபொம்மு மேல் சண்டையை 2610

ஆவலுடன் பார்த்தார்ந்த மாடியை
அந்தர மார்க்கத்தில் பார்த்தார்கள்

அண்ட பகிரண்டந்தான் குலுங்க ஆதி
சேடன் பணமுடியும் நடுங்க
குண்டு போட்டான் ரெண்டாயிரம் ஒன்று
போல்கோட்டையிடித்தான் திடீரென்று.
லச்சாதி லச்சம் புகையுருண்டை [95] போட்டான்.
லாட்டன் அஷ்டன் கிருட்டன் துரை
வைத்தகால் பின்வையாக் குசிலியார்படை
வந்தாரக்கினி போல் சிவந்தார். 2620

செங்கதிரோனும் மறைந்திடவே எட்டுத்திக்குத்
திசையும் தெரியாமல்
பொங்குங்கடல் போல பிறகட்டு மேசரும்
போட்டானே பீரங்கி கோட்டையின் மேல்
பொந்திலியர் படை தானெருங்கப் புலாயா
முலாயாப் படை திரட்டி
வந்தானே காலன் துரை வெள்ளைக்காரரும்
வார்ப் பண்ணி [96] துப்பாக்கி தானெடுத்து
நேரிட்டுப் பீரங்கி தானுமிட்டுக் கோட்டை
நெட்டாய் இடித்திட வேணுமென்று 2630

போரிட்ட பீரங்கி அண்டம் நடுங்கிட
போட்டானே எண்டிசையும் நடுங்க
பாதள லோகமுந்தான் கேட்
அண்ட பகிரண்டந்தான் குலுங்க
ஆதாளி [97] போட்டங்கே பூதவேதாளங்கள்
அன்பாகத்தானு மன மகிழ்ந்து
அன்று லங்காபுரி மூலபலச் சண்டை
ஆச்சுது வாச்சதென்றே புசித்தோம்
இன்றைக்கு வாச்சது தின்று புசிக்கலாம்
என்று பூதங்கள் [98] கூத்தாடிடுமாம் 2640

ரத்தங்கள் பூதங்களுண்டிடுமாம்
ரெண்டாயிரம் பேய்கள் கண் காட்டிடுமாம்
நெட்டு நாலு மொரு திட்டமாகப் படை
எங்கும் நெருங்கியே சூழ்ந்துவர
கோடையிடி போல முழங்கிடவே கோட்டை
கொத்தாள மூலே தகர்ந்திடவே

மாட கூட மணி மேடையிலே அங்கே
மதிலில் குண்டுகள் தைத்திடுமாம்
வாசல் கொத்தாளத்தில் குண்டுகள் தைத்துச்
சன்னல் வழிகள் போலே தெரிந்திடுமாம். 2650

ஆசார வாசலலைந்திடுமாம் கோட்டை
வாசற்படிகள் தகர்ந்திடுமாம்.
மக்காளிதுரை மக்களீட்டுத் துரை
கக்கி சக்காரன் பார்காலன் துரை
லெக்கை கட்டியேற வேணு மென்று துரை
லக்கமாரென்று வரும் போது.
கோட்டைக்குள்ளே நின்று கம்பளத்தார்
சற்றே குலவை யிட்டவர் சுட்டனராம்.
கோட்டைக் கதவு தெறித்திடவே அங்கே
கூ வென்று வந்ததே பட்டாளம். 2660

பாளையம் வாரதை கண்டு ஊமைத் துரை
பல்லை நறநறென்றே கடித்தார்.
வேலைக்குதவிய காவல்காரன் மகன்
வெள்ளையன் முன்னோடியே குதித்தான்.
கம்பளத்தாரொரு கும்பலாக வலு
கைக்கார ரெல்லோரும் தென்பாக
கும்பினிப் பாளையத்தூடே தான் வெள்ளையன்
குல்லிலி யென்று குலவை யிட்டான்
மறவர் குலத்தில் பிறந்திட்ட வெள்ளையன்
வைரி போல் பறந்தடிக்கலுற்றான் 2670

பாரு பாரென்று கை முறுக்குகிறான்
பல்லைக் கடித்தங்கே நொறுக்குகிறான்.
படபடென்றெங்கே தான் துடித்தான் துரை
பட்டாளத்தை வெட்டித்தான் முடித்தான்.
குடுகுடென்றங்கே பாயுகிறான் ஈரல்
குலையிலே குத்திச் சாய்க்குகிறான்.
வானிடி போல முழங்குகிறான் சண்டை
வளர்க்குகிறான் குத்தியிழுக்குகிறான்.
என்றிவன் செய்யும் சமர்த்துகள் தன்னை
என்னவென்று சொல்வேன் நல்லோரே 2680

வாளுத்தடிக ளெடுக்கலுற்றான் தலை
மண்டை சிதற நொறுக்கலுற்றான்.
பாணி[99] என்று சோஷர் தான் விழுந்தார்
கனபட்டாளஞ் சேர இறந்தார்கள்.
எட்டியே குத்தியிழுத்திடுவான் மணி
ஈரக்குடலைச் சரித்திடுவான்.
மட்டுக்கடங்காத பாதரு வெள்ளையன்
வட்ட மிட்டாடுறான் கெட்டி கெட்டி.
அப்போது கும்பினிப் பட்டாள மங்கே
எப்படி துப்பாக்கி சுட்டனராம் 2690

தெற்கு நெட்டுக் கோட்டை வாசல் கதவுகள்
திடுதிடென்றுமே சாய்ந்திடுமாம்.
கிழக்கு மேற்கு வடக்கு வாசல் தானும்
கிடு கிடென்று அதிர்ந்திடுமாம்.
திக்கு விசயன் சிவத்தையா முத்தையா
சேர்ந்து கதவோரம் தானிருந்தார்.
உக்கிரமமான புலிகுத்தி நாய்க்கரும்
உகந்த கம்பளஞ் சேருவையும்
கொக்குத்திரளிலே ராசாளி பாய்ந்தாற் போல்
நொக்கு நொக்காக நொருக்கலுற்றார். 2700

வக்கையன் கையை முறுக்கி நின்றானிங்கே
வந்திடும் பேரை நொறுக்கி வென்றான்.
தருகாமல்த்தானே முடுக்கு மென்றார் நல்ல
சாதித் துரைகளைக்குத்து மென்றார்.
மூளைப்[100] பறியத்தகர்த்தி டென்றார்தலை
மூளைசிதற உடைத்தி டென்றார்
ஊமைத்துரை கையைத்தான் கடித்தார்
ஒருகுத்துக்கு நாலைந்து பேர்மடிந்தார்
வீமனைப்போல் தொடை தட்டுகிறான்படை
வெட்டுகிறான் தொடை தட்டுகிறான் 2710

குதிரையின் மேலேறிக் கொலுகிறான்குதி
கொள்ளுகிறான் தவ்வித்[101] துள்ளுகிறான்
மதியமாகுதே நேரமென்றார் படை
மன்னவன் ஊமைத்துரை தானும்
எதிரே வருகின்ற சேனைத்தளங்களை
எதிர்த்துக் குத்துறார் ஊமைத்துரை

கதிர்முறுக்கியே விட்டாப் போலங்கே
காலன்துரையுமே ஓடிவந்து
மின்னலிடிகள் விழுந்தாற் போலங்கே
மேக சஞ்சாரம் பொழிந்தாற்போல 2720

முன்னேறிக் கும்பினிப் பட்டாள மங்கே
சன்னல் பின்னல் வெடிதான்முழங்க
புகைகள் மண்டி யெழும்பிடவே நேரம்
பொழுதஸ்தமன மாகிடவே
திசையுந் திசையுந் தெரியாமல்துரை
தீனிதீனி யென்றான் கோட்டையின்மேல்.
கோட்டையுங் கைவச மாச்சுதொன்று சொல்லி
குலவை யிட்டானே காலன்துரை.
தாஷ்டீகன் கும்பினி லாட்டன் துரையங்கே
கோட்டைக்குள் வந்தானே காலன்துரை. 2730

காலன் துரையுமே ஓடிவந்தான் அரே
கட்டபொம்மு நில்லுநில்லு மென்றான்.
காலன்துரை வார சக்கிசத்தைக்கொண்டு
காவல்காரன் மகன் வெள்ளையனும்
கட்டமதிலை அணைவுவைத்துத் துரை
காலனைக் குத்திமலத்தி நின்றான்.
சட்டமாய்க்காலன் துரையும் பட்டானென்று
சாய்ந்து முறிந்ததே பட்டாளம்
கிட்டயிருந்த குமரய்யா சின்னையா
கில்லிலி என்று குலவையிட்டார் 2740

நெட்டை விட்டோடியே பட்டாளமங்கே
நெருங்கிச் சேர்ந்ததே பெத்தரியில்
கண்டாக்குத் துரையென்று ஒருவனப்போ
கைகலந்து வெடிசுட்டானே
கண்டத்தில் தைக்கப் புலிகுத்தி நாய்க்கரும்
கண்டாக்குத் துரையைக் குத்திநின்றான்.
கண்டாக் குத்துரை சுட்டதிறலைந்தக்
காவல்காரன் மகன் வெள்ளையனும்
கண்டத்தில் நேரேதான்குண்டு தைத்துடன்
கைமேலே தானங்கே பாடாச்சு. 2750

காலன் துரையுமே அங்கேபட்டான்.
காவல்காரன் மகனிங்கே பட்டான்.

காலன் துரைபட்ட செய்திகண்டு அங்கே
கலங்கிப் போகுதே பட்டாளம்
எத்தனை சோஷர்கள் பாடாச்சு
சுத்தவீரர்கள் மடிவாச்சு
புத்தினி லீசல்போல் வந்த பட்டாளமும்
பெத்தரிக் கப்பாலே தான்போச்சு
பிரமன் விதியால் முடிவான கதை
பின்னுரை செய்கிறேன் நல்லோரே 2760

கருமுகில் போல் நிறமுடைய தம்பி
காவல்காரன் மகன் வெள்ளையனும்
காவல்காரன் மகன் பட்டசம்ரதாயக்
கதையைச் சொல்கிறேன் நல்லோரே,
சாவு கெடுதிகள் வந்ததென்று சாதிச்
சாவல் குணங்கி விழுந்தாப்போல்
மண்டிபோட்டுத் தானிருந்தானே அந்த
வாகுள்ள வெள்ளையத் தேவனுந்தான்
கொண்டையில் பூவுங்குலையாமல் தம்பி
குத்துக்கால் வைத்தங்கே சாய்ந்துநின்றான் 2770

முழித்த முழிகள் விழித்தாப்போல் மேல்
மீசை முறுக்கியே விட்டாப்போல்
பழிகள் மோசங்கள் வந்ததென்று அந்தப்
பார்த்திபன் மண்டி போட்டிருந்தான்
கத்திவெடியும் பிடித்தாப் போல்பல்லை
கடித்து தட்டை மடித்தாப்போல்
செத்துஞ் சாகாதவன் போலேயங்கே சுத்த
வீரன் சிங்காரமாய்த் தானிருந்தான்
அப்போது கும்பினிப் பட்டாளமுந்தானுங்
கிட்டவரவும் பயப்படுமே 2780

சிப்பாயி மார்களும் சேரத்திரண்டிவன்
சேவுகத் தன்மையைப் பார்த்தார்கள்.
காவல்காரன் மகன் வெள்ளையிருப்பதைக்
கண்ணாலே பார்த்தங்கே ஏதுசொல்வார்
பாவிப் பழிமோசம் செய்வானிவ னென்று
பட்டாளங் கிட்டேவரப் பயந்தார்.
அப்போது ஊமைத்துரை தானும்அங்கே
அதிக கோபங்கொண்டோடி வந்து

இப்படி வெள்ளையும் மோசம் போனானென்று
    எடுத்து மார்போடே தானணைத்தான். 2790

கண்ணீர்த் ததும்பக் கதறி யழுதார்
    கட்டபொம் மேந்திரனிடத்தில் வந்தார்.
மண்ணுமுருக மலையுருக அவர் வாய்விட்டலறி
    மனது நொந்நார்.
சீமைகள் பூமியிழந்தாலும் நமது
    தேச முழுவதுமிழந்தாலும்
காமனைப் போலிந்த வெள்ளையத் தேவனைக்
    கண்ணாலே என்றைக்குக் காண்போமென்றார்.
பாரமனைகளிடிந்தாலும் நமது
    பாஞ்சை நகரமழிந்தாலும் 2800

வீரசூரனிந்த வெள்ளையத் தேவனை
    வேட்டை யிலென்றைக்குக் காண்போமென்றான்
கத்திவெடிகளும் கட்டாரி யீட்டியும்
    கையிலெடுத்துப் பிடித்தக்கால்
சுத்தவீரசூரன் வெள்ளையத் தேவனுஞ்
    சொல்லிச் சபதம் முடிப்பானே
உயிர்த்துணையானவன் பாதரு வெள்ளையன்
    யுத்தகளத்திலே தான் மடிந்தான்.
வயிற்றையும்பற்றி யெரியுதென்றார் துரை
    மன்னவன் கட்டபொம்மு ராசதுரை 2810

நட்புள்ள பாதரு வெள்ளையனைத்தானிங்கே
    எப்போது காணவே போரோமென்றார்.
விற்பனமுள்ள சிவத்தையா முத்தையா
    வெள்ளையன் சாக மனது நொந்தார்
சேவுகத்திலே சுத்த வீரனடா யெங்குந்
    தேடிக் கிடையாத சூரனடா
காவல்காரன் மகன் தானிறந்தானென்று
    கம்பள மெல்லாங் கலங்கி நொந்தார்.
பொல்லாத சொப்பனங்கண்டு சொன்ன வீட்டுப்
    பெண்சாதி பிள்ளைகளோடி வந்து 2820

கல்லுமரமு முருகிடவே அவள்
    கண்ணைப் பிசைந்துமே நொந்தழுதாள்.
இப்படிக் கம்பளத்தாரிடைந்தார் மன
    தெண்ணி விதிகளை நொந்து கொண்டார்.

தப்பாமல் சண்டை முனையில் செத்தபேரை
　　தானடக்கஞ் செய்ய வேணு மென்று
கும்பினியார்களும் கம்பளத்தார்களும்
　　கூவென்று வெள்ளைகள் வீசிக் கொண்டு
நம்புதலாகவே பேசிக் கொண்டார் ஒரு
　　நாழிகைக்கு மனராசி[10] யென்றார். 2830

அவரவர் தன் படை தான் தெரிந்து அங்கே
　　அறிந்தெடுத்தாரிருவர்களும்
புவிகள் மெய்க்கப் புகழும் நிற்க அங்கே
　　போர் மன்னர் தன்னையடக்கஞ் செய்தார்.
தந்திரக் காரனும் பாதரு வெள்ளையைச்
　　சந்தனக் கட்டை மேல் வைத்தடக்கி
செந்தழல் மூட்டிக் கொளுத்தினாரமங்கே.
　　வெந்து நீராகியே போனபின்பு
கம்பளத்தார்களும் கும்பாகவே கூடிக்
　　கலந்தளப்புகள் செய்திருந்தார். 2840

கும்பினிப் பட்டாளம் பிற்கட்டு மேசரும்
　　கூடி ஆலோசனை யாயிருந்தார்.
வாலைப் பிராயத் துரை மகன் தானந்த
　　மன்னனொருத்திக் கொருமகன் தான்
காலன் துரை பட்டசெய்திக்கல்லோ அங்கே
　　காயிதம் போட்டானே பிறகட்டுமே.
சென்னல் கெவுணர் சமூகத்திலே அதி
　　சீக்கிரம் காயிதம் சென்றிடவே
அந்நேரங் காயிதம் பார்த்துக் கெவுனரும்
　　அதிக கோபங் கொண்டே யெழுந்து 2850

கையை வாயில் வைத்துத் தான் கடித்தான்
　　தொப்பி கழத்தி நாற்காலி மேலடித்தான்.
வையக மெங்கும் நடுங்கிடவே துரை
　　மார்களும் கோபம் படபடென்றார்.
இன்னமும் யோசனை யென்ன வென்பார் அந்த
　　மன்னன் கட்டபொம்மு தன்னை யென்பார்.
பஞ்சப் பூமியிந்தப் பாஞ்சைப் பதி சொற்பப்
　　பாளையப் பட்டடா பாவி யென்பார்.
கொஞ்சப் புத்திக்கார வஞ்சனென்பாரவன்
　　கூட்டங்குலைய நாளாச்சு தென்பார். 2860

தெற்குச் சீமைக் கொரு கட்டபொம்மு அவன்
சின்ன நவாபு போலாச்சு தென்பார்.
சற்கோட்டுத்[103] துரை நாமல்லவோ நல்ல
சாதி வெள்ளைக்காரர் தானல்லவோ !
கருப்பு மனிதன் பார் கம்பளத்தானடா
கட்டபொம்மு வலுதுஷ்டனடா.
சொற்பப்பாளையக்காரனுக்கு நாமும்
தோற்றுப் போனதாயும் பேராச்சு.
மேசைப் பலகை மேலிருக்கலாமா அதின்
மேலேயுந்தீன் வைத்துத் திங்கலாமா 2870

காசி தேசமெல்லாம் ஆளலாமா நாமும்
காலிலே பாப்பாசு போடலாமா
திருச்சிராபுரஞ் சென்னல் புறமிந்தச்
சீமைகள் கட்டி நாமாளலாமா ?
வருமங்கள் செய்தானே கட்டபொம்மு இப்போ
பெருமையால் வம்புதான் வளர்த்தான்
கூக்குரல் சத்தங்கள் செய்தானே இப்போ
கும்பினிப் பொல்லாங்கு செய்தானே
தோக்குலவார் குல கட்டபொம்மு யிப்போ
துன்மார்க்கஞ் செய்தானே ஊமைத் துரை 2880

சாதி வெள்ளைக்கார ராகலாமா நாமும்
தலையிலே டொப்பியும்[104] வைக்கலாமா
மாதரிச்சோதவன் பாஞ்சை நகரத்தில்
சாதுரிய மினி பார்ப்போ மென்றான்.
வந்தபொல்லாங்குக்கு அக்கினி[105] மேஷர்தான்
சிந்தை மகிழ்ந்தெழும்பு மென்றார்
சுந்தரமுள்ள துரை மார்கள் அங்கே
சொன்ன மொழிப்படி தப்பாமல்
ஆயிரங் கும்பினிக் கோர் துரையாம் வலு
அக்கினி மேஷர் பயணம் வைத்தார். 2890

ஆயிரமேஷரும் ஆயிரம் சோஷரும்
ஆயிரம் கும்பினிச் சேவகரும்
கொண்ட அக்குரோணி தளமுங் கொண்டு
பாஞ்சைக் கோட்டைக்குப் போகப் பயணம் வைத்தார்.
மண்டலமெங்கும் புகழ்ந்திடவே ஓயில்
வண்டியிலேறி நடந்தார்கள்

வாலீசு போலீசு மேலீசுத் துரைகளும்
　　வைபோகி மட்டத்தில் சினி[106] வைத்தார்.
காலிலே பாப்பாசும் போட்டுக் கொண்டார் வலு
　　கருப்புச் சட்டைகள் போட்டுக் கொண்டார் 2900

கருப்புச் சட்டையும் மேல் போட்டார் வலு
　　காடு தாங்கிகளும் கீழ்போட்டார்.
துருப்புக் குதிரைகள் சீனிவைத்தார் வலு
　　சோஷர் மேஷர் துரை சாரிவைத்தார்.
காங்குக் கூடாரமுந் தானெடுத்தார்
　　கருப்புக் கூடாரமுந் தானெடுத்தார்.
மூங்கிற் கூடாரமுந்தானெடுத்தார் வெள்ளை
　　முறுக்குக் கூடாரம் தானேடுத்தார்.
மருந்துப் பத்தாயந் தானெடுத்தார் ஒயில்
　　வண்டியிலேறி நடத்தலுற்றார். 2910

இருந்து பரியும் இரும்புக்குண்டு துரை
　　ஈயக்குண்டுகளும் சேகரித்தார்.
மேசைப்பலகை எடுத்துக் கொண்டார்கள்
　　சிசாப் பெட்டிகள் தூக்கிக் கொண்டார்.
தேசுகி வாசுகி படைக்கு முன்னே அங்கே
　　சீமைச் சாராய மெடுத்துக் கொண்டார்.
காலன் துரையையுங் கொன்றானே அந்தக்
　　கட்டபொம்மு வம்பு பார்ப்போமென்று
கோலாகலமாகக் கும்பினிப்பாளையம்
　　மேலூரு பாதை வழி கூட்டி 2920

எட்டு நாளைக்குள்ளே பாஞ்சை நகரத்தை
　　கொட்டை பரப்பிட வேணுமென்று.
ஒன்பது கூடாரந்தானடித்தார் அங்கே
　　கும்பினி பாளையம் செய்திருந்தார்.
அன்பான பாஞ்சைப் பதிக்கோட்டைப்புலன்
　　கும்பினியார்கள் விளக்கினராம்
முன்னாலே தானையமாயிருந்த கர்னல்
　　மன்னவன் பிற்கட்டு மேசர்துரை
தன்னிமையாகவே அக்கினி மேசரைத்
　　தான்கண்டு மெள்ளச்சலாமும் சொல்லி 2930

எச்சரிக்கையாகப் பிற்கட்டு மேசரும்
　　ஏதேது செய்தி யெடுத்துரைப்பார்;

கச்சிதமாய் பட்டாளம் முன்னடத்திக்கொண்டு
காலன்துரை வந்த செய்திகளும்
பாஞ்சைப்பதியிலே சண்டைகள் செய்ததும்
பட்டாளமே சரிந்ததுவும்
மாய்ந்துமடிந்துமே பட்டாளம் பின்னும்
வார்ப்பண்ணி துப்பாக்கி சுட்டதுவும்
மாடகூட மணிமேடையிலே வெகு
வாகுள்ள தென்பாஞ்சைக் கோட்டையிலே 2940

கோடையிடிபோல முழங்கும் பீங்கியும்
போடுபோடென்றங்கே சுட்டதுவும்
குண்டு உதைந்து விழுந்ததுவும் அதில்
கோட்டை இடியாதிருந்தவும்
சண்டைச் சமர்த்துகள் செய்ததுவும்
ஒன்றுக் கொன்று மல்கட்டியதும்
இறக்கைகட்டியங்கே யேறியதும் பகை
நேரிட்டுச் சண்டைகள் செய்ததுவும்
கக்கிசக்காரன் [107] பார்மக்ளீட்டுத்துரை
காலன்துரை பட்ட செய்திகளும் 2950

கம்பளத்தாருட வம்பு நடத்தையும்
காவல்காரன் பட்டுப் போனதுவும்
சம்ரதாயச் சண்டை செய்ததெல்லாம் அந்த
சாதி வெள்ளைக்காரன் முன்பாக
சொல்லி மொழிந்தானே பிற்கட்டு மேசரும்
சூரவானேமு துரைகளிடம்
நல்லதென்று சொல்லி அக்கினிமேசரும்
பல்லைக் கடித்தங்கே ஏதுசொல்வார்?
கேட்டீர்களோ கட்ட பொம்முதுரையுட
கெட்ட நடத்தைகளென்று சொல்லி 2960

வீட்டிமை செய்தானே கட்டபொம்மு
அவன்கோட்டையில் பீரங்கிமாட்டுகிறேன்
அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத் நாளை
ஆகட்டு மென்றுமே அக்கினியும்
சத்தமேகம் போல்பொழிந் திடலாமவன்
சுத்தவீரத்தனம் பார்த்திடலாம்
பாஞ்சைப்பதி விட்டுப்போனாலும் மலைப்
பாறைப் புடவிலொளித்தாலும்

நாஞ்சி நாடுத்தேடிப் போனாலும் நானே
நாட்டுறேன் பாஞ்சையில் கம்பமென்பான். 2970

பாங்கான பாஞ்சைப்பதி நகர்கோட்டையின்
பரப்பை நெட்டாய் யிடியாமல்
தீன்களும் தின்கிறதில்லை யென்றான்சற்றுஞ்
சென்னிகவிழ்ந்து படுக்கே னென்றான்
வீரியக்கோப மடங்கே னென்றான் துரை
வேகமாயக்கினி மேசர் சொன்னான்.
பூராயமாகவே கஞ்சா அபினுடன்
போதைலாகிரி நடத்திக் கொண்டான்.
அஸ்தமித்தவேளை ஆச்சுதென்றுதுரை
அக்கினி மேசராலோசினை யால் 2980

விஸ்தாரமாகவே கும்பினிப் பாளையம்
மெட்டுமெட்டாகவே தானிறுத்தி
கும்பினி யாருட திட்டவட்டங்களைக்
கோமானே சொல்கிறேன் நல்லோரே
கம்பளத்தார் வம்புக்காரரென்று சொல்லி
கும்பினிப் பாராவுந் தானிறுத்தி
தாட்டிமையாகவே கும்பினிப் பாளையம்
சந்திரவட்டம் போலே தானிறுத்தி
கோட்டைக் கட்டுப்போல சோஷர்பட்டாளத்தை
கோலாகலமாகத் தானிறுத்தி 2990

கட்டுமெட்டாகவே பிற்கட்டு மேசரும்
காட்டுப் பாராக்களுந் தானிறுத்தி
நெட்டுக்கு நெட்டங்கே வட்டமிட்டாப் போலே
நெருங்கப்பட்டாளந் தானிறுத்தி
குதிரைப் பட்டாளத்தைத் தானிறுத்தி
நூறுகும்பினி சன்னத்தையும் பின்னிறுத்தி
சதிருடன் மல்லராயிரம் பேரையும்
தம்புருக்காரரைப் பின்னிறுத்தி
கோடையிடி போல குமுறும் பீரங்கிகள்
மேடைகள் பார்த்தங்கே தானிறுத்தி 3000

அணியணியாகவே சோஷர் வெள்ளைக்காரர்
ஆயிரம் பேர்களும் சூழ்ந்திருக்க
ஆடுமாடுகள் தேடிய கோழிகள்
சோடி சோடியாகவே தானிறுத்தி

கணிசமாகவே சோஷர் வெள்ளைக்காரர்
காங்குக் கூடாரத்தில் வீற்றிருக்க
பார்த்திபன் அக்கினி மேசர்துரையங்கே
பட்டாள மேசரைத்தான் பார்த்து
ராத்திரி காலங்களாச்சு தடாவென்று
சாத்திர வேதங்கள் தான்பார்த்து 3010

நல்லா ஆலோசனை பேசியல்லோ அங்கே
லாந்தல் விளக்குகள் தான் போட்டார்.
கோலாகலமான கூடாரத்தினுள்ளே
குத்துவிளக்குகள் சுத்திவைத்தார்.
ஆதாளிபோட்டங்கே சோஷர் வெள்ளைக்காரர்
போஜைதலாகிரி நடத்திக் கொண்டார்.
காதகாத வழிதூரமெலாம் பகல்
காலம் போலெங்கும் வெளிச்சமதாய்
பட்டப்பகல் போலே மத்தாப்புத் திவெட்டி
பட்டாளமெங்கும் கொளுத்திவிட்டார். 3020

கெட்டிக்காரத்துரை யக்கினி மேசரும்
கெற்சிதமாய்ச் சபை உச்சிதமாய்
மேசைப்பலகைகள் தூக்கிவைப்பார் அதில்
மேலேயுந்தீன்களெடுத்து வைத்தார்.
சீசாப் பெட்டி திறந்து வைப்பார்
அந்தச் சீமைச்சாராயமெடுத்துவைத்தார்.
கோதுமை ரொட்டிகுவித்து வைத்தார்.
நெய்க்குடங்கள் வேறேயெடுத்து வைத்தார்
சாதங்களும் போதவைப்பார் நல்ல
தாவணந் தண்ணீரெடுத்து வைப்பார் 3030

சர்க்கரை கற்கண்டு சீனியுடன் ரசம்
வர்க்கவகை பலகாரமுடன்.
அந்த நல்வேளையில் சுந்தரலிங்கமும்
ஆதிவீரமல்லு சேருவையும்
கந்தன் பகடையும் வேகங் கொண்டானவன்
கையைக் கடித்தங்கே யேது சொல்வான்.
சக்தி சடாச்சரி வீரமல்லு பொம்மு
சக்கதேவி துணையுண்டு மென்று
புத்தியாலோசனை செய்து கொண்டாரின்னம்
போயினல் வேட்டைகள் சாயு மென்றார். 3040

அதிர்ஷ்டம் நமக்குமே வாச்சு தென்றார் வேட்டை
 ஆடலாம் வாச்சுது வேளை யென்றார்.
இதம்பதமாகத் தானெழுந்தார் மெல்ல
 எழும்பியே வெளியேறி நின்றார்
குந்துக்கால் வைத்து நடந்தார்கள் சற்றே
 குனிந்து மெள்ளத் தவழ்ந்தார்கள்.
சந்தோஷ வேட்டைகள் சாய்ந்த தென்று நெஞ்சால்
 தவழ்ந்து வேகமாய் போனார்கள்.
வண்டிக்கால் தன்னில் முழைந்தார்கள் மெள்ள
 மண்டி போட்டுப் போயிருந்தார்கள் 3050

மண்டி போட்டங்கே வீரமல்லு சேருவை
 வாகுள்ள சுந்தரலிங்கமுந்தான்
கண்ட கோடாலியும் கந்தன் பகலையும்
 கலந்து சண்டைகள் செய்வோ மென்றார்.
துண்டரீகமான தண்டுவார் முண்டங்கள்
 ஒன்றுக் கொன்றங்கேயும் பேசிக் கொண்டார்
வீரியமாய்ச் சண்டை செய்வோ மென்றார் ரண
 வேட்டைகளாட விடியு மென்றார்.
பாராக்காரரைக் குத்தி நின்றனந்தப்
 பார்த்திபன் சுந்தரலிங்கமுந்தான் 3060

கூடாரந் தன்னிலே போய் முழைந்தார் அங்கே
 குத்துவிளக் கெல்லாம் தானணைத்தார்.
பாடுகள் கேடுகள் செய்கிறானே அங்கே
 பட்டாள மேசரைக் குத்துறானே.
எடுத்த ஈட்டி குலுக்குறானே வலு
 எத்தனை சோஷரைக் குத்துறானே
படுத்த சாய்ப்பிலே சாத்துறானே அசல்
 பட்டாணிமார்களை வெட்டுறானே
விடியக்கால வேளை யிருட்டினிலே அங்கே
 வேட்டை முழுவேட்டை வாச்சுதென்று 3070

நொடி நொடிக்கு முன்னேரத்திலே அங்கே
 நூறுசனம் போலே பாடாச்சு,
எத்தனை சோஷரைக் குத்துகிறார் தம்பி
 கத்தியினால் வெட்டிச் சாய்க்குகிறார்
ரத்தங் குபீரென்று எழும்பிடவே கன
 சுத்த வீரர்கள் மடிவாச்சு

மல்தார் அமல்தார் சீமை தாரும் கெடி
மன்னராம் கும்பினிப் பட்டாளம்
கால்கள் பதறிடக் கைகள் பதறிடக்
கடுங்கோபங் கொண்டு தானெழுந்தார் 3080

அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத் தென்று
அக்கினி மேசரெழுந்து நின்ருர்.
நித்திரையால், மோசம் போனேமென்று துரை
கத்தி வெடிகளைத் தானெடுத்தார்.
பல்லைக் கடித்தங்கே தானெறிந்தார் துரை
பட்டாக் கத்தியைத் தானெடுத்தார்.
கொல்லென்ற சப்தமும் கேட்குதென்ருர் இங்கே
கூக்குரல் சப்தங்களாகு தென்ருன்.
மாத்தானும்[108] வந்து விழுந்து விட்டார் என்ன
மாயமோ வென்று மனது நொந்தார் 3090

தீர்த்தானே பீரங்கி நானூறு முன்னூறு
தீரனும் பிற்கட்டு மேசருமே
மின்வெட்டி மின்னது ஆர்த்தாப் போலங்கே
மின்னியிடிகள் விழுந்தாப் போல்
முன்னேறிக் குண்டு பறிந்திடவே துரை
மன்ன ரெல்லாரும் மயங்கிடவே.
சாராய வெறி யேறிடவே அங்கே
தன்படை மாத்தான் படை தெரியாமல்
வீரியமாகவே ஒன்றுக் கொன்று சுட்டு
வெடிகள் போட்டு மடியு தய்யோ. 3100

ஒன்றுக் கொன்று தானே வெட்டிக் குத்திச் சுட்டு
உருண்டு போகுதே பட்டாளம்.
மண்ணும் விண்ணும் செந்தூள் தான் பறக்க
வெடிவார் பண்ணிச் சப்தம் முழங்கிடவே
மூடவராக விழுவோரும் தலை
மூளை சிதறி விழுவோரும்
குடல்கள் தலைகள் விழுவோரும்
ஈரல் குலை தெரித்து விழுவோரும்
முடிகள் சிதறி விழுவோரும் வெகு
மோசங்கள் வந்ததே யென்பாரும்

துடை யொடிந்து விழுவோரும் வலு
சோஷர் துடித்து விழுவோரும்

அக்கினி மேசர் தட்டுகிருர் வலு
அநியாய மோசங்கள் வந்த தென்ருர்
மக்காளித் துரையும் தான் எழுந்தான் கந்தன்
பகடையைச் சுட்டு மலத்தி நின்ருன்.
கந்தன் பகடை மடிந்திடவே சண்டை
இந்த விதமாய் நடந்திடவே [109]
வந்த விதி வந்த தானுக்கால் இன்னம்
பிந்தி ஆலோசனை செய்வதென்ன. 3120

மாதிரிக்காரன் வீரமல்லு சேருவை
மன்னவன் சுந்தரலிங்கமுந்தான்
சாதுரிய மிது போது மென்று நாமுந்
தப்பிப் பிழைத்திட வேணு மென்று
தப்பிப் பிழைத்தங்கே போறதற்கு நாமும்
எப்படித்தான் வெளி யேறுவது ?
எப்படித்தான் நாமும் போவோமடா படை
எள்ளுப் போட இடமில்லையடா
தனித்தாலோசனை பேசலுற்ருர் பின்னும்
மனத் தைர்யமாகலுற்ருர் 3130

பிணத்தோடே பிணமா யுருண்டு தம்பி
பேசாமல் போருரே வேகங் கொண்டு
எத்தனை தூரமிருக்கு தென்று நெஞ்சால்
எப்படித்தானும் தவழ்வோ மென்று
செத்த பேருடுப்பைத் தானுரிந்தார் தம்பி
சிப்பாகிமார்போல வேஷங் கொண்டார் [110]
சுந்தரலிங்கம் வீரமல்லு சேருவை
தந்திரம் பாருங்கள் நல்லோரே.
விந்தையாக நடந்தாரே தலை
மேலேதான் தொப்பியும் வைத்தாரே 3140

வேலெடுத்தார் கையில் வெடியொடுத்தார் தோளில்
வேடிக்கையாகவே வைத்துக் கொண்டார்.
மால்தாரி [111] வேஷங்கள் போட்டார்கள் மெள்ள
வாரதற்கு வழி பார்த்தார்கள்.
பட்டாளத்தைத்தான் விலக்கிக் கொண்டே கூளப்
பாளையத்தூடே நடந்து சென்ருர்.
கட்டபொம்முதுரை தான் வளர்த்த ரெண்டு
காளை வருவதைப் பாருமையா

பாராக்காரர் முன்போகாமல் அந்தப்
பட்டாள மேசரைப் பாராமல் 3150

பீரங்கி மேசரை ஒதுக்கியல்லோ மெள்ள
பேசாமல் போறதை பாருங்களே.
பழிகள் மோசங்கள் வந்திடு மென்றுமே
பயமுமெல்லளவில்லாமல்
வெளிகள் பார்த்து வெளியேறி இரண்டு
வேங்கைப் புலிகள் போல்தானும் வந்தார்.
கந்தன் பகடையைத் தோற்றே மென்றார்.
அவர் கண்ணை பிசைந்துமே நொந்து கொண்டார்.
சுந்தரலிங்கம் வீரமல்லு சேருவை
தொங்கலில் போறார்கள் சிங்கேறுகள், 3160

விடிந்து போச்சு நடவு மென்றார் நிலம்
வெளுத்து உதைய மாச்சுதென்றார்
கடுநடையாகத்தான் வரவே அங்கே
கண்ட சனங்கள் விலகிடவே
பாதை வழிகள் கடந்தார்கள் அங்கே
பாஞ்சைப் பதிநகர் சேர்ந்தார்கள்.
போதரவாகக் கொலுவிருக்கும் கட்ட
பொம்முதுரையைப் பணிந்தார்கள்.
நாடி நடந்தங்கே சென்றதுவும் வழி
கூடி நெஞ்சாலே தவழ்ந்ததுவும் 3170

சட்டமாய்த்தாவு பரித்ததுவும் அங்கே
தானே பதிகளிருந்ததுவும்
பாடாவிதியாகப் போனதுவும் அங்கே
பட்டாளந் தன்னையுங் கண்டதுவும்
பட்டாளம் பீரங்கி விட்டதுவும் சோஷர்
பாரு மெட்டுகள் நின்றதுவும்
விடியக் காலத்தில் வெள்ளி உதித்தபின்
வேந்தனு மக்கினி மேசர் துரை
படுத்து நித்திரை செய்யயிலே அந்தப்
பட்டாள மேசருந் தூங்கையிலே 3180

கூடாரந்தன்னில் முளைந்ததுவும் அங்கே
குத்து விளக்கை அமர்த்தியதும்

காடுகலைத் தங்கே வேட்டைகள் செய்ததுவும்
கைகலந்து சண்டை செய்ததுவும்

கைகலந்து சண்டை செய்யயிலே அப்போ
கந்தன் பகடை இறந்ததுவும்

மெய்யாகச் செய்தி விளம்பினார்கள் வெகு
விஸ்தார மாயுரை செய்தார்கள்.

கந்தன் பகடை மடிந்த சமாசாரங்
கட்டபொம்முதுரை தான் கேட்டு 3190

சிந்தை கலங்கி மனது நொந்தார் அய்யோ
சொந்தம் பாராட்டி வளர்த்தே னென்றார்.

தன்னிமையாக வளர்த்தே னென்றார் நல்ல
சமர்த்துக்காரப் பகடை யென்றார்.

அநியாயமாக மடிந்தானே அவன்
சொன்ன சபத முடிப்பானே.

எதிரிகள் வந்து எதிர்த்து விட்டால் அதற்கு
ஏற்ற கத்தி தானுஞ் சுற்றிவிட்டால்

எதிர்த்த சாவலுஞ் சாய்ந்திடுமே அவன்
எடுத்த சாவல் கெலித்திடுமே. 3200

கந்தன் பகடையைத் தோற்றோ மென்றார் இவனைக்
கண்ணாலே என்றைக்குக் காண்போ மென்றார்.

இந்த விதமாகக் கட்ட பொம்மு துரை
சிந்தை கலங்கி மனது நொந்தார்.

ஆங்காலம் மெய் வருந்த வேண்டாம் மருங்
கொப்பிலிள நீர் போல் சேரும்.

போங்கால மாச்சுதோ வென்றிடைந்தார் கட்ட
பொம்மு துரையும் மனது நொந்தார்.

மனது நொந்து கொலு விருந்தார் இங்கே
வந்துவிதிக் கென்ன செய்வோ மென்றார். 3210

தனது கம்பளம் கும்பாக அங்கே
சகல பேர்களும் வந்திருந்தார்.

வெற்றியாய் வந்தவன் சுந்தரலிங்கந்தான்
வீரன் வீரமல்லு சேருவைக்கும்

பத்து வராகன் பெரும்படியாய் ரெண்டு
பதக்கந் தானும் எடுத்துப் போட்டார்

முத்துப் பதித்த கடுக்கனிட்டார் முத்து
மோகன மாலையும் தான் போட்டார்.
அஸ்த்த கடகங்கள் முன்கை முதாரிகள்
விஸ்தார மாகவே தான் கொடுத்தார் 3220

கந்தன்பகடை தன் மைந்தனையும் அங்கே
சொந்தம் பாராட்டி வளர்க்கலுற்றார்
விந்தை விந்தையாகக் கம்பளத்தாரங்கே
மேலான யோசனை செய்திருந்தார்.
கும்பினியாருட செய்திகளைச் சொல்ல
அன்பாகக் கேளுங்கள் நல்லோரே.
வம்புகளாகவே ஒன்றுக் கொன்று வெட்டி
மடிந்து போச்சுதே பட்டாளம்
விடிந்து உதையமுமான பின்பு துரை
வேந்தனு மக்கினி மேசருந்தான் 3230

படுகளத்திலே வந்தன னுமங்கே
பட்டாளத்தைச் சுற்றிப் பார்த்தனனும்
பட்டாளத்துச் சனம் பட்டதையும் அந்தப்
பாராக்காரன் பட்டுப் போனதையும்
கெட்டியாய்ப் பார்த்துக் கிலேச முற்றான்.
மட்டுக் கடங்காத கோபமுற்றான்.
எந்தன் சமர்த்துகள் பாராமல் நம்மோ
டெதிர்த்துச் சண்டைகள் செய்யாமல்
வந்து களவுகள் செய்தாரே யிந்த
வஞ்சகஞ் செய்தானே கட்டபொம்மு. 3240

கட்டபொம்மு துரை சேவுகன்தான் ஒரு
கட்டையன் பட்டுக் கிடக்கிறான் பார்
பட்டாளம் நூறு சனமும் பட்டார் பொலிக்
காளை போல் தம்பூருக்காரர் பட்டார்.
மாத்தான் எத்தனை பேருவந்தான் என்ன
மாயமோ வென்று மனது நொந்தான்.
பர்த்தாலித்தினிப் போலிருக்கான் ஒரு
பையன்தான் பட்டுக் கிடக்குகிறான்.
எத்தனை பேரை ஒருத்தன் கொல்வானென்று
எண்ணுகிறான் பல யோசனைகள் 3250

அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத் தென்று
அக்கினி மேச ரெழுந்து நின்றார்.

கண்டி சரப்பளியைப் பார்த்தான் அவன்
கன்னக் குடுமியைத்தான் பார்த்தான்.
சுண்டு வில்லுங் கையுந்தான் பார்த்தான் வலு
வண்டன் எமகால னென்றுரைத்தான்.
கத்தி வெடிகளைப் பாருமென்முன் இவன்
கக்கிசக்காரண்டா பாவி என்முன்.
சித்தான் போலே இருந்தாலும் இவன்
சேவுகத்தில் சுத்த வீரனென்முன். 3260

தூங்கன் போலே இருந்தாலும் இது
தோக்குலவார் குலம் பொல்லாது.
தேங்கினது போலிருந்தாலும் இது
சில்லவார்குலம் பொல்லாது.
எமு கெடித்தலம் தான் பிடித்த நல்ல
இங்கிலீசு வெள்ளைக் காரரல்லோ.
தூள்தூளாக்குறேன் பாஞ்சை நகரை என்று
சொன்னுனே அக்கினி மேசர் துரை.
பட்டாளத்தைப் பார்த்து பாசை சொன்னுன் அந்தப்
பாஞ்சால நாட்டிலே தீனி என்முன். 3270

மெட்டாகப் பாளையம் தான் வரவே கன
வெள்ளம் போல் சேனையும் பின்வரவே
கணிசமதாகவே பிற்கட்டு மேசரும்
கால தாமசங்களில்லாமல்
அணியணியாகவே பட்டாளமங்கே
ஆரணியாகவே மெட்டாக
வாரந்தரித்தாரே கட்டபொம்மு துரை
மன்னன் தானுபதிப் பிள்ளையுடன்
தீரனே கும்பினிப் பட்டாள மிங்கே
சேரத்திரண்டு வருகுதென்முன் 3280

எள்ளுப் போட இடமில்லாம லிங்கே
ஏகமாய்க் கும்பினி வருகு தென்முன்
முள்ளுக்காட்டு முத்து வீரணன் சேருவை
முப்பது பேருடன் தானெழுந்தான்
கட்ட பொம்மேந்திரனைத் தெண்டனிட்டான்
படை சிட்டுக்குருவிபோல் வருகுதென்முன்
சிட்டுக் குருவிபோல் வருகுதே பட்டாளம்
சீக்கிரம் வேட்டைக் கனுப்புமென்முன்

வேட்டைகளாடியே வாரோமென்று சொல்லி
வெற்றிலை பாக்குமே வாங்கிக் கொண்டான். 3290

கோட்டையும் விட்டு வெளியேறி வெகு
கோலாகலமாக முன்னேறி

வில்லெடுத்துக் கைவெடி எடுத்து ரண
வேட்டைகளாடவே போறாரே மென்று

கல்லுங் கவணு மெடுத்துக் கொண்டு தம்பி
வல்லமையாக வெளியேறி

பாட்ட மார்க்கத்திலே மேல் புறமாகவே
நீட்டி நிமிர்ந்தங்கே போகாமல்

கூட்டங் குமிசலாய் தோணுமல் ரொம்பக்
கும்பாகக் கூடியே போகாமல் 3300

ஒன்று ரெண்டு மாகப் போறாரே ஆற்று
ஒடை வழியாகப் வாறாரே

நின்று நின்று மெள்ளப் போறாரே நெடுந்
தூரம் பார் நெஞ்சால் தவழ்ந்தாரே.

உப்பாறு ஒடையில்தான் பதுங்கி மெள்ள
ஒளிவிருந்தாரே கம்பளமும்

முப்பது பேரும் பதியிருந்தார் அய்யோ
முன்னேறிப் பட்டாளம் போகு தென்பார்

ஆரணியாகவே போகு தென்று ரதில்லை
பேரணி அக்கினி மேசருந்தான். 3310

ஈரணிக்கும்பினி முன்னே விட்டு அங்கே
எழுந்து முப்பது பேர்களுந்தான்

வார்ப்பண்ணித் துப்பாக்கி சுட்டனலும் அப்போ
மன்னவன் கும்பினிப் பட்டாளம்

நாற்பது பேரங்கே பாடாச்சு ஒரு
வாசு நாயக்கனும் பாடாச்சு.

சோஷர் பட்டாளம் தெளிவாச்சுத் துரை
மேஷர்கள் நாலுபேர் பாடாச்சு.

பாசை சொல்லித் துரை திரும்பு மென்றுனங்கே
பட்டாள மேசர் தயாரா மென்றார். 3320

சத்ரா திமித்ரம் பார்த்தீர்களோ வென்று
மத்தியான வெயில் நேரத்திலே

கத்தி வெடிகளும் தானெடுத்து அங்கே
சுத்த வீரர்கள் திரும்பு மென்றார்

பட்டாளஞ் சேரத் திரண்டிடவே அங்கே
வட்டமிட்டாப்போல் வளைந்திடவே
நெட்டுக்கு நெட்டங்கே பீரங்கிச் சப்தங்கள்
விட்டானே நானூறு முன்னூறு.
மாற்றான் வஞ்சகம் பார்த்தீர்களோ வென்று 3330
மறுகிப் பட்டாள மேசர்துரை

தீர்த்தானே அஞ்ஞூறு பீரங்கி அங்கே
செந்தூள் பரக்கத் திடீரெனவே
நடுவே வந்தவன் பிற்கட்டு மேசரும்
நானூறு பீரங்கி தானும் விட்டான்.
கடுங் கோபமாக பட்டாள மேசரும்
கல்லு வெடிகள் நெரித்து விட்டார்.
குபீரென்று சப்த மெழும்பிடவே அண்ட
கோளந் திடுக்கிடவே பயந்தார்.
விபரீதச் சண்டை நடந்திடவே கல்லு
வெடிச் சப்தங்கள் கொண்டிடவே 3340

செப்புத் தாரையாகப் போச்சுதே கம்பளச்
சேருவை முப்பது பேர்களுந்தான்.
முப்பது பேர்களும் பாடாச்சு அங்கே
மொட்டைப் பரம்பெல்லாம் தூளாச்சு.
வெந்து நீராகவே தான் போச்சு அய்யோ
செந்த வீடு போல தூளாச்சு.
பந்தி பந்தியாகக் கும்பினிப் பட்டாளம்
பாஞ்சால நாட்டுக்குச் சென்றதுவே.
பூலோக மாரென்றுமே பட்டாள மேசரு
மேலான பாஞ்சைக்குப் போவோ மென்றார். 3350

ஆலோசினையாகப் பிற்கட்டு மேசரும்
அக்கினி மேசரும் துருசெனவே
கரிகள் பரிகள் நடத்திடவே ஒட்டகைகளுஞ்
சோஷர்களும் மல்லர்களும்
நெரு நெரென்றங்கே பாஞ்சால நாட்டிலே
நெருங்கி வந்ததே பாளையமும்
பாளையம் வந்து இறங்கினார்கள் அந்தப்
பாஞ்சை நகரத்தைப் பார்த்தார்கள்.
வாளை எடுத்துரை விட்டார்கள் துரை
மார்களும் பல்லைக் கடித்தார்கள். 3360

கோட்டைக்குத் தென்புறமாகவே தான் பச்சைக்
 கூடாரஞ் செய்து இருந்தார்கள்.
காட்டுப் பாராக்களுந் தானிறுத்திச் சுத்தி
 கோட்டை கட்டுப் போலே தானிருந்தார்.
பார்த்திபன் கும்பினிப் பாளையத்தைச் சுத்திப்
 பாராக் காரரைத் தானிறுத்தி
சாத்திர வேதப் படியாக வெகு
 நேர்த்தியாய் கும்பினிப் பட்டாளம்
பட்டாள மேசரொரு புறமாம் அசல்
 பட்டாணி மார்களொரு புறமாம். 3370

வெட்டுந் துரைமார்களோர் புறமாம் சோஷர்
 மெட்ட்டு மெட்டாகவே தானிறுத்தி
குதிரைப் பட்டாளத்தை முன்னே வைத்தார் ரெண்டு
 கூழைவால் யானையைப் பின்னே வைத்தார்.
சதிராகப் பாளையம்மால் பார்த்து நல்ல
 தம்பூருக் காரனை முன்னே வைத்தார்.
முக மிலங்கவே பணிகளணிந்திடும்
 முன்னூறு குதிரைகள் உன்னிதமாய்
வகை வகையாகத் தானிறுத்தி நல்ல
 வர்ணப் பட்டாள மணி வகுத்தார். 3380

மல்லூகப் பல்லூகச் சகட யூகமாகக்
 கல்லு வெடிகாரர் தானிருந்தார்.
சொல்லுக் கடங்காத சோஷர்கள் மல்லர்கள்
 புல்லாங் குழல்கார வல்லவர்கள்.
மாதிரியாகவே சோஷர் வெள்ளைக் காரர்
 வங்கி அபின்களெடுத்துக் கொண்டார்.
போதரவாகவே சாதி வெள்ளைக் காரர்
 போதை லாகிரி நடத்திக் கொண்டார்.
அக்கினி மேசர் தன் சொல்படியே அங்கே
 அணியணியாகவே பட்டாளம் 3390

திக்குத் திசை களதிரும்படி ஒரு
 சேகரமாகவே பீரங்கி
வைத்து பீரங்கி நிறுத்து மென்றூர் கரு
 மருந்து போட்டங்கிருத்து மென்றூர்.
பத்தெட்டுகுண்டுகள் போட்டார்கள் வெடி
 பத்து வாயில் நெருப்பிட்டார்கள்.

பாசு பதமென்ற பீரங்கி ரொம்பத் தூசி
எழுப்புதே கோடாங்கி.
வாசித மென்றொரு பீரங்கி மடமடென்று
சத்தம் விளங்கிடவே 3400

கோடை யிடி போலக் குமுறுதே பாஞ்சைக்
கோட்டை மதில்கள் சிதறுதே.
நாடெங்கும் செந்தூளெழும்பு தென்றார்.
ஆடிக் காற்றுகள் தோணுதென்றார்.
படிகளெல்லாம் மதிர்ந்திட பீரங்கி
பார்த்திபன் அக்கினி மேசர் விட்டான்.
நொடி நொடிக்கு முன் நேரத்திலே கல்லு
வெடிக்கும் பீரங்கி தான் விடுத்தார்
என்னுப் பொறியுதே பாஞ்சையிலே இங்கே
ஏவிடுங் குண்டுகள் தன்னாலே 3410

புள்ளுப் புருக்களும் தண்ணீரருந்தாமல்
போகுதே அவ்விடம் தானும் விட்டு
மத்தியான வெயில் நேரத்திலே சண்டை
மூட்டுகிறான் தீயை மூட்டுகிறான்.
பத்தியெரியுதே பாஞ்சைப் பதியிலே
பட்டப் பகலுச்சி நேரத்திலே.
கரிகள் பரிகள் மிரண்டோட அங்கே
கட்டிய ஒட்டகம் தான் மிரள
நரிகளும் ஓடி வருகுதென்றார் பேய்
நாய்களும் வந்து உறுமுதென்றார் 3420

காகம் பறக்காத கோட்டையிலே அங்கே
ஏகமாய்ச் சண்டை நடந்திடவே
தாகஞ் சகியாமல் சோஷர் வெள்ளைக்காரர்
தேகம் படபடென்றாடிடவே
தண்ணீர் தண்ணீரென்று தான் புலம்பி அங்கே
கண்ணீர் ததும்பி மனங்கலங்க
புண்ணுக்குத் தின்ன உள்நா வரண்டவர்
போலவே தாகங்களாகு தென்றார்.
அப்போது கும்பினி அக்கினி மேசரும்
எப்படியோசனை செய்தனராம் 3430

கொப்பரையிலுள்ள சீமைச் சாராயமும்
சிப்பாகி மார்க்குக் கொடுத்தார்கள்.

கள்ளுச் சாராயங் கலந்தங்கே சோஷர்கள்
எல்லோரும் தின்களருந்தினராம்.
துள்ளித் துள்ளிக்குதி போடுவராம் சோஷர்
மல்லுக் கட்டி விளையாடு வராம்.
தாகமுந் தீர்ந்து இளைப்பாறிச் சுக்குத்
தண்ணீர் குடித்துத் தகையாறி
மேகம்போல் சத்த முழங்கிடவே சோஷர்
வேகமாய் கவாத்துப் பழகிடவே. 3440

தம்பூரு மேளங்கள் வீணைகள் சாலர்கள்
சத்தமேகம் போல் முழங்குகின்றார்.
கும்பினிப் பாளையம் கெம்பீரமாகவே
சம்ரதாயச் சண்டை செய்தனராம்.
மூஞ்சி முகமுங் கடு கடுத்தார் அங்கே
பாய்ந்து பாய்ந்து வெடிசுட்டலுத்தார்.
பாஞ்சாலங் கோட்டை மேல் வந்து விழுந்ததே
பார்மன்னன் அக்கினி மேசர் குண்டு.
ஆகாசம் பூமியதிர்ந்திடவே குண்டு
ஆர்த்தானே அக்கினி மேசருந்தான். 3450

ஏகமாய் பீரங்கி குண்டு தைத்து மதில்
இடிந்து போகுதே அந்நேரம்.
மாலைநேரப் பொழு தாகுதென்றுமழை
மாரியிடிபோல் முழக்கி விட்டான்.
மூலைக் கொத்தளந் தகர்ந்திடவே வெடி
முன்னூறு நானூறு தானும் விட்டான்.
அஸ்த மனவேளை யாச்சு தென்று துரை
அக்கினி மேசராலோ சினையாய்
சித்த மகிழ்ந்திடக் கும்பினிப் பாளையம்
சிப்பாகி மார்களைத் தான் பார்த்து 3460

நிற்கட்டும் சண்டை நிறுத்து மென்றார் பாரா
நேமித்து உசாராக நில்லு மென்றார்.
பிற்கட்டு மேசரும் பீரங்கி மேசரும்
பின்னுள்ள சோஷர்கள், மல்லர்களும்,
வேளைக்குவேளை திரசுடனே[112] பாரா
மெட்டாகப் பட்டாளம் நின்றனராம்.
நாளைக்கங்கே கன மோடிகளாய்ச் சண்டை
நடத்துவோ மென்று தானுரைத்தார்.

இப்படி எத்தனை நாளாகத் துரை
ஏழெட்டு நாளாய் சண்டை செய்தார்கள். 3470

மூப்பது நாள் சண்டை செய்தாலும் வெகு
மூர்க்கமாய் பீரங்கி சுட்டாலும்
பாஞ்சைப் பதியிலே கட்டபொம்மு துரை
பவிசுடன் கொலு விருப்பதுவும்
நாஞ்சி நாடுமுதல் போரதுவும் வல்ல
நாட்டு மலைவேட்டை யாடுவதும்
வேட்டைகளாடித் திரும்புவதும் தம்பி
ஓட்டம் நடையாய் வருவதுவும்
லாட்டு மேலாட்டு வரட்டு மென்று துரை
ராஜன் மகிழ்ந்து கொலுவிருந்தான். 3480

ராத்திரி காலத்தில் தானும் புறப்பட்டு
நாடெங்கும் கொள்ளையடிப்பதுவும்
பார்த்தாலித்தனை கோட்டைக்குள்ளே
நேர்த்தியதாகக் கொலுவிருக்கான்.
பாளையம் வந்திருக்கு தென்று சற்றும்
பயமும் எள்ளளவில்லாமல்
நாளுக்கு நாள் கொள்ளையடிப்பதுவும் பாஞ்சை
நாட்டிலே வந்து கொலுவிருப்பதுவும்
பீரங்கிச் சத்தம் எழும்பு தென்று மனம்
பேதலியாமலே கட்டபொம்மு 3490

வீரிய சண்டைகள் செய்வோமென்றார் ரண
வேட்டைக் கெழும்பிட வேணு மென்றார்.
இப்படியாகவே கட்டபொம்மு சற்றும்
எண்ணாமல் கோட்டைக் குள்ளே இருந்தார்.
அப்போது கும்பினி அக்கினி மேசரும்
ஆலோசனைகளு மேது சொல்வான் ?
எத்தனை நாள் சண்டை செய்தாலும்
நாமும் எத்தனை குண்டுகள் போட்டாலும்
சத்ராதி கோட்டைக்குள்ளே இருக்கான் வலு
மித்திர வஞ்சக மாயிருக்கான். 3500

சற்றுங் கவனியாமல் கட்டபொம்மு அவன்
சுத்தவிசுவாசி போலிருக்கான்.
அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத் லவுண்டி
ஆகட்டும் நாளைக்குப் பார்ப்போ மென்றான்.

வீணரசு கொண்ட கம்பளத்தாரை நான்
வெள்ளரிக்காய்போலே கொத்துகிறேன்.
மூணு நாளைக்குள் மடக்குகிறேன் அவன்
காணியாச்சி கோட்டையைப் பிடிக்குகிறேன்.
நொக்கு நொக்காக நொறுக்குகிறேன் சப்தம்
நூறு நாருயிரம் தீர்க்குகிறேன். 3510

அக்கினி போல் பத்தி எரிக்கிறேன் நானை
அமனைப் பொறி போல பொறிக்குகிறேன்.
எங்கே யிருக்கிருன் கட்டபொம்மு அவன்
என்ன தைர்யமாயிருக்கான்?
கங்குலிருள் பொல்லா நேரமடா பாவி
கட்டு மெட்டாப் பாரா நில்லுமென்ருர்
நில்லடா நில்லடா பாவி என்று பாரா
நேமித்து உசாராக நில்லு மென்ருன்,
சொல்லிவாய் மூடி முடிக்கு முன்னே அங்கே
சோறு கறியாக்கி உண்டனரும். 3520

சம்ரதாயமுள்ள கும்பினிப்பாளையம்
கெம்பீரமாக இருந்திடவே
செம்பாதி ராத்திரி வேளையிலே அங்கே
சேரத் திரண்டல்லோ கம்பளந்தான்
கும்பாகக் கூடியே பேசுகிருர் நல்ல
தம்பி ஊமைத்துரை கெம்புகிருர்
அந்நேரந் தானுபதிப் பிள்ளையு மங்கே
என்ன ஆலோசனை சொல்லினராம்.
இன்னிமேல் பாஞ்சை நகரத்திலே நமக்கு
இருப்பிடங் களுமில்லை என்ருர். 3530

கட்டுங் காவலான பாஞ்சால நாட்டிலே
காகம் பறக்காத கோட்டையிலே
சிட்டுப் பறக்காத பாஞ்சால நாட்டிலே
முட்டிக்குனிந்தாற் போலாச்சு தென்ருர்.
நம்மோ டெதிரிகளில்லை என்று பாஞ்சை
நாட்டில் துரைத்தனஞ் செய்திருந்தோம்.
பொன் வாடை வீசிய பாஞ்சால நாட்டிலே
பிணவாடை வீசுதென உரைத்தார்.
எமனைப் போலவே சோஷர் வெள்ளைக்காரன்
எத்தனை கும்பினி வந்திருக்கான் 3540

பூமி யதிருதே பாஞ்சால நாட்டுக்குப்
 பொல்லாங்கு மெத்தவே வந்த தென்றான்.
நேத்து முதல் நாளைச் சண்டையிலே வெடி
 நெறித்துப் பீரங்கி போட்டதினால்
காத்தும் புகைமண்டி யெழும்புதே கோடை
 காலத்திடி போல் முழங்குதே!
மூர்த்தண்டமாகக் குமுறுகுதே கோட்டை
 மூலைக் கொத்தளந் தகருகுதே!
சாதுரியமினி போதுமையா நாமும் 3550
 தப்பிப் பிழைத்திட வேணுமையா.

சக்தி சடாச்சரி வீரமல்லு பொம்மு
 சக்கதேவி அம்மன் தன்னருளால்
இத்தனை காலமும் பாஞ்சை நகரத்தில்
 சுத்த வீரத்தனம் செய்திருந்தோம்.
சம்ரதாயஞ் செய்யக் கூடாது இனி
 கும்பினியார் பகையாகாது.
கும்பினியார் பகையாகாதையா நாமும்
 கோட்டை விட்டுப் போக வேணுமையா.
வீணான பொல்லாங்கு வந்ததென்றான் வெளி 3560
 யேறியே போவது நல்ல தென்றான்.

தானாபதிப் பிள்ளை சொன்ன சொல்லை அப்போ
 தாஷ்டீகன் ஊமைத்துரைசாமி
கையைக் கடித்து உதறினாரே ரெண்டு
 கண்ணும் நெருப்புப் பொறிபரக்க.
வையகத்தில் சுத்த வீரனென்றால் இந்த
 வார்த்தையுரைப்பாயோ யெந்தன் முன்னே.
கூட்டங்கூடி வந்த படைகுருவி மேல்
 வேட்டைக் கெழும்பிட வேணுமென்றார்.
நாட்டிலே தீப்பட்டெறிந்தாலும் பாஞ்சைக்
 கோட்டை விட்டுப் போவதில்லை என்றார். 3570

சிட்டுப் பறக்காத பாஞ்சால நாட்டிலே
 சிவப்புச் சட்டைகளேது பாவி.
கட்டுங் காவலான பாஞ்சை நாட்டிலே
 கருப்புச் சட்டைகளேது பாவி.
காகம் பறக்காத கட்டபொம்மு வென்றால்
 கருங்குருவியும் லாந்தாதே.[114]

ஏகமாய் வந்த படைகுருவி மேல்[115]
வேகமாய் வேட்டைக் கெழும்பு மென்றான்.
வானமும் பூமியு மதிர்ந்திடவே நானும்
தானுமே இப்போது அங்கே சென்று 3580

ஆனாலு மாகுது போனாலும் போகுது
அடிக்கிறேன் பாரொரு தம்மாக.
சீக்கிரம் வேட்டைச் சவாரி யென்றான் தம்பி
சேவுகர் சேர எழும்பு மென்றான்.
மூக்கிலே கோபமிருக்கும் ஊமைத்துரை
முன்னேறிப் பாய்ந்தாரே அந்நேரம்.
சின்னத்தளவாய் பெரிய தளவாயும்
பொன்னு சிவத்தையா முத்தையாவும்
மன்னன் குமரய்யா வேடபட்டி துரை
மாப்பிள்ளை நாயக்கர் வெள்ளையாவும் 3590

கம்பளச் சேருவைக் காரரிலே தம்பி
ஐம்பது பேர்கள் தயாராக
சம்ரதாயம் வெளியேறி விட்டார், கதை
சமர்த்தைக் கேளுங்கள் நல்லோரே.
ஈட்டி சமுதாடு கத்திகளும் எரி
ஈட்டிகளும் பலா ஈட்டிகளும்
தாஷ்டீகர் கையிலெடுத்துக் கொண்டு பாஞ்சைக்
கோட்டையும் விட்டு வெளியேறி
ராத்திரி காலத்தில் பத்துப் பதினைந்து
நாழிகையான தோர் வேளையிலே 3600

காத்தாடி போல் விசை கொண்டுமே தம்பியும்
கூத்தியாக் கள்ளன்[116] போல் வேகங் கொண்டு
காட்டுப் பாராவுங் கடந்தன ராமிங்கே
மாட்டு மாட்டென்று எழும்பினராம்.
ஈட்டி எடுத்துக் குலுக் கினராம் குதி
போட்டுக் குலவைகளிட் டனராம்.
மன்னன் ஊமைத்துரை மீசைமேல் கைபோட்டு
வல்லயம் நேரிசம் தானெடுத்தார்.
உன்னி யெழுந்து குதிபோட்டார் செங்கை
தன்னில் பட்டாக்கத்தி தானெடுத்தார். 3610

அந்நேரந்தானங்கே கும்பினி யாருட
அக்கினித் துரை பட்டாளம்

இந்நேரந் தன்னில் சனியன் வந்தானென்று
எழுந்து வார்ப் பண்ணும் வேளையிலே
சாமஞ் சரிசாம வேளையிலே தம்பி
ஆங்காரமாகவே தானடித்தார்.
ஊமைத்துரை கையைக் கடிக்குகிறான் தம்பி
வீமனைப் போல் விழுந்தடிக்குகிறான்.
சோஷர் பட்டாளத்தைத் தான் வளைந்தான் துரை
மூசுமூசென்று நுழைந்து விட்டான். 3620

கேசரி மயிரைப் பிடிக்குகிறான் தாடி
மீசையில் கைபோட்டு இழுக்குகிறான்.
சுத்த வீரத்தனங் கூறிடுவான் எட்டிக்
குத்தடா குத்தென்று ஏவிடுவான்.
எத்திசையும் புகழ் சக்க தேவிக்கிது
ஏற்றகிடா வென்று வெட்டிடுவான்.
வெற்றி விசயன் சிவத்தையா முத்தையா
வேளையிது நல்ல வேளை யென்று
சக்தி உமையவள் பாதத்தைச் சிந்தையில்
தானினைத்தார் சுத்த வீரரெல்லாம். 3630

வீரமல்லு துணை யென்றுமே மந்திரவாள்
வேந்தர்கள் கையிலெடுத்தார்கள்.
சூரனெனும் சோஷர் மேசர் தனையுமே
துண்டந் துண்டஞ் செய்ய வேணு மென்றார்.
என்று ஊமைத்துரை மெய்யாகத் திட
ரென்று சிவத்தையா கையாலே
குன்றுமலை போல பட்டாளந் தன்னையும்
கொன்று விட்டார் சிவத்தையாவும்,
போடு போடென்று குதிபோட்டு அங்கே
போராடிக் கொக்கரித்தே யடித்தார். 3640

சாடு சாடென்றுமே சோஷர் பட்டாளத்தை
தானேயடித்து உயிர் வதைத்தார்.
வைரிபோல் பரந்தடிக்குகிறான் உச்சி
மயிரைப் பிழுத்துப் பிடிக்குகிறான்.
உயிரை எமன் போல் குடிக்குகிறான் வலு
ஊமைத்துரை பறந்தடிக்குகிறான்.
கெருடப் பக்ஷிபோல் பறக்குகிறான் பருங்
கரடி போல் விழுந்து உழப்புகிறான்.

குறடு போல் பிடிக்குகிறான் அங்கே
கோபமாய் ஊமைத் துரை தானும். 3650

சின்ன வீரலெக்க னென்றொரு கம்பளச்
சேருவைக் காரனிதி லொருவன்.

முன்னேறிக் கும்பினிப் பட்டாளஞ் சோஷரை
முடுக்கிக் குத்தியே கொல்லுகிறான்.

பல் கடித்து உதட்டை மடிக்குகிறான் அடா
மல் கெட்டவா என்று துடிக்குகிறான்.

வல்லையத்தால் குத்தியிடுக்குகிறான் கீழே
மலத்தி மேலே இருக்குகிறான்.

கொழுப்பு கீழே சரியு தென்றார் குடல்
தெரியுதே ரத்தம் பரியு தென்றார், 3660

நெளிக்கும் உடல்களழியு தென்றார் பழி
நேரு தென்றார் கழுகேறு தென்றார்,

சின்ன வீரலெக்கன் செய்யும் சம்ரதாயத்
தீர்க்கத்தை மூர்க்கத்தை என்ன சொல்வேன்,

என்ன சொல்வேனந்தச் சோஷர்களைக் குத்தி
இழுத்து நிலத்திலே தான் போட்டு

சோஷர் பிடரியில் கடிக்குகிறான் தலை
குலுக்கி ரத்தங் குடிக்குகிறான்.

மீசை முறுக்கிக் கை எடுக்குகிறான் ரண
வேட்டைகளாடிச் சண்டை பிடிக்கிறான். 3670

கும்பினி சனத்தையும் அழிக்கிறான் எதிரி
குத்துக்கும் வெட்டுக்கும் கெலிக்குகிறான்.

அம்புலிமான் போல குதிக்கிறான் சம்ர
தாயத்திலடிக்கு கிறான்

மைக்காரன் என்றொரு கைக்காரன் துரை
மன்னவன் சேவுக வில்காரன்.

விகிதக்காரன் சின்ன வீரலெக்கன் சண்டை
வேடிக்கை பாருங்கள் நல்லோரே.

தட்டாப்பாரை சின்ன கெட்டிக் காரன் வேட
பட்டித்துரையொரு கைக்காரன். 3680

வட்ட மிட்டாடிச் சிலம்புவரிசையில்
கொட்டாப் புளி என்றொரு ஆசாரி

எட்டுப்பேர் சோஷரை எட்டுப்பேர் மேசரை
எட்டியொரு குத்தினாலே குத்தி

பொட்டியும் மூடியும் போலவே தானங்கே
வெட்டி எறிகிறான் பின்னாலே
முத்தன் பகடையும் பொட்டிப் பகடையும்
மைத்துன மார்களிரு பேரும்
கத்தி வீசிக் கொண்டு காலனைப் போலவே
காங்கு கூடாரத்தில் தான் நுழைத்தார். 3690

சுத்தி அடித்தாங்கே பார்க்கிறார் துரை
கத்தியைப் பாாத்தங்கே எடுக்கிறார்.
எத்தனையோ சீமைச்சாரயக் குத்திகள்
அத்தனையும் பூசைதான் கொடுத்தார்.
தேசுகி வாசுகி தான் மடிந்தார் அங்கே
சீமைத்துரைகளைத்தான் மடித்தார்.
மேசர்கள் சோஷர்தனை வதைத்தார் துரை
ராசரையுங் குத்தி மேலிழுத்தார்
காரை நிகரொத்த தம்பூராக்காரனைக்
கணத்தில் தானும் மடித்தார்கள். 3700

சாரையைப் போட்டு அடித்தாப் போல் துரை
மாரையுங் கொல்கிறார் நல்லோரே.
பொல்லாத மாதிகன் பொட்டிப் [117] பகடையும்
பொரி வைத்துப் பொறி தட்டினாப் போல்
மல்லருடனே போராடுகிறான் அங்கே
மல்லுக்கட்டி இழுத்தாட்டுகிறான்.
கை கோத்து மல்யுத்தம் செய்யயிலே எதிரி
காலை வாரி விட்டு மேலேறி
நெய்க்குடம் போலந்தச் சோஷர் வயிற்றையும்
நேரே கிழித்து அப்பாற் குதித்து 3710

குதிரைலாயத்தில் நுழைத்து விட்டான் வெள்ளை
குதிரைக்காரனைக் குத்திவிட்டான்.
குதிரைக்காரப் பறையனையுங் குத்தி
சதிருடன் கொள்ளை தானடித்தான்.
வெள்ளைக் குதிரையும் தும்பு விட்டான் தம்பி
வெள்ளிகட்டி வெடி கொண்ணையிட்டான்.
வெள்ளைக்குதிரை மேல் சீனி வைத்தான் தம்பி
துள்ளுக் குட்டி போலேதானும் வந்தான்.
வைபோகி[118] மட்டத்தைத் தான் பிடித்துக் கடு
வாளமும் சீனியும் வைத்திறுக்கி 3720

மைக்காரப் பாண்டியன் ஊமைத் துரை முன்னே
வந்து சலாம் சொல்லிக் கொண்டானே.
அந்நேரம் ஊமைத்துரை வீரபாண்டியன்
அச்சு மட்டத்தினிலேறிக் கொண்டார்.
சன்னதம் வந்தாற் போல் வெள்ளைக் குதிரை மேல்
சாரி நடத்துரார் நல்லோரே.
எள்ளுப் பொறிப்போல பொறித்திடென்று தேங்காய்
சில்லுச் சில்லுப் போகத் தானடித்தார்.
துள்ளித் துள்ளிக் கொண்டு ஊமைத்துரை வெடி
சுட்டானே சப்தம் பளிச்செனவே 3730

செம்பாதி ராத்திரி வேளையிலே தம்பி
கம்பளத்தார் கொள்ளை தானடிக்க
கும்பினித் துரைகளும் எண்பது பேரங்கே
வம்புகளாக மடிந்தார்கள்.
மேஷர்கள் சோஷர்கள் நாலாயிரம் பேர்கள்
நாசமாய் போச்சுதே பட்டாளம்.
வாசு நாய்க்கர் அமல்தார் சமைதார் நானூறு
முன்னூறு பாடாச்சு.
கிண்ணிப் பட்டாளம் கிரண்டப் பட்டாளத்தில்
எண்ணூறு சிப்பாகி பாடாச்சு. 3740

கொம்புக் காரருடன் தம்பூருக்காரர்
நிம்பர்கள்[119] பத்துப் பேர் பாடாச்சு.
ஐம்பதறுபது எண்பதெழுபது
அச்சு மட்டங்களும்[120] பாடாச்சு
பட்டாள மேசரும் பட்டாள சோஷரும்
பாதிக்குமேலே அழிவாச்சு
கெட்டகுடி கெட்டு[121] தாளுக்கால் தம்பி
ஓட்டிக்கு ரெட்டி[122] அழிவாச்சு.
சட்டைக்காரச் சோஷர் கெட்டிக்காரத் துரை
சாதி வெள்ளைக்கார ரிப்படியாய் 3750

பட்டாளஞ் சேதமாய்ப் போனதைக்
கண்டந்தப் பார்த்திபன் அக்கினி மேஷர் துரை
பாராசாரியின் மட்டத்திலேறியே
பட்டாக்கத்தியுந்தானுருவி
சாராய வெறி போட்டுக் கொண்டு ரொம்ப
வீரியமாய்க் கோபந்தான் மீறி
மாற்றான் வஞ்சகம் பார்த்தீர்களோ பாதி
ராத்திரி வேளையில் மோசஞ் செய்தான்

ஏத்த குதிரையும் கொள்ளையிட்டான் படை
　　எத்தனை பேரையுங் கொன்று போட்டான் 3760

கட்டாமி ராசுக்கோல்[123] நில்லென்றுதான் வெடி
　　சுட்டானே சப்தம் பளீரெனவே
பட்டாக்கத்தி பளீரிடவே துரை
　　வெட்டுகிருன். படை தாஜெழிய
கத்தியினுல் வெட்டித் தான் விழவே அங்கே
　　கட்டபொம்மு தம்பி வந்தெதிர்த்தார்.
உத்தமனை சிவத்தையா முத்தையா ஒன்று
　　போலக்கத்தி தானெடுத்தார்.
கத்திகள் தானும் எடுத்ததைக் கண்டந்தக்
　　கர்னல் அக்கினி மேசர் துரை 3770

வெத்திகளாகவே வந்தெதிர்த்தார் செய
　　வீராதி வீரர்கள் தன்னுடனே.
கத்தி வெடிகளும் தானெடுத்துத் துரை
　　கண்டதுண்டஞ் செய்ய வேணு மென்று
இருவர் படைகளும் தானெதிர்த்து அங்கே
　　ஏகமாய்ச் சண்டை செய்யயிலே
ஒருவர்க் கொருவர்கள் தானும் வெட்டியங்கே
　　ஒன்ருேடொன்று சமர் செய்தார்கள்.
ஊமைத்துரைக்குப் புயத்தில் வெட்டு, அங்கே
　　உச்சிதமா யக்கினி மேசர் கையால் 3780

வீமன் கருத்தையா மேலே வெட்டு நல்ல
　　வேடபட்டித்துரை மார்பில்வெட்டு,
சின்னத்தளவாய் பெரியதளவாய்க்குக்
　　கன்னத்தில் காயம் கழுத்தில் வெட்டு
மன்னவன் சம்பளச் சேனைதளங்களும்
　　வந்து நின்ருர் மனம் நொந்துழைந்தார்.
அப்போது கருப்பணக் காலாடி தானங்கே
　　சிப்பாகி மார்கள் படையுடனே
ஒப்புடனே தப்பி ஓடிப் போகாமலே
　　உறுதியாகவே நின்று கொண்டான். 3790

அக்கினி மேசருடனெதிர்த்தான் தம்பி
　　அவனடிக்க இவனடிக்க
முக்குக்கு முக்கு[124] விரட்டி விரட்டி முடுக்கித்
　　துரத்தியடிக்கையிலே
கருப்பன் குடலுஞ் சரிந்த தென்ருன் அந்த
　　காலாடி கையு முறிந்ததென்ருன்.

சரிந்தகுடலை வயிற்றுக்குள் வைத்துமே
சல்லாச் சோமனை மேலே சுத்தி
வரிந்து வரிந்து மாராப்புக் கட்டியங்கே
இருந்தானு மெழுந்து நின்றான். 3800

விரைந்து கும்பினிப் பட்டாளந்தன்னையும்
அரிந்து தானுங்குவிக்கிறான்.
குதிரை ஏறி வரும் சோஷர்கள் தன்னையும்
குத்தியே வெட்டி இழுத்திடுவான்.
பதறியே பட்டாளந் தன்னோடேயந்தப்
பாதர் கருப்பன் குலவையிட்டான்
"பாரடா பாரடா" என்று சொல்லியவன்
பாஞ்சைப்பதி நோக்கித் தானடந்தான்.
"ஆரடா என் முன்னே வாரவனுரெ"ன்று
ஆற்று வழியூடே தானடந்தான். 3810

ஆற்று வழியூடே போகயிலே யவன்
சேற்றிலே கால்பட்டுத் தான் மடிந்தான்.
கம்பளத்தார்கள் முறிந்தோடி அங்கே
காடுஞ் செடியும் பறந்தோடி
கும்பினியார் கையில் சிக்காமல் பாஞ்சைக்
கோட்டையை நோக்கி நடந்திடவே"
ஊமைத்துரையும் புறப்படவே அங்கே
ஒண்டொடிக் காரரனைவோரும்
தாமதஞ் செய்யாமல் பாஞ்சைப்பதி வந்து
தான் சேர்ந்தார் ஊமைத் துரை தானும். 3820

காயமுந்தீர்ந்து இளைப்பாறி யென்றுங்
காப்பவள் சக்க தேவி என்று
போய்விட வேணும் வடக்கே என்று பிர
தானிப்பிள்ளை மகன் சொற்படிக்கே
வீணான பொல்லாங்கு இல்லாமல் வெளி
யேறியே போறது நல்லதென்று
தானாபதிப்பிள்ளை யோசனைகள் சொல்லத்
தனித்தளப்புகள் பேசிக் கொண்டு
என்ன விதம் வெளியேறியே போவதென்
றெண்ணுகிறார் பல யோசனைகள். 3830

மின்னல் பறக்கின்ற கல்வெடிக்காரனும்
வேங்கைப் புலிபோலே சுத்தி நிற்கான்.

பாராக்காரனுஞ் சூழ்ந்திருக்கானங்கே
பட்டாள மேசருங் கிட்டே நிற்கான்.
நீராவிக்[125] கரை யோரத்திலே பீரங்கி
நிறுத்தி அக்கினி மேசர்தானும் நிற்கான்
ஆனதினாலினி எப்படிப் போவோமென்று
ஆலோசனைகளும் செய்தார்கள்.
தானுபதிப் பிள்ளை யோசனைகள் செய்து
தனித்தளப்புகள் ஏது சொல்வார். 3840

கோட்டை வாசல் வழி போகக் கூடாதென்று
கொத்தாள நெட்டிலே தானேறி
மேட்டு வழியாக ஏணிவைத்திறங்கியே
கோட்டையை விட்டு வழி துலக்கி
இருட்டு நல்ல இருட்டிலே தானங்கே
சறட்டென்று சத்தங் கேளாமல்
கறட்டுப்[126] பொட்டிப் பகடையுந் தான் வழி
காட்டிக் கூட்டிப் போக முன்னேறி
வெளிகள் பார்த்து வெளியேறி சற்றே
விரசு[127] கொண்டு நடந்திடவே 3850

புளியந் தோப்பு நிழல் வழியே சற்றும்
பேசாமற் போறதைப் பாருமையா
பாரா மெட்டுகள் தான் கடந்து நல்
பாஞ்சைப் பதிக் கோட்டை விட்டகன்று
தாராளமாகவே தானடந்து துரை
போராரே போராரே கட்டபொம்மு.
நட நடவென்று மூர்க்கங் களாய் நல்ல
நாகலாதபுரம் மார்க்கங்களாய்
விடியக் காலங்களாச்சு தென்று விடி
வெள்ளி முளைத்திடும் நேரத்திலே 3860

நாக லாதபுரம் வந்திறங்கி அங்கே
நாலா ஆலோசனை பேசுவாராம்
"போகலாம் போகலாம் தொண்டைமான் பூமிக்கு
போகலாங் காடு வனங்களே" ன்றார்
காளையார் கோவிலுக்காடு சென்று சதிர்க்
கம்பிளி[128] போடலாம் தெம்பாக
பாளையக்காரத் துரை மகன்தான் நல்ல
பாஞ்சைப் பதி மன்னன் ஏது சொல்வார்!
பிள்ளை மகன் பிரதானிப் பிள்ளை நல்ல
தென்ளிய வானிங்கே தானிருந்து 3870

வெள்ளைக்காரர் செய்தி தானறிந்து நாளும்
　　விற்பனமாக எழுது மென்று
சிமுதமாகவே தாலீ கூடித் தெற்குச்
　　சீமையை விட்டங்கே போயினராம்
கமுதி மார்க்க மாய்த்தான் கூடி நல்ல
　　கட்ட பொம்மேந்திரன் தம்பியுடன்
வாழும் பதிவிட்டுப் போரோ மென்று எந்த
　　நாளுந் துயரங்களுண்டாகி
பாளையக்காரரனைவோரும் பெரும்
　　பாதையே கூடி நடந்தார்கள். 3880

முன்னும் பின்னுமாகப் போகையிலே வழி
　　மோசம் போனகதை என்ன சொல்வேன்.
சின்னையா ஊமைத்துரையுடனே துரை
　　மன்னன் சிவத்தையா தன்னுடனே
தன்னை மறந்தாப் போல் திக்குத்திசை தப்பி
　　தான் பிரிந்தஞ்சாறு பேர்களுடன்
கன்னிவாடி மலைச்சீமையை நோக்கியே
　　கர்த்தன் ஊமைத்துரை போயினராம்.
கட்டபொம்மு துரை சேனைத்தளம் ஒரு
　　கையாக வைகைக் கரை சேர்ந்து 3890

இஷ்ட முள்ள தம்பி ஊமைத்துரைதானும்
　　"இன்னும் வரக்காணோம்" என்று சொல்லி
"ஆகட்டும் பின்னே வரட்டு"மென்று அதற்கு
　　அப்பால் வழி கூடிப் போனார்கள்.
சேகர மான சனத்துடனே அதி
　　வேகமுடனே நடந்தார்கள்
தொண்டைமான் பூமி புதுக் கோட்டை நகர்
　　தொங்கலிலே வந்து சேர்ந்தார்கள்.
மண்டலங்கள் புகழ் தொண்டை மகராஜன்
　　வந்து எதிர் கொண்டு கண்டனராம். 3900

கண்டு உபசாரஞ் சொல்லியே தொண்டமான்
　　கம்பளத்தாருக்கு விருந்து செய்து
உண்டு இளைப்பாறிக் கட்ட பொம்முதுரை
　　துண்டரீக மாகக் கொலு விருந்தார்.
மெட்டுள்ள தொண்டை மகராசன் அந்தக்
　　கட்டபொம்மேந்திரனைத் தான் பார்த்து
கட்டுள்ள பாஞ்சை நகரம் விட்டு வந்த
　　காரணம் சொல்லிட வேணு மென்றார்

அப்போது பாஞ்சைத் துரை தானும்
அவர்க்கு அந்தரங்கச் செய்தியேது சொல்வார் 3910

"செப்பமுடன் செய்தி சொல்லுகிறே னிந்தத்
தேசத்தரசனே கேளு மெ"ன்முன்
கம்பளத்தாருடன் பாஞ்சையிலே
கண்ணசந்தனர் சாலையிலே.
கும்பினியார் பகை வந்ததினுல் நாங்கள்
கோட்டைவிட்டு வெளியேறி வந்தோம்
தென்பாஞ்சைப்பதி விட்டகன்றேம் இந்த
தேசத்தை நம்புதலாக வந்தோம்.
நம்புதலாக உதவி செய்தால் ஒருநாளும்
மறப்பதுமில்லை என்றுர். 3920

நல்லது தானென்று தொண்டை மகராஜன்
நாலா ஆலோசனை ஏது சொல்வார்.
"அல்லல் வராமலிருக்கலா மென்றைக்கும்
காளையர் கோவிலுக்காட்டிலெ"ன்றுர்.
காளையர் கோவிலுக் காடுதனில் சதிர்
கம்பளி போடலாம் தெம்பாக
பாளையஞ் செய்யப்பயமுமில்லையங்கே
பட்டாளம் கிட்டேவராதேயென்றுர்.
அச்சமில்லாமலிருக்கலா மென்றங்கே
ஆதரவு சொல்லும் வேளையிலே. 3930

உத்சாகமாகவே கட்டபொம்முதுரை
கெற்சிதமாகவே காட்டில் சென்றுர்.
செப்பமுடன் கொலு வீற்றிருந்தார் படை
சேனைத்தளங்களனை வோரும்
அப்போது தொண்டை மகராஜன்
ஆலோசனையால் மனமிடைந்து
"கட்டபொம்முதுரை நம்மிடத்தில் வந்த
காரியம் கும்பினியார் கேட்டால்
திட்டப்படிக்குப் பொல்லாங்கு வருமெ"ன்று
சீங்கிரங்காயிதம் தானெழுதி 3940

நாடு நகரு மறியாமல் பாஞ்சை
நாட்டரசன் தப்பி வந்ததுவும்
காடுஞ் செடியும் வளம் பார்த்து அங்கே
ஓடி ஒளிந்து இருப்பதுவும்
வக்கணை வைத்தங்கே முக்கியமாகவே
வரித்து காகிதந் தானெழுதி

அக்கரையாகவே கும்பினி யார்க்கல்லோ
அஞ்சலில் காயிதம் போட்டான் காண்.
அஞ்சலில் காயிதம் வந்ததைக் கண்டந்த
அக்கினி மேசரீ துரையறிந்து 3950

"வஞ்சகப்போர் செய்யும் கட்டபொம்முதுரை
மாற்றான் சமர்த்துகள் பார்த்தீர்களோ
ஏற்றமுடன் மனத்துக்கேற்றப்படி நம்மோ
டெதிர்த்துச் சண்டைகள் போடாமல்
ராத்திரி காலத்தில் ஓடி ஒளிந்தங்கே
நாடு கடந்தங்கே போயிருக்கான்,
போனாலும் விடுவதில்லை யென்று
லானமட்டும் இனி பார்ப்போமெ"ன்றான்
வீணாலே தானல்லோ பீரங்கிச் சப்தமும்
விட்டோமே கோடான கோடிலட்சம் 3960

எட்டு நாளாய் பாஞ்சைக் கோட்டையின்மேல்
வெடி சுட்டோம் கணக்குகளில்லாமல்
கட்டபொம்மு தப்பிப் போன சமாச்சாரம்
காயிதமூலமாய் நாமறிந்தோம்
கட்டாமி ராசுக்கோல் மட்டுக்கடங்காத
துஷ்டர் குறும்பை அறிவோ மென்று
பாட்டாள மேசர்க்குப் பாஷை சொன்னான் அரே
பாகி பயணம் வடக்கே என்றான்.
சிப்பாகிமார்கள் சீமையாதார் அமல்தார்கள்
சேர்ந்து வடதிசை தானேகி 3970

துப்புத்துரவு விசாரித்துக் கும்பினித்
துரைகள் வேகங் கொண்டே நடந்தார்.
மண்டலமெங்கும் நடுங்கிடவே துரை
மார்களும் கோபங் கொண்டேகினராம்.
தொண்டைமான் பூமியில் போயிறங்கித் துரை
தொண்டை மானைக் கண்டு தான்பேசி
வளருங்காளையர் கோவிலுக் காட்டையும்
வளைந்து கொண்டதே பட்டாளம்.
அழகு கட்டபொம்மேந்திர துரை மன
துழன்று பொல்லாங்கு வந்த தென்று 3980

என்ன விதியா யிருந்த தென்று அங்கே
எண்ணுகிறார் பல யோசனைகள்.
"மன்னவன் கும்பினிப்பட்டாளம் வந்துமே
அநியாயமாக வளைந்த தய்யோ.

சக்கதேவி ஒப்புத்தான் கொடுத்தாள் எந்தன்
தம்பியையும் வரக் காணுமைய்யோ.
முக்காலுந் தெய்வ முதலில்லையோ எங்கள்
முன்னோர்கள் செய்த தவ மில்லையோ.
தெய்வமே நானென்ன செய்வேனெ"ன்று அவர்
கைதனிலிட்டிகள் தானெடுத்து 3990

மைவசியக்கார வாங்காரு நாயக்கர்
மாப்பிள்ளை நாயக்க மாருடனே
சாதுரியஞ் செய்து பார்ப்போ மென்று ஒரு
மாதிரியாகவே தானெழுந்து
போதரவாகக் குலவையிட்டுப் புலி
போலேயடிக்குறார் பாருமையா.
அந்நேர மக்கினி மேசர் துரையங்கே
மின்னலு போலே தான் முழங்கி
வர்ணப்பட்டாளத்தை முன்னே விட்டங்கே
மன்னவனக்கினி மேசர் துரை 4000

சென்னல் துரை புகழ் அக்கினி மேசரும்
என்ன சொல்வானந்தப் போர்களத்தில்
"அநியாயஞ் செய்யாதே கட்டபொம்மு இப்போ
உன்னுயிர் வாங்குவேன் தப்பாது.
சற்பிளை செய்யாதே பாவிஎன்று" வெகு
விற்பனையாய்ச் சமாசாரஞ் சொல்லி
சிப்பாயி மார்கள் திரண்டு வந்து அங்கே
கைப்பிடி மல்பிடியாகவே தான்
கட்டபொம் மேந்திரனைத்தான் பிடித்து வெகு
கெட்டிவிலங்குகள் தானடித்தார். 4010

மட்டுக் கடங்காத வெள்ளையா முத்தையா
மாப்பிள்ளை நாயக்கமார்களையும்
வேகமடங்கும் படியாக ஒரு
சேகரமாகவே தான் பிடித்து
மோகனப் பாடகஞ் சாத்தினராம் அதி
வேகமதாய் வெளியேற்றின ராம்.
தேட்டுக்கு வாய்த்திடும் தென்பாஞ்சைப்பதி
நாட்டுக்குப் பாளையக் காரரைத்தான்
கூட்டுப் பல்லாக்கிலே தானடைத்துச் சுத்தி
கோட்டைக் கட்டுபோலே பட்டாளம் 4020

சிப்பாயி மார்கள் நெருங்கிவர வெடி
துப்பாக்கி வார்ப்பண்ணிச் சூழ்ந்து வர

இப்படியாகவே கெட்டி செய்து பின்னும்
என்ன சொல்வான் துரை அக்கினிசு
என்னடா ஊமையன் தன்னையும் காணோமென்று
எண்ணுகிருன் பல யோசனைகள்.
கன்னிவாடி மலைச்சீமையிலே புலன்
கண்டோமென்று சொல்லத்தான் கேட்டு
நாடு நகரு நடுங்கிடவே அங்கே
தேடியே போகுதே பட்டாளம். 4030

காடுஞ் செடியும் மலைகடந்து அந்தங்
கன்னிவாடி மலைச்சார்பினிலே.
பாளையம் வந்து இறங்கியங்கே வீர
பாண்டியன் ஊமைத்துரையைக் கண்டு
யாளிபோல பதினெட்டக் குரோணிப்பட்டாளம்
தூளும் பறக்க மலைங்காட்டில்
மல்லர்கள் சோஷர்கள் வெள்ளைக்கார துரை
கல்லு வெடிகளும் தானெடுத்து
பல்லுக் கடிகள் நெற நெறென்று சாலைப்
பாதையே கூடித் திடுதிடென்று 4040

வந்து வளைந்தே சேந்திருவான் கன்னி
வாடி மலையும் கிடு கிடென்ன
அந்த நல்வேளையில் ஊமைத்துரைதானும்
சந்தோஷ வேட்டைகள் வாய்த்த தென்று
சிங்கம் போல் வாய் விட்டெழும்பினனும்.
வெற்றிச் சங்கம் முழங்கிக் கொண்டேகினனும்
சங்கம் ·முழங்கச் சிவத்தையா தம்பி.
வங்காரு நாயக்கர் முத்தையாவும்
சின்னவலக்கையன் பெரிய வலக்கையன்
சோந்தவீரமல்லு சேருவையும். 40 50

கன்னிவாடி மலை வேட்டை வேட்டை என்று
கட்டையன் மொட்டைப் பகடையுடன்
மைத்துனனுகிய மூத்தன் பகடையும்
மட்டுக்கடங்காத மொட்டையனும்
கத்திகளாஞ் சுருட்டுக்கத்திகளாம் பட்டாக்
கத்தி யெடுத்துக் கைவீசிக்கொண்டு
துண்ட ரீகமான ஊமைத் துரைராஜன்
மண்டிவருவதைப் பாருமையா.
மண்டிவரிசைகள் போட்டு திடீரென்று
சண்டு பறக்க மலைக்காட்டில்

நேராக நேராக வாரபேரை இரு
கூறுகக் கூறுகத்தான் பிளந்து
ஆராயிரம் சோஷர் மேசர்களை யிப்போ
அறுத்துக் குவித்தானே ஊமையன் தான்.
வச்சடி வாங்காமல் பச்சைமலைக் கோட்டை
வாசல் வரைக்கும் துரத்திக்குத்தி
கைச்சன்னே போட்டடி போட்டிடுவான் வெகு
கோலாகலமாய் விரைந்திடுவான்.
ஆலாவைப்போலே பறந்திடுவான் வெடி
வேலாலே குத்தி இழுத்திடுவான். 4060

தலைகள்போலே குதிக்குகிறுன் மலைங்
கரடிபோலே பிடிக்குகிறுன்.
உலை மெழுகுபோல் உருக்குகிறுன் சோஷர்
தலைபிரள நொறுக்குகிறுன்.
திருதிரு வென்று முழிக்குகிறுன் பரு
[129]வைரிபோல் பறந்தடிக்குகிறுன்.
குதிரையின் மேலேறிவருகிறபேர் தன்னையும்
குத்தியிழுத்து மலத்திடுவான்.
'மாப்பிள்ளை மாப்பிள்ளை, [130] என் முன்னே வா" என்று
கூப்பிட்டுக் குத்துவான் ஊமைத்துரை. 4070

சாப்பாட்டுச் சோஷர்கள் [131] மேசர்கள் தன்னையும்
சாமி ஊமைத்துரை குத்திநின்றுர்.
பதியிருந்து ஒளித்திருந்து அந்தப்
பச்சைமலைக் கோட்டை வாசலிலே
குதிரை ஏறி வருவோரை அங்கே
குத்தியே ஊமைத் துரை தானும்
எதிரியாய் வந்த கும்பினிப் பட்டாளம்
என்னுறு தானங்கே பாடாச்சு.
அதிலிருந்து விருபாச்சி மலைக்.
கப்புறம் போய் விட்டார் ஊமைத்துரை. 4080

சுந்தரலிங்கம் வீரமல்லு சேருவை
பந்தியாய்க் கைக்கார வக்கையனும்
அந்தரமாக விருப்பாச்சி மலைக்
கப்புறம் போய் விட்டார் பாருமையா
கர்த்தன் சிவத்தையா முத்தையா சேகரக்
கம்பளச் சேருவைக் காரர்களும்
உத்தமன் ஊமைத்துரைக்கு முன்னுகவே
வெற்றியாப் போறதைப் பாருமையா.

ராமருடன் எதிர்த்திடும் ராட்சதன்
ராவணன் பேர் பெற்ற ஊமையனே ! 4090

எமனே காலனே வீமனே விசயனே
இந்திர சித்தவன் ஊமையனே !
ஆன திருலிந்த ஊமையனையினி
யாரால் பிடிக்கவும் கூடுமென்றான் !
ஞானவான் அக்கினி மேசர் துரையங்கே
தானுமே தீனி யருந்தாமல்
விம்மல் பொருமல்கள் உண்டாகிக் கட்ட
பொம்மு துரைக்குமே சொல்லலுற்றான்.
"உம்முட மாரிபம் ஊமைத் துரை தன்னை
நம்மிடங் கூட்டி வந்தொப்பு வித்தால் 4100

யாதொரு பொல்லாங்கு மில்லாமல் நாமும்
ராசியாய்ப் போறதே நல்லதெ"ன்றான்
போதனை தன்னையும் நம்பி நிசமென்று கட்ட
பொம்மு துரையும் விதி மறந்து
தம்பிக்கு அன்பான வார்த்தை உறுதிகள்
தானுமே சொல்லி வர வழைத்தான்.
கும்பினிப் பொல்லாங்கு தீர்த்துத்தாரே னென்று
கொம்பன் தானக்கினி மேசர் துரை
மட்டுக்கடங்காத ஊமைத்துரை காலில்
துட்டு விலங்கங்கே மாட்டி விட்டான். 4110

அல்லல் காரர் வலு கம்பளத்தாரங்கே
கால் விலங்கு கைக்குத் தோள் விலங்கு
வல்லவராகிய கம்பளச் சேருவை
எல்லோரைத் தானும் விலங்கடித்தான்,
மேல் பக்கம் கீழ்ப் பக்கம் நாற்பக்கமும் பாரா
மெட்டு மெட்டாகவே தானிறுத்தி
சாலைப் பாதை வழிதான் கூடி மதுரை
தன்னிலிறங்கியே தீனியருந்தி
தெட்சண பூமியில் பட்டாள மங்கே
சேர்ந்தல்லோ கும்பினி மெட்டாக.[132] 4120

அச்சணம் பிள்ளை மகனையுந்தான் வெகு
நிச்சயமாக விலங்கடித்து
"கத்தி யுரைவிடு மெ"ன்று சொன்னார் துரை
[133]"கட்டாமி ராசுக்கோல்" என்று சொன்னார்.
சித்திரைச் சாவடி மெத்தை எங்கே பாலி
சிங்கார மாகக் கொலு மேடை யெங்கே

நித்திரை வேளையில் அத்தரி பாணிச் சோத்
சத்துரு மோசங்கள் செய்தாயே-
எத்தனை சோஷரைக் கொன்றாயே, சீமை
எங்குங் கொள்ளை யடித்திட்டாயே, 4130

பொல்லாங்கு செய்தாயே கட்ட பொம்மு ஒரு
போதும் பாருன்னை வுடுவதில்லை
எல்லாம் தெரியும் பாரென்று கெவுனர்க்கு
எழுதிப் போட்டாரே காயிதமும்,
காயிதம் பார்த்துக் கெவுனர் துரைகளும்
ஞாயமாய்த் தீர்ப்புகளேது சொல்வார்.
ஞாயம் போலே நடக்காத கட்டபொம்மு
ராசனையும் பிரதானியையும்
தூக்கு மரத்திலே போடும்படி மற்றத்
துஷ்டர்களுமத் துரையுடனே 4140

கூக்குரல் வராமல் பாளையங் கோட்டையில்
கொண்டு போய் பந்துக் கான் கூடத்திலே
நாளும் நிலவரைக் கோட்டைக் குள்ளே பொலிக்
காளையைச் சேர்த்து அடையு மென்றான்,
வேளையிலே கெவுனருத்தரவின்படி
வேகமாயஞ்சலில் காயிதமும்
வந்த சமாசாரம் அக்கினி மேசரும்
மார்க்கமாய்ச் செய்திகள் தானறிந்து
அந்தப்படியே தானுகட்டு மென்றங்கே
அக்கினி மேசர் தன் கூடாரம் 4150

நாகலாதபுரம் மசலிதானங்கே
ராச ராசாக்களும் வரிசை செய்தார்.
நாகலாதபுரம் கோட்டையிலே அங்கே
டப்பை எழுபத்தி ரண்டிருக்க
ஏகமாய்ப் பாளையக் காரருடனங்கே
எட்டய புரந்துரை வந்திறங்கி
வேகமுடன் அதிவேகமுடனங்கே
வேப்ப மரத்தில் கயிறு போட்டு
தீர்ப்பு நாளும் சரியாச்சு தென்று துரை
சீக்கிரமாய் பிரதானியைத்தான் 4160

வேப்ப மரத்திலே தூக்கினானும் அதி
வேகமாயக்கினி மேசருந்தான்.
நாகலாதபுரம் வேப்ப மரத்திலே
நாக்கு ஒரு முழம் நீண்டிடவே

ஆகமுள்ள பிரதானியுயிரங்கே ஆதி
சிவலோகஞ் சேர்ந்ததுவே.
தூக்கு மரத்திலே தானுபதி கையை
டாக்குத் [134]துரை வந்து பார்த்திடவே
பார்க்கு முன்னேயுயிர் போகிடவே அங்கே
பட்டாளம் கண்டு மகிழ்ந்திடவே.
அக்கினி மேசர் மகிழ்ந்திடவே துரை,
கெக் கெக் கென்று சிரித்திடவே
சர்க்கரை தின்கள் வழங்கிடவே அங்கே
முக்கியமாய் துரை ஏது சொல்வான், 4170

டப்பை பதினெட்டுப் பாளையக்காரரே
டப்பைக்குடிகளே ராணுவரே
தப்பிதஞ் செய்த பேர்க்கிந்த படியென்று
தானே இறக்கி அடக்கஞ் செய்தார்.
கம்பளத்தார்களை முன்னே விட்டுச்
சுத்திக்காட்டு பாராக்களுந்தான் போட்டு
நிம்பர் பதனம் பதன மென்று ஒரு
நிமிஷத்தில் கயத்தாறு சென்று
கயத்தாற்றிலே வந்திறங்கித் துரை
காங்கு கூடாரத்தில் போயிறங்கி 4180

பயத்துடனந்த அக்கினி மேசரும்
பாராக்காரரைச் சூழ வைத்து
எட்டைய புரம் ஜமீன் தன்னையுமே துரை
கிட்டே இருத்தி ஆலோசனைகள்
சட்டதிட்டப்படி தான் பேசி கட்ட
பொம்முதுரை முகம்தான் பார்த்து
"கெட்டிக்காரன் வலு கெட்டிக்காரன்
ரெம்பத் துஷ்டத்தனம் செய்யும் கெட்டிக்காரனே
திட்டப்படிக்கு நடவாமல் நீயுஞ்
செய்தாய் குறும்பு அதனாலே 4190

வம்பு மரத்திலே தூக்கும்படி உனக்கு
வந்ததே உத்தரவானபடி
தம்பி தம்பி உன்னைத் தூக்கும்படி எங்கள்
கும்பினி உத்திரவாச்சு தெ"ன்று
"தூக்கு மரங்களும் நாட்டு மெ"ன்றான். அதில்
"தூண்டில் கயறுகளும் கூட்டு மெ"ன்றான்
"சீக்கிரங்கட்டப் புளிதனிலே அதில்
மேற்குக் கொப்புத்திட மாகு மெ"ன்றான்

பட்டாளத்தைப் பார்த்துப் பாசை சொன்னான்
"அங்கே பாரா உசாராக நில்லு மெ"ன்றான் 4200

"கொட்டாரங் கொள்ளையடித்தானே வலு
துஷ்டனடா கட்டபொம்மனடா.
வாயிதா நாளுஞ் சரி யாச்சு கெவுர்
மெண்டார்கள் நாழிகை தானாச்சு.
வாயிதானைக்குத் தூக்குமெ"ன்று அங்கே
கட்டப் புளியில் கயறு போட்டு
கட்டப்புளிய மரந்தனிலே துரை
கட்டபொம்முதனைத் தூக்கினராம்.
மெட்டான பாஞ்சைத் துரை வீர பாண்டியன்
கட்டபொம்மனுயிர் போக்கினனாம். 4210

விதிவசந்தன்னை விலக்கவல்லார் யாரென்றும்
வேதமொழிப்படி தப்பாமல்
கயத்தாத்திலே கட்டப்புளியிலே
கருத்தையா தலை தூங்கிடவே
கண்டந்த ஊமைத்துரை தானும் அவர்
கையால் முகத்திலே தானறைந்து
மண்டல மெங்கும் மரித்திடவே துரை
வாய்விட்டமுதனரன்னேரம்
சிந்தை கலங்கி மனது நொந்து அங்கே
தேகம் படபடன்று ஆடிடவே 4220

"தந்தை தாய் தானும் மரியாமலுயிர்
தானும் பிரித்தானே பிரமதேவன்"
என்று ஊமைத்துரை தானழுதாரங்கே
நின்ற சனங்கள் கிலேசமுற்றார்.
"மன்றில் நடம்புரிகின்ற வராலுயிர்[135]
இன்று உமக்கு முடிவாச்சே
என்றுமே சொல்லி மனது நொந்தார்.
அங்கே ஏகமாய்ப் பட்டாளஞ் சூழ்ந்திருக்க
நின்ற சிவத்தையா வெள்ளையா முத்தையா
அங்கே விழுந்து மனது நொந்தார். 4230

வல்லபஞ் செய்கின்ற ஊமைத்துரையுடன்
எல்லோருங்கூடி மனது நொந்தார்.
சொல்லிலடங்காத கட்டபொம்முதனைத்
தூக்கு மரத்தை விட்டிறக்கி
செல்லுஞ் செலவுகள் தானுஞ் செய்து அங்கே
சிறப்பாய்க் கட்டபொம்மேந்திரனையும்

பல்லக்கில் கொண்டு போய்த் தானிறக்கி இந்தப்
பார் மன்னன் தன்னையடக்கஞ் செய்தார்.
அப்போது கும்பினி யார்கதை நானுமே
செப்புறேன் கேளுங்கள் நல்லோரே 4240

தப்பாமலக்கினி மேசர் தனக்குமே
சந்தொட்டியாகி மன மகிழ்ந்து
சர்க்கரை எங்கும் வழங்கினார்கள் படை
முக்கியமாக மன மகிழ்ந்தார்.
அக்கினி மேசர் பட்டாளங்கள் தன்னையும்
முக்கியமாக அணிவகுத்து
திக்குவிசயன் ஊமைத்துரைப் பாண்டியனை
செம்பொன் சிவிகையில் தானடைத்தான்.
பக்குவம் சொல்லுஞ் சிவத்தையா முத்தையா
பாஞ்சைப் பதி மன்னர் தங்களையும் 4250

வல்லமைக்காரர் அனைவரையும் ஒரு
பல்லக்கிலே வைத்து தானடைத்தான்
கயத்தாறு விட்டு வெளியேறிப் படை
கட்டுமெட்டாகவே அக்கினீசும்
பயத்துடனந்தப் பாஞ்சைத் துரைகளைப்
பாளையங் கோட்டைக்குக் கொண்டு வந்து
பாராளு மன்னவர் தங்களையும் அந்தப்
பாளையங் கோட்டை துரை முன்னே விட்டான்.
ஈரேழு லோகமுந் தானறிய அந்த
ஏத்த ஜெயில் துரை ஏது சொல்வான். 4260

பாஞ்சைப் பதிதுரை தங்களையும் இங்கே
பந்துக்கான் கூடத்தில் தானும் வைத்தான்.
வாஞ்சையதாகவே அக்கினீசு துரை
வந்து ஜெயிலர் துரையிடத்தில்
மெட்டாகத்தானும் சலாமுஞ் சொல்லி நானும்
பட்டணம் போறேனென உரைத்தான்.
பட்டாளந்தன்னை எழுப்பிக் கொண்டு
சென்ன பட்டணம் சென்றானே அக்கினீசு.
நன்னயமாகக் கெவுனரையுங் கண்டு
நடந்த செய்தி மகிழ்ந்து சொல்வான். 4270

சென்னல் துரையும் கெவுர் மெண்டார்களும்
சீமையும் கைவச மாச்சு தென்றார்.
கும்பினிக்காயிதம் வெற்றியென்று வெகு
சம்ரதாய மாகத் தானிருந்தார்.

அன்பான பாளையங் கோட்டையில் கம்பளம்
    தம்பி ஊமைத்துரை ஊங்காரம்
என்ன சொல்வேன் கதை என்ன சொல்வேன்.
    தாழுமின்பமாய் கேளுங்கள் நல்லோரே
சல்லாப் புடவைகள் சாலுவைச் சாதுரார்
    சருகைச் சோமன்கள் கட்டினபேர் 4280

உல்லாசமாய்க்கும்மிதானடித்தார் வெகு
    உச்சிதமாகப் பதம் பிடித்தோர்
சிலைமதன் போலிருந்தவர்களிங்கே
    கவலையாலே முழிக்குகிறார்.
தலைமுழுக்குகளில்லாமல் தானங்கே
    உலையின் வாயில் மெழுகது போல்
தண்ணீர்கள் தானுங்கிடையாமலங்கே
    சாதங்கறிகளு மெட்டாமல்
சுண்ணும்பு நீரிலழும் துயரத்தை
    என்னாலே சொல்லி முடியாது. 4290

கோடைக்காலத்து மலர் போலே மேட்டுக்
    குப்பையில் குண்டு மணி போலே
ஆடையே எவ்வளவில்லாமல் பனி
    வாடையில் தானு மெலிந்தார்கள்.
இப்படியாகவே ஊமைத்துரை யங்கே
    ஈரைந்து மாசம் அவதிப்பட்டான்.
நற்புகழாய்க்கதை சொல்லுகிறேன் வெகு
    நல்லோரே எல்லோரும் கேளுமையா,
அரசிகள் காய்கறிச் சாமான் களதற்கான
    கடைக் கிரயங்களும் தான் 4300

விரசாக வாங்கி வரும்படியே முன்னே
    வேலை நிமித்த பிரகாரம்
பொட்டிப் பகடையும் மெட்டுகளாய் வெளியே
    போய் விட்டு உள்ளே வரும்போது
சட்டமாய்ச் சோதனை தான் கொடுத்து
    கடைச்சாமான்கள் வாங்கித் தலையில் வைத்து
வாரதும் போரதுமாயிருப்பான் அந்த
    மாதிகன் பொட்டிப்பகடையுந்தான்.
காரியக்காரப் பகடைதானிப்படி
    ஈரைந்து மாதமாய் வேலைசெய்தான். 4310

பாராக்கவலே படுக்கையின் மேலெண்ணம்
பாண்டியன் ஊமைத்துரை தனக்கு.
வீரியக் கோபங்களுண்டாகிச் சுத்த
வீரருடம்பு படபடென்று
"இந்த இடைஞ்சலைத் தீர்ப்பதற்கு மணி
மந்திர தந்திரந் தானில்லையோ.
கந்தா கடம்பா திருச்செந்தூர் முத்தையா
எந்தன் துயரத்தைப் பாருமய்யா.
கந்தா முகுந்தா வைகுந்தா ராமா அரி
நாராயணா ரெகு ராமச் சந்திரா 4320

சொந்த அடிமைக்குதவு மனுமந்தா
வந்து தைர்யஞ் செய்யு மய்யா.
ஆனாலுங்குல தெய்வம் வீர மல்லு எனக்
காதரவு சக்கதேவி சொல்லு.
பாழுராய்ப் போனதோர் பாஞ்சால நாட்டிலே
வாழும்படி குடி ஏத்திவைத்தால்
பொங்கலிட்டுச் சங்கை செய்வேனம்மா தாயே,
மங்கள நல்வாக்குச் சொல்லுமம்மா
எங்களுக்குத் துணை நீயல்லாது கெதி
எங்குமுண்டோ இந்த வையகத்தில் 4330

சுத்தவீரனென்று பேராச்சே யிப்போ
சொல்லிச் சிரிக்கவும் நாளாச்சே
உற்ற சிவத்தையா யோசனைகளென்ன
கர்த்தன் சிவத்தையா சொல்லு சொல்லு.
நாட்டினில் கோட்டைகள் தான் போட்டு
நாமும் ராச்சியங்கள் தன்னை ஆளும்படி
தேட்டில் குபேரன் சிவத்தையாவே பதில்
செய்திகள் சொல்லு முத்தையாவே,
என்று ஊமைத்துரை தான் கேட்க நல்ல
தென்று சிவத்தையா ஏது சொல்வான் 4340

"நன்றாக நான் சொல்லக் கேளுமையா" நம்மள்
நாட்டில் துரைத்தனம் செய்வதற்கு
பாஞ்சால நாட்டிலே தானிருக்கும் நம்மள்
பந்து சனங்களனைவருக்கும்
வாஞ்சையாய் காயிதம் போடவேணும்,
வரவழைத்து நாம் வெளி யேறவேணும்."

இந்தப் படியாக பேசி முடித்தல்லோ
சொந்தமாய் காயிதம் தானெழுதி
பந்துக்கான் கூடத்ததிபதி எல்லாம் கண்டு
பாஞ்சால நாட்டுக்கோர் காயிதமும் 4350

கொண்டு போயங்கே கொடுப்பதற்கு புலி
குத்தி நாயக்கரிடம் சேர்வதற்கு
தெண்டம் இரும்பிடி வாராமல் பாரா
நின்ற சிப்பாயி அறியாமல்
பொட்டிப் பகடைதன் காலின் செருப்பிலே
பொதிந்து காயிதம் உள்ளே வைத்து
திட்டமாய்ச் சோடுகள் போட்டுக் கொண்டு
வலுக்கெட்டிக்காரன் வெளியேறு மென்றான்
பொட்டிப் பகடை புறப்படவே சோடு
போட்டு உல்லாசமாய் நடந்திடவே 4360

மெட்டுள்ள பாராவும் தான் கடந்தான் ஒரு
சட்டி ஒன்று கையில் தானெடுத்தான்.
கஞ்சிக்கலையம் தலை மேலே ஒரு
கப்பரையோடு அதன் மேலே
மிஞ்சிப்பகடையும் கொஞ்சிக் கொஞ்சி அவன்
அஞ்சி அஞ்சி வெளியேறிடவே
கடைக்குப் போய்விட்டு வாரேனென்று மலைங்
காட்டு விறகுக்குப்போறேனென்றும்
திடமுடன் வெளியே குதித்துப் பாராச்
சிப்பாயி மார்க்குப் பதிலுரைத்து 4370

தாரளமாகவே தானடைந்தான் அங்கே
போனானே பொட்டிப் பகடையுந்தான்.
சாராயங் கள்ளு குடிக்கலுற்றான் பாஞ்சைத்
தலத்தை நோக்கி நடக்கலுற்றான்.
தீரன் புலிகுத்தி நாயக்கரை யுங்கண்டு
தெண்டனிட்டுப் பொட்டிப் பகடையுந்தான்.
காயிதச் செய்தி உரைத்து விட்டானந்தக்
காயிதம் தன்னைக் கொடுத்து விட்டான்.
வீரியமான தோர் காயிதச் செய்தியை
ஊரிலுள்ளோர்களும் தான் பார்க்க 4380

நூறு இருநூறு கம்பளத்தா ரொரு
நொடியில் வந்தங்கே கூடினார்கள்.

"பத்துப் பதினைந்து நாளைக்குள்ளே அந்தப்
பாளையங்கோட்டை சவாரி வந்து
வெற்றி செய்து வரலாகு மெ"ன்று
பத்தியாய் காயிதம் தானெழுதி ஒரு
முத்திரை வைத்து முகரும் வைத்து அதை
முன்போலே தானு மனுப்பி வைத்தார்.
புத்தியுள்ள பொட்டிப் பகடை யுமே புலி
குத்தி நாயக்கரை விட்டேகி 4390

கடும்பகடை குடு குடென்று ஒரு
காயிதம் வாங்கித் திடு திடென்று
நடைதுருசாக வந்தவன் தானங்கே
நாலா அளப்புகளேது செய்தான்
"வந்துவெகு நேரமானதினால் அங்கே
சந்தேகஞ் சிப்பாயிசொல் வானே.
பந்துக்கான் கூடத்துப் பாராசிப்பாயும்
எந்தனைப் பார்த்து விசாரணைகள்
எங்கே போனாயடா என்று சொல்லியவன்
தன்கைப் பிரம்பாலே அடிப்பானே. 4400

கங்குலிருள் பொல்லா நேரமாச்சே மறு
நாளுங்கழிந்து விடிந்து போச்சே
அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத்
மணி எத்தனை நேரங்க ளாச்சு தென்று
சத்துக்கணியாமல் மொத்துவானே, அவன்
சப்பாத்துக்காலால் மிதிப்பானே.[136]
வெடிப் புடங்கால் அடிப்பானே
கடு கடுப்பாய் நாய் போல் குலைப்பானே[137]
அடியடித்தங்கே பிச்சிடுவான் அதற்
கான ஆலோசனை செய்வோமெ"ன்று 4410

பழியாய் வயறு வலிக்குதென்று காலப்
பாசாங்கு செய்தான் பகடையுந்தான்
விழிக்கிமைக்கு முன் நேரத்திலே ஒரு
நொடிக்குள் எங்கும் விழுந்துருண்டு
பந்துக்கான் கூடத் தலந்தனிலே பொட்டிப்
பகடை சென்றானே அந்நேரம்
வந்திடும் பொட்டிப் பகடையைப் பார்த்தந்த
வார்க்காரச்சிப்பாயி[138] ஏது சொல்வான்
"நேற்று நீ போனதும் இன்றைக்கு வந்ததும்
சூத்திர மென்னடா பாவி" என்றான் 4420

வார்த்தைகள் கண்டிப்பாய்த்தான் கேட்க வலு
மாதிகன் பொட்டியுமேது சொல்வான்
விறகொடிக்க நான் போகையிலே அங்கே
விதியாய் வந்ததே மோசமய்யா.
அரி நாராயணு கோவிந்தா, கோவிந்தா,
ஆபத்து வேளைக்குதவு மென்று
குப்புறக் குப்புறத்தான் விழுந்து "வயிற்றுக்
குள்ளே வலிக்கெ"ன்று நின்றழுதான்.
அப்போது மெய்யென்று சிப்பாயிமார்களும்
ஆதரவாகப் பகடையைத்தான் 4430

"விலங்குக் கூடத்தில் போடா" வென்றார் ஒரு
வெள்ளைப் பூடு தின்று, பாவி என்றான்.
குலுங்க குலுங்கவே பொட்டிப் பகடையும்
விலங்குக் கூடத்தில் சென்றானே.
ஊமைத்துரையும் ஒருவிதமாய் அந்த
உள் புலன் சேரவே தானறிந்து
ஓம முஞ்சுக்கும் பெருங்காயம் விரட்
டுட்டினர் பொட்டிப் பகடைக்குத்தான்.
பைய முழித்தங்கே பார்த்து விட்டான்.
பொட்டிப் பகடை வேதனை தீர்த்து விட்டான். 4440

ஒய்யாரமாக எழுந்து விட்டான் அங்கே
ஊமைத்துரையைப் பணிந்து நின்றான்
வம்பான காயிதம் தான் கொடுத்தான்
போய் வந்த சமாசாரம்தான் மொழிந்தான்.
தெம்பான காயிதம் பார்த்து ஊமைத்துரை
சிந்தை மகிழ்ந்தங்கே பார்த்திருந்தான்.
தெச்சிணம் பூமிதிசை காவல்[139] பாஞ்சை
சீமை நமக்குக் கிடைக்கு மென்று
நிச்சயமாகவே ஊமைத்துரை வெகு
கெற்சிதமாக இருந்தனராம். 4450

கும்பினிப் பாராவுந் திட்டவட் டங்களாய்
சம்ரதாயமாக நின்றார்கள்.
கம்பளத்தாருட சம்ரதாயங்களை
அன்பாகக் கேளுங்கள் நல்லோரே.
முத்தியாய் ஊமைத்துரை தானுமங்கே
வெற்றியாய்க் காயிதம் போட்டபடி
பத்து நாளைக்குள்ளே விஸ்தாரமாய் புலி
குத்தி நாயக்கரிடத்தில் வந்தார்.

தேட்டிலதிக நிதி வளரும் பாஞ்சை
நாட்டினில் கம்பளச் செல்வருந்தான் 4460

வேட்டைப்படை போலே கூடினராம் சுத்த
வீரர்கள் வீரியம் கூறினராம்
கத்தி எடுத்தார் கைவாள் எடுத்தார், வெகு
விஸ்தாரமாகவே வந்து நின்றார்.
எத்தனை கம்பளந்தானுச்சு கணக்
கெத்தனை எத்தனை பேராச்சு?
கைக்காரர் தங்க தண்டியல்காரர் சரி
கணக்கு நூறு பேர் கம்பளத்தார்
மைக்காரர் வில்க் காரர் தானும் வந்தார்-
ஒரு வரிசை நூறு பேர் கம்பளத்தார் 4470

'பாளையங்கோட்டைப் புலனறிந்து வீர
பாண்டியன் ஊமைத்துரையை நாமும்
ஆளும் அடையாளந் தோற்றுமல் புலனறிந்து
சண்டைகள் செய்யவென்று
வேட்டைகளாடித் திரும்புதற்கு நம்மள்
நாட்டுத் தலைவரைக் காண்பதற்கு
கோட்டைக்குப் போறது எப்படியோ'' வென்று
கூடியாலோசனை செய்தார்கள்.
சுப்ரமணியர் பிரார்த்தனை தானென்று
எப்படி வேசம் எடுக்கலுற்றான். 4480

சற்பிள்ளையாகவே கம்பளத்தாருமே
முற்பழி வாங்கிட வேணு மென்று
பழனியாண்டவர் போல் வடிவாய் நல்ல
பத்தர் சித்தர்கள் போலவேதான்
வளமாய்க் காவடி தானெடுத்தார் காவி
வஸ்திரந் தானும் தரிக்கலுற்றார்
உத்ராட்சத் தாவடம் தானணிந்தார் இடை
ஒட்டியாணங்களைப் பூட்டுகிறார்
நத்து மணிகள் தானெடுத்தார் சங்கு
நாதத் தொனிகள் முழங்கலுற்றார். 4490

செம்புக்கடுக்கன் தள தளென்னக் காதில்
ஐம்பொன் முறுகுப் பளபளென்ன
சம்ரதாயமாகத் தானெடுத்தார்கள் கல்வித்
தன்னன்னப் பாட்டுப் படிக்கலுற்றார்

சடைமுடிகளாய்த்தான் தரித்தார்கள். வெள்ளைச்
சாம்பலுடம் பெல்லாம் பூசலுற்றார்.
வம்புகள் தானுந் தெரியாமல் அந்த
மன்னர்கள் வேடமெடுக்கலுற்றார்.
சன்னாசி வேச மெடுத்துக் கொண்டு நல்ல
சாம்பிராணி போசங்கள் போட்டுச் சென்று 4500

வானமயில் போல காவடிகள் தூக்கி
சன்னத மீறுதே அந்நேரம்
தப்பு முருமியும் தான் முழங்க நாக
சரமும் வாத்தியந்தான் முழங்க
இப்படியாய்ச் சிலர் வேடங்கள் தானுமே
எடுத்துப் பாளையங்கோட்டையிலே
வேலு மயிலுக்கரோகரா வென்றுமே
வேடிக்கையாய்ச் சிலர் சொல்லிக் கொண்டு
சோலைமயிலுக் கரோகரா வென்றுமே
சொல்லிக் குதித்து விளையாடி 4510

என்று சிலபேர்கள் நின்றாடிக் குகன்
ஏகாந்தக் காவடி கொண்டாடி
சென்றார்கள் பாளையங்கோட்டையிலே ஒரு
சேகர மாகவே பேட்டையிலே
வந்து விளையாடும் வேளையிலே கதை
மார்க்கத்தைக் கேளுங்கள் நல்லோரே,
செந்தூரரான் காவடியே நிசமென்றுமே
செல்வர்கள் போற்றிப் பணிவார்கள்.
வேலவர்காவடி என்பாரும் அங்கே
மெத்தவணங்கிப் புகழ் வாரும் 4520

பாலும் பழமும் கொடுப்பாரும் பிள்ளைப்
பாக்கிய வரங்கேட்டுக் கொள்வாரும்
வராம் நல்ல
சபபாயமாா பணம் போடுவாராம்,
அப்போது காவடிக்காரருந்தான் அரு
ளானந்தமாய் விளையாடுவாராம்.
சன்னத சன்னத மீறுதென்றங்கேயும்
தவ்வித்[140] தவ்விக்குதி போடுவாராம்,
உன்னிக்குமாரனைத்தான் துதித்து அங்கே
ஊமைத்துரை முன்பு செல்வாராம் 4530

நல்லதய்யா எட்டுநாளையிலே நாங்கள்
ராமேஸ் வரத்திற்குப் போறதினால்

எல்லாப்பாவங்களும் தீருமய்யா நமக்கு
ஏத்தகாலங் களுண்டாகு மய்யா
சிதம்பரத்தாண்டவன் தன் செயலும் சக்க
தேவி கிருபையதனாலும்.
விதனந்திர்க்கலாம் தப்பாது வடி
வேலர் கிருபையாலிப் போது
நினைத்த காரியம் தான்முடியும் பக்தர்
மனத் துயரங்கள் வேண்டாங்காண்
சனத்தோடே சனங்கூடிடலாம் நாமும்
சாதுரியமாய் விளையாடிடலாம் 4540

எட்டு நாளைக்குள் விளையாட்டுச்சற்றே
எப்படியும் செய்வோம் காலாட்டு
கட்டுக்காவலினில் பார்ப்போமென்று அந்தக்
காவடிக் காரர்கள் தானுரைத்தார்
பட்டணம் ஊரும் விளையாடி அந்தப்
பாளையங் கோட்டைப் புலனறிந்து
இஷ்டமுடன் வெளியேறி நின்றார்.
வாயிருக்குந் தாவளஞ் சென்றிடவே
அதிலொருவன் மரியாதை ராமன்போல்
அஞ்சடையான் குட்டிச் சேருவையும் 4550

சதுரகிரிவளர் மெஞ்ஞானியைப் போல்
தானெடுத்தான் வேடமந்நேரம்
கண்டகோடாலியும் தானெடுத்து அவன்
கைதனில் மாத்திரிக் கோலெடுத்து
சண்டப்பிரசண்டன் சடைமுடியாகவே
சாம்பலுடம் பெல்லாந்தானணிந்து
உத்திராட்ச மாலைகள் தானணிந்தான்.
வெகு ஒய்யாரமாகவே தானிலங்க
பக்தியுடன் சிவபூசை முடிக்கின்ற
பக்தர்கள் போலவே வேடங்கொண்டார்.[141] 4560

லங்கோடு கட்டியே சுங்குவிட்டு அருள்
தங்குங் கெவுரிச் சங்குபிடித்து
வங்காளத்துப் பச்சைக்குல்லாவும் சிரசில்
வைத்ததன் மேலொரு சுங்குவிட்டு
சோளிப்பை யொன்றுமே தோளிலிட்டு
சிங்கேற் ஆளிப்புலித்தோலும் மேல்போட்டு
காசி ராமேஸ்வரம் கன்னியாகுமரியும்
கண்டுவாரே னென்று சொல்லியவன்

தேசத்தில் ஏகாந்த ஞானிஎன்றும் விசு
வாசமாய் வைத்தியம் பார்ப்போமென்றும் 4570

பாளையங்கோட்டைத் தெருவூடே பொலி
காளைபோல் சுத்துரான் நல்லோரே.
வேளைக்குதவுந் திருத்தில்லை யம்பலர்
வேணியன் பொற்பாதந் தான்துதித்து
"வஞ்சனை பில்லிகள் நஞ்சுவியாதிக்கு
மந்திரதந்திர முண்டு மென்றும்
சஞ்சிவிமூலிகை வேணதுண்டுநாக
தாளியுண்டு குருமூலியுண்டு
மட்டுக்கடங்காத துஷ்டக்கருப்புகள்
கொட்டுக் கண்டாடும் வலுபேய்கள் 4580

திட்டுமுறைப்பாடு செய்வினை தீவினை
முட்டுப்பிலிவலு சூனியங்கள்
கள்ளப்பிசாசை விரட்டியாடா தம்பி
பிள்ளைத்தவங்கள் கொடுப்பேனென்று
அள்ளித்திரு நீறு தந்திடுவேன் மைக
ளானவசியங் கொடுத்திடுவேன்
என்னைப்போல் வைத்தியனுங்களுக்கு இனி
எங்கும்கிடையாது என்றானே.[142]
அந்நேரம் பாளையங்கோட்டையிலுள்ள பேரு
"ஐயா ஐயாகுருசாமி என்று 4590

மெத்த மெத்த உபசாரஞ் சொல்வார்
எங்கள் வீட்டுக்கு வாருங்கள்சாமி" என்பார்.
உத்தமரே நல்ல உத்தமரே வீட்டுக்
குத்தங் குறைகளைத் தீருமென்பார்.
போற்றிப் புகழ்வார் சிலபேர்கள் பணிந்
தேத்திப் புகழ்வார் வெகுபேர்கள்.
சாத்திர வேதமெஞ்ஞானிய ரேகைகள்
பார்த்து அவிழ்தங்கள் செய்யுமென்றார்.
இப்படி எல்லோரும் தான்புகழ்ந்தம்பி
அப்போது ஞானி அகமகிழ்ந்து 4600

கற்புவைத்தியம் பார்ப்போ மென்று
சொந்தக் கம்பளத்தார் முகங் கைபார்த்து
சன்னைகள் போட்டுக் கண்ணைச்சிமிட்டி
தேவி சக்கம்மாள் வீரமல்லென்று சொல்லி
தன்னிமைக் கம்பளத்தாருக் கெல்லாம்
சீனிச் சர்க்கரையை மருந்தாய்க்கொடுத்தான்

செல்வர்கள் வாங்கியே சாப்பிடவும்
வலுதீவினை தீர்ந்தல்லோ போச்சுதென்றார்.
நல்லமொழி கூறு மெஞ்ஞானியென்று
மனுவெல்லோருங் கெற்சித மாகிடவே 5610

அப்போது பட்டாளம் சிப்பாயிமார்களும்
நற்புகழாக மெஞ்ஞானியிடம்
விற்பனமாகச் சலாமுஞ்சொல்லி எங்கள்
அப்பா வியாதியைத் தீருமென்பார்
வெட்டை யரையாப்புத் துஷ்டக்கிரந்திகளும்
கெட்டி மருந்துகள் செய்வீரென்று
பட்டாளஞ் சிப்பாயிமாருரைக்க அந்த
மூட்டாள் வைத்தியன் தான்மகிழ்ந்து
சொல்லுக்கடங்காத வியாதிகள் தீர்க்கவே
நல்லமருந்து கொடுப்பே னென்று 5620

வெல்லுந்திறமுள்ள சிப்பாயி மாருட
வல்லவர் கைபிடித்தே பார்த்து
வெள்ளைப் பாஷாணத்தை வாங்கியல்லோ
அள்ளிக் கொடுத்திட்டான் சண்டாளன்.
உள்ளுக்குவாங்கியே சாப்பிட்டல்லோ
மடிந்து உருண்டுபோகுதே பட்டாளம்
ரத்தரத்தமா யறுத்து உத்தி ஐயோ
செத்துப் பிரளுதே பட்டாளம்
வைத்தியனெங்கே வைத்தியனெங்கே என்று
மாண்டுதான் போகுதே பட்டாளம் 5630

ஞானியாய் வந்திடும் சாமியார் வைத்தியம்
நன்றாய்தான் பார்த்தானே பெட்டிமகன்
தானுமிருந்த இடத்தையும் சொல்லாமல்
தப்பிவிட்டான் ஞானி யெப்புடனே
நாட்டு இடையன்போல்வேசங் கொண்டுதம்பி
கோட்டை வாசலோரம் வந்திருந்தான்
தாட்டிமையாகிய கும்பினிப்பட்டாளம்
வீட்டுக்காரப் பெண்கள் தான்கூடி
மாற்றாளுய்வந்து மருந்து கொடுத்தானே
ஆத்தாடி அப்பாடி யென்றழுது 5640

“தீர்த்தானே தீர்த்தானே வைத்தியந்தானொரு
தீர்ப்பாகத் தீர்த்தானே சண்டாளன்தான்
நட்புடன் வைத்தியம்பார்ப்போ மென்று
மருந்திப்படிச் செய்து கொடுத்தானே

சற்பினை மோசங்கள் செய்தானே இந்தச்
சாமியாரை விடக் கூடாது.
எங்கெங்குந் தேடியே பார்த்துப்பிடி''
என்று மங்கையரோடி வரும்போது
சங்கையுடன் அந்தக் கோட்டை வாசலோரம்
சிங்கேறு போலவன் தானிருந்தான் 5650

''என்னடி என்னடி அம்மா அக்காள்
நீங்கள் என்னுடன் சொல்லுங்கள் தம்மானி
சந்நியாசி தானிந்தப் பாதைவழியாக
இந்நேரம் போவானே என்காதம்
பழனிச்சீமைக்குப் போறேனென்றுஇது
பாதை வழியாகப் போறானே
அழகு மாப்பிள்ளையைத் தோற்றியளோ,
விதியாரை விட்டதடி அம்மா அக்காள்
வாரபேர் போறபேர் தன்னிடம் மருந்து
தான்வாங்கிக் கொடுப்பீரோ சண்டாளி 5660

பேராயிரம் புத்தியானாலும் வலு
பெண்டுகளை நம்பக் கூடாது.
போங்கடி போங்கடி வீட்டுக்குப் போங்கடி
புத்திகெட்ட எருமை மாடுகளே.
போங்கால மென்றுங்கள் சாதிசனத்துக்குப்
பொல்லாத கால மிருக்குதடி''
என்று சமாச்சாரம் சொன்னானே
பளிச் சென்று வெளியேறிச் சென்றானே
குன்று வழியுங்கடந்தானே தங்கள்
மண்டல் வந்து செய்திவிண்டானே 5670

போனதும் வந்ததும் சிப்பாயிமார்களைப்
பொன்னுலகஞ் சேரச் செய்ததுவும்
தானது கேட்டுப்புலி குத்திநாயக்கரும்
சந்தொட்டியாகவே அந்நேரம்
இன்னி மேலப்பாளையம் கோட்டையிலே
நாமளென்ன விதமாகப் பேட்டையிலே
முன்னேடிப் போறதென உரைத்தான்கதை
தன்னையுங் கேளுங்கள் நல்லோரே
எப்படி வேசமெடுக்கலுற்றார் படை
ஒப்புடன் கட்டை விறகெடுத்தார். 5680

முப்பது நாற்பது பேரல்லவோ வலு
முண்டனைப் 143 போலே வல்லாளகண்டர் 144

காட்டுவிறகுகள் தானொடித்தார் வாகந்
　　தலத்துணிகளைத் தான் தரித்தார்.
நாட்டிலுள்ள கூலிக்காரர்கள் போல்
　　காலில் மாட்டினார்வில்லைச் செருப்புகளை
வில்லைச் செருப்பு மிதியடிகளிட்டு
　　வல்லையம் நேரிசம் மண்டாவும் 145
புல்லுக்கட்டுக்குள்ளே வைத்துக்கட்டி தம்பி
　　மல்லுக்கட்டாய் வைக்கோல் கட்டுக்கட்டி
பூண்கட்டுக்கம்பு குறட்டுக்கம்பு ஈட்டி
　　மூங்கில் தடியும் விறகுக்குள்ளே 5690

சாண் கும்பிக்காகக் கலையம் ஒருகையில்
　　தானே பிடித்து வலையரைப்போல்
நூறுசனங்கள் விறகுக்கட்டும் ரண்டு
　　நூறு சீமைப்புல்லுக்கட்டும்
தாராளமாகத் தலையில் வைத்து அங்கே
　　போறாரே கம்பளச் சிங்கேறுகள்.
ஒன்று இரண்டுமாக நின்றுநின்று அங்கே
　　ஓட்டம் நடையுமாய்ப் போறாரே.
மண்ணதிரக் கெடிவிண்ணதிரக் கோட்டை
　　வாசலதிர மதிலதிர 5700

பட்டணங்கிட்ட அடுத்தார்கள், அங்கே
　　பாளையங் கோட்டைக்குச் சென்றார்கள்.
மெட்டான வீட்டில் நுழைவார்கள் பரு
　　விறகென்று விலை கூறுவார்கள்
காட்டுவிறகென்று சாட்டுவார்கள் விலை
　　கேட்டாலதிகமாய்ச் சொல்லுவார்கள்.
வீட்டினிலுள்ள பேர் கேட்டிடவே
　　அங்கே வேகமாய் தானுமே ஏதுசொல்வார்
அஞ்சாறு காசுக்கோர் விறகுமில்லை செம்
　　பொன் அரைப்பணத்துக்குந் தரவுமில்லை. 5710

கஞ்சிக்குந் தண்ணீர்க்கும் விறகுமில்லை.
　　ஒருகட்டு விறகஞ்சு பொன் பணந்தான்
செட்டி முதலிமார் வீடுசென்று வெகு
　　திட்டமதாய் விலை கூறிடுவார்
அட்டிபண்ணமலே கேட்டவர்க்குப்பதி
　　னெட்டுக்காசுக்கும் கொடுக்கே னென்றார்
முதலாளிமார் வீடுபார்த்துக் கொள்வார். வெகு
　　முதல்கள் நமக்குக் கிடைக்குமென்பார்

மலையிலே பொழுதுபோகு தென்பார் தம்பி
நிலவு காவல்லோ வீசுதென்பார் 5720

பலபல யோசனையாகவே தானுமே
பந்துக்கான் கூடத்தின் முன்பாக
எட்டிநடந்துமே வந்தார்கள் விறகென்று
விலை சொல்லிக் கூறுவார்கள்
பட்டாளஞ் சிப்பாயிமார் கேட்கவிறகுக்
கட்டுக்கஞ்சு பொன் தாருமென்பார்
அஞ்சு பணஞ்சொன்னலார் வாங்கப்
போரார்கள் அப்பாலே கொண்டுபோவென்றுரைத்தார்.
என்ன செய்வோமென்று விறகுக்காரரவர்
அஞ்சி அஞ்சியங்கே நிற்கையிலே 5730

பந்துக்கான் கூடத்தில் உள்ளிருந்தவீர
பாண்டியன் ஊமைத்துரை மகிழ்ந்து
வந்தவிறகு முழுவதையும் நாங்கள்
வாங்கவேண்டுமடா தம்பிதம்பி
உள்ளுக்குத்தான் மெள்ளக் கொண்டுவந்தால்
பணம்உள்ளது போல்தாறேன் என்றுரைத்தார்.
கள்ளுவெறிபோலே துள்ளித்துள்ளி விறகுக்
காரர்கள் எல்லோரும் சீராடி
தந்திரமாகவே வந்தவர் தானுமே சற்றே
மகிழ்ந்து உள்ளே நுழைந்தார் [146] 5740

பந்துக்கான் கூடத்தில் ஊமைத்துரை வீர
பாண்டியன் முன்பாக வந்துநின்றார்
கனக்குங் கடுஞ்சுமையைத் தானிறக்குமென்று
இணக்கமாகவே சொல்லலுற்றான்.
எனக்கல்லோ சுமைதானே கனக்கென்றுமே
இறக்கிறாரங்கே எல்லோரும்
விறகுக்கட்டையும் தானவிழ்த்தார் உள்ளே
வேண்டும் பலவகை ஆயுதங்கள்
உரைவிடும் பட்டாவும் தானெடுத்தாரங்கே
உள்ளாயுதங்கள் பலவெடுத்தார் 5750

வல்லயம் நேரிசம் தானெடுத்தார் கை
வங்கியுடன் சமுதாடுடனே
பல்லைநெறநெறென்று கடித்தாரங்கே
பாயும் புலிபோல சீறிநின்றார்

தில்லிலி என்று குலவையிட்டார்
வல்லயம் நேரிசம் கைப்பிடித்தார்
சொல்லிவாய் மூடிமுழிக்கு முன்னே அங்கே
எல்லைப் பிடாரிபோல் மண்டியிட்டார்
வாலைஎன்னும் தேவிதன் பாதத்தை
மன்னவர் சிந்தையிலே நினைத்து
ஆலகாலவிடம் போல்சினந்து அங்கே
கோலாகலமாக வாளெடுத்து
பந்துக்கான் கூடத் தளபதி தன்னையுமங்கே
பட்டாளச் சிப்பாயி மார்களையும் 5760

கொந்து கொந்தாகவே தான்துரத்தியங்கே
கொத்தியே வெட்டியறுத் தெறிந்தார்
தந்திரமாய் வந்த சம்பளத்தாருடன்
சாமி ஊமைத்துரை தானெழுந்து
பந்துக்கான் கூடத்துக்குள்ளிருக்கும் துரை
பாயும்புலி போலசீறி நின்று
விலங்குக் காலோடே பாராச்சிப்பாயிவை
விரட்டிக் குத்துரான் பாருமையா
சலங்கை போட்டுக்கும்மியடித்தாப்போலே
தாண்டியே குத்துரார் பாண்டியன்பார் 5770

பழையசனியன் வந்ததென்று அங்கே
பட்டாளஞ் சிப்பாயி மார்முழிக்க
வளையம்போட்டுத் துரைவீர பாண்டியன்
வார்செய்யும் சிப்பாயிமார்களையும்
கும்பினி பாராச்சிப்பாய்களை ஒரு
கொத்திலேலே ரெண்டுதுண்டாக
தென்புடன் தானும் தலைகளை வெட்டியே
வம்புவளர்த்திட்டான் பாருமையா
பந்துக்கான் கூடமுந்தாள் பறக்க அங்கே
பாராச்சிப்பாய்கள் பட்டிறக்க 5780

இந்திராதி தேவர்கள் தானும்புகழ்ந்துமே
அந்திரத்தின் மலர்தான் சொறிந்தார்
சிந்தைகலங்காமல் பட்டாளந்தன்னையுஞ்
சேரத்திரட்டி ஒரு முகமாய்
பந்துக்கான் கூடத்தினுள்ளே வைத்துஅங்கே
பட்டாளந்தன்னையே கொன்றார்கள்
பாணியென்று சிலபேர்கள் சொல்லியங்கே
பட்டாளமே சரிந்திடவே.

வேணி யணிந்தவன் தன்னருளாலிங்கே
　　வெற்றி செய்து முற்றுப்பெற்றேமென்றார்.
அவ்விடம் விட்டு வெளியேறி வெகு
　　ஆனந்தமாகவே கம்பளத்தார்
தவ்வியே தானுங்குதி போட்டு ஊமைச்
　　சாமிதுரைக்கு முன்பாக வந்தான்.
ஒப்புடனே வெளியே குதித்தார் அந்த
　　ஊமைத்துரை விலங்கை முறித்தார்.
விற்பனமுள்ள சிவத்தையா முத்தையா
　　வெள்ளையா கால்விலங்குந் தறித்தார். 5790

பின்னும் அவருடன் சேர்ந்த சனங்களும்
　　தன்னுடன் வெளியேறி நின்றார்.
அந்நேரம்கர்னல் துரையுடனே சயி
　　லாபீசரும் [147] வந்து தானெதிர்த்தார்.
எதிர்த்தகர்னல் துரை மடிந்தார்.
　　சனிபிடித்த பேர்களுயிர் இழந்தார்,
கதித்த கோபந்தா னுண்டாகிக்குதி
　　குதித்த பேரெல்லாந்தான் மடிந்தார்,
நாட்டரசன் கெடிபேட்டையிலே யந்த [148]
　　நன்னகர் பாளையங் கோட்டையிலே 5800

தாஷ்டீகன் ஊமைத்துரை வீரபாண்டியன்
　　வேட்டை யாடுங்கதை பாருமையா.
காட்டுப்புலிகள் மிரண்டாப் [149] போல்சீறி
　　ஆட்டுக் கிடையிலே பாய்ந்தாப்போல்
கூட்டுச் சேவல்கள் பறந்தாப்போல்
　　ரணவேட்டை களாடவேதான் வெகுண்டார்.
பொலி யெருதுபோல் சுத்துகிறார் அங்கே
　　சலியாமல் பழி வாங்குகிறார்.
வலியவலியச் சருவுகிறார் [150] யெதிர்
　　வந்திடும் பேர்களைக் கொல்லுகிறார். 5810

சொர்ணப் பெட்டிகளும் தானெடுத்தார் அங்கே
　　சொல்லிவாய்மூடி முழிக்கு முன்னே
கர்னல் விடுதியுங்கொள்ளை செய்தார் செயில்
　　கம்பேனியார் வீடுங்கொள்ளை யிட்டார். [151]
பட்டண முழுவதுங் கொள்ளையடா அந்தப்
　　பாளையங் கோட்டையும் கொள்ளையடா
செட்டி முதலிமார் வீடு கொள்ளை பணப்
　　பெட்டிகள் வேணதுங் கொள்ளையடா

வட்டில்கள் செம்புகள் வெங்கலபாத்திரம்
கொட்டுக்குடை தங்கக்கும்பாவும் 5820

பட்டுப் பட்டாவளி வேஷ்டிகள் மூட்டைகள்
கட்டுக்கட்டாகவே கொள்ளை யிட்டார்.
இத்தனையுஞ்சரி கொள்ளை கொண்டான்,
வெகுவிஸ்தாரமாய் வெளியேறு மென்றார்.
மத்தகஜம்போல் நடந்தாரே அங்கே
வல்ல நாட்டுமலை சேர்ந்தாரே
வல்லநாட்டு மலைபோயிறங்கி அங்கே
மன்னன் தூத்துக்குடி கொள்ளையிட்டு
தொல்புவி மெய்க்கும் பிராஞ்சுதுரை[152]
மார்கள் வல்லவர்கள் வீடுகொள்ளையிட்டு 5830

அந்தநாள்ச் சென்று மறுநாளில் தானங்கே
வந்தாரே பாஞ்சைப்பதி நாட்டில்
சந்திரவட்டம்போலே கோட்டை யொன்று
செய்யச்சிந்தையில் தானும் நினைத்தார்கள்.
ராத்திரிகாலத்தில் நேத்திகளாம் வேத
சாத்திரம் போல்சுத்துக் கோட்டைகளாம்
பார்த்தாலித்தினிக் கோட்டை போலே
சுத்திப் பறத்திக்கட்டுறார் பாருமையா.
வரதம் வைக்கோல் நிரம்பவைத்து அதில்
மண்போட்டுச் செம்மியே[153]தான் மிதித்து 5840

திறமுடன் கம்மங் கொம்மைகளைப் போட்டு
செப்பனிட்டு மதிலொப்பனிட்டு
பஞ்சுப்பொதிகளை ஊடேவைத்துக் கம்பங்
கஞ்சிப்பசைகளைத் தான் கொடுத்து[154]
குஞ்சரம்போல் கோட்டை கட்டுமெட்டாகவே
ரஞ்சித வாளரை வீடுகளும்
வீதியாய் பள்ளங்கள்தான் பறித்தார் அதில்
மேலே பலகைகள் தானமைத்தார்.
நீதியாய் சாத்திரம் பார்த்தார்கள்
உள்ளே நிலவரை வீடுமெடுத்தார்கள், 5850

நிலவரை வீடுகள் சிங்காரம்அதில்
நிலக்கண்ணாடி யலங்காரம்
புலிப்புடவைக ளோடுகளாம் வெகு
போதரவாய்க் கொலு மேடைகளாம்
சப்ரக்கூடமஞ்ச மேடைகளாம் வெகு
செப்ப மாயாசார வீடுகளாம்.

எப்படி சிங்காரஞ் செய்தார்கள் கதை
செப்பவே கேளுங்கள் விற்பனரே.
எட்டுத்திசையும் புகழ்ந்திடும் கும்பினி
பட்டாளம் வந்து வளைத்தாலும் 5860

மெட்டுள்ள கோட்டையைக் கண்டுதிடுக்கிட
கட்டினரே மதில் விஸ்தாரம்.
நிலவரை வீடுகள் தானுமுள்ளே துரை
கொலு மேடைகள் தானுமுள்ளே.
கொலுச் சிங்காரங்கள் தானுமுள்ளே.
அங்கே குதிரை லாயமுந்தானுமுள்ளே.
சமையல் பிறைகளும் தானுமுள்ளே துரை
தாவள செய்வதுந்தானு முள்ளே. [155]
உமையவள் பாதந்துதித்திடும் சத்தியன்
ஒன்பது கம்பளத்தார் துரைகள் 5870

சுப்பிரமணியரைத்தான் துதித்து ஊமைத்
துரையுமங்கே கொலுவிருந்தார்,
விற்பனமுள்ள சிவத்தையா முத்தையா
வேடபட்டிக் குமரய்யாவும்
பூப்பந்தல்மேடை விலாசத்திலே துரை
மாப்பிள்ளை நாய்க்கமா ரெல்லோரும்
காப்பாத்துவான் சக்கதேவி யென்றுகன
கம்பளத்தார்களும் சூழ்ந்திருக்க
என்னென்ன சபதங்கள் கூறுவாளுமங்கே
எக்களிப் பாகவே பேசுவாளும். 5880

சென்னபட்டணம் படைக்குருவிகள் [156] தான்
இன்னம் வரட்டுமென்றே மொழிந்தார்.
குருகுநாரைகள் வரட்டுமென்பார் வெள்ளை
கொக்குக் குருவிகள் வரட்டு மென்பார்
வருங்குருவிகள் சூரவந்தானுக்கு
வைரி நாமென்று ரைத்தார்கள்
வீதிவிலாசம் திரிவார்கள் அங்கே
சூது சதுரங்க மாடுவார்கள்
சாதிச் சாவல் கையில் தானெடுத்து
வெள்ளைச் சாவலைப்போர் விட்டுப்பார்ப்பதுவும் 5890

வீமனைப்போல் தொடை தட்டுவதும்
வெகுமெட்டுகளாய் முளை கொட்டுவதும்
சீமையில் கொள்ளையடிப்பதுவும் ரெம்ப
சிலுகுசல்லியஞ் செய்வதுவும்

புலியைப்போலே வெளியேறுவதும் எட்டைய
　　புரத்தில் கொள்ளையடிப்பதுவும்
கலியுகமெய்க்கும் ஊமைத்துரைப் பாண்டியன்
　　நிலவரை தன்னிலிருப்பதுவும்
நாளும்எதிரிகள் இல்லையென்று பாஞ்சை
　　நாட்டரசன் கொலுவீற்றிருந்தார் 5900

வேலைக்குதவிய சக்தி சடாச்சரி
　　வீரமல்லுண்டு தானிருந்தார்
இப்படியாக இருக்குஞ் சமயத்தில்
　　இன்பமுடன்கதை சொல்லுகிறேன்.
செப்பமதாகவே கும்பினி யார்கதை
　　செப்புகிறேன் கேளும்நல்லோரே
பாளையங்கோட்டை திறந்ததற்கும் அசல்
　　பட்டாளமே சரிந்ததற்கும்
ஊமைத்துரையும் விலங்கொடித்து அங்கே
　　ஓடியே கொள்ளை யடித்ததுவும் 5910

பூமியில் கோட்டைகள் தான்எடுத்து வெகு
　　பொல்லாங்குக் காரம்பஞ் செய்ததுவும்
கணிசந் தப்பி நடந்ததையும் கண்டு
　　துணிவாய் பிற்கட்டு மேசர்துரை
சணமுந்தாமிசஞ் செய்யாமல் அந்தச்
　　சணமே காயிதம் போடலுற்றான்.
கும்பினி காயிதம் அன்பாகக்கெவுனர்
　　கோர்ட்டார் போட்டார்[157] முன்பாக
நிம்பர்[158] கொண்டுவந்த காயிதச் செய்தியை
　　கும்பினியார்களும் தானறிந்து 5920

கண்களி ரண்டும் பொறிகிளம்ப அவர்
　　காதுகள் ரெண்டும்புகை யெழும்ப
மண்களதிர்ந்திட பேசுவராம் துரை
　　மார்கள் ஆலோசனை செய்குவாராம்.
கம்பளத்தார் செய்யும்வம்பாலே நமது
　　காயிதாயிப்படி யாச்சு தென்றார்.
கும்பினியார்பகை செய்தானே யிப்போ
　　வம்பு குறும்பு வளர்த்தானே
துஷ்டத்தனங்கள் முன் செய்ததினால்
　　அந்தக்கட்ட பொம்மனைத்தான் வதைத்தோம் 5930

கட்டபொம்மனுயிர் போக்கிறேமே அந்தக்
கங்கைக் குலத்தானைத் தூக்கிறேமே
வாய்பேசா மன்னனைத்தான் பிடித்தோம்
நமது ஞாயமதாக விலங்கடித்தோம்.
நேயமாய் ஊமைத்துரை தனையும்குற்றம்
நீக்கியே ஞாயங்கள் செய்ததினுல்
அன்றைக்கே ஊமைத்துரை தனையும்
அவனைக்கொன்றிடத் தூக்கியே தான்போட்டு
கொன்று போட்டாலிந்த மோசம் வராதென்று
கும்பினியார்களும் யேது சொல்வார் 5940
கட்டாமி ராசுக்கோல் சன்னப்பிரவீச்சுக்
கம்பளத்தார் வம்பு கண்டறிவோம்.
தூங்கலுபோலே இருந்தாலும் இது
தோக்குலவார் குலம்பொல்லாது
தேங்கினது போலிருந்தாலும் இது
சில்லவார் தன்குலம் பொல்லாது
பொல்லாதபாதகன் ஊமைத்துரை தன்னை
கொல்லாமல் விட்டதே தோசமென்றூர்.
நல்லதுநல்லது சொல்லுகிறேன் அவன்
வல்லமை பார்த்திடவேணு மென்றூர் 5950
குழிநரிக் கொம்பிருக்கு தென்றூர் சித்தர்
குளிகை யவனுக்கிருக்கு தென்றூர்
பழிகள் மோசம் வளர்த்துவிட்டான் நமது
பட்டாளந் தன்னையும் கொன்றுவிட்டான்.
சீமையில் கொள்ளையடிக்கிறுன் என்ன
திராணி சமர்த்துகள் செய்யுகிறுன்.
பூமியிலே வலுதுஷ்டனடா ரெம்பப்
பொல்லாத கம்பளச் சுட்டியடா.
ஆனாலுமிப்படி யெங்குமில்லை ரெம்ப
வீணை பொல்லாங்குக்காரனடா 5960
மானஸ்தனென்று யிருந்தோமே பாவி
மட்டுக்கடங்காத துஷ்டனடா.
எதிர்த்தபேரை மடக்கிவந்தோம் சீமை
எங்கும் புகழ்பெற்று வாழ்ந்துவந்தோம்.
மதுரைசீமையும்தான் பிடித்து கொழும்பு
மன்னர் சீமையும்தான் பிடித்து

கண்டி கதிர்காமந் தானுச்சி வட
காசி தேசமுதல் நாமாச்சு
மண்டலமுழுவதுந் தானுச்சு கெவர்
மண்டார்கள் ஞாயமு நாமாச்சு 5970

திருச்சிராபுள்ளியுஞ் சென்னல் புரந்தெற்கே
தெட்சண பூமியதிகாரம்
தரும ஞாயங்கள் நமக்கு முண்டு கும்பினி
சட்டதிட்டங்கள் நமக்கு முண்டு
வங்காளம்கொங்கு மலையாளம் கொச்சி
மக்கதேசம் வயிருவி தேசம்
சிங்கள தேசம்பிடித்துவிட்டோம், மதுரை
இங்கிலீசுக் கொடி நாட்டிவிட்டோம்
டப்பை எழுபத்திரண்டு நமக்குள்ளே
ராணுவச் சேனை பலவுமுண்டு. 5980

துப்புத்துரவும் நமக்கு முண்டு, வலு
தோணி படவுகள்[159] நமக்குமுண்டு
வம்புமரங்கள்[160] நமக்கு முண்டு, துரை
வாரண்டு ஞாயம் நமக்குமுண்டு
போலீசு ஞாயம் செலுத்திடுவோம்பிடி
போடு போடென்றுமே வென்றிடுவோம்.
மேலூரு பாளையம் நாமாச்சு, கன
மெட்டுள்ள கோட்டை பிடித்தாச்சு.
பிடியாததேசம் பிடித்தாச்சு நாம
ளடியாத பேரை யடித்தாச்சு. 5990

கெடித்தலங்களும் தான் பிடித்தோம்
மதுரைகெவுன ரென்றுமே[161] பேரெடுத்தோம்.
வாழாத பேரையும் வாழவைப்போம்
மெத்தவணங்கின பேரையும் வாழவைப்போம்
தாழாதபேரையும் தாழவைப்போம் மெத்த
சமர்த்தர் தலையையும் நாணவைப்போம்
பொல்லாத பேரையு மடக்கிடுவோம்நீதி
போலீசு ஞாயமும் செய்திடுவோம்.
நல்லோர்கள் தன்னையும் நாட்டில்வைப்போம்
பஞ்சை நாட்டினில் கொட்டையிருத்திடுவோம். 6000

தூக்குமரங்களும் தானிருக்க அதில்தூண்டில்
கயறுகளும் போட்டிருக்க
தோக்குலவார் குல ஊமையன்தான் நமது
சொல்லுக் கடங்குறானில்லை என்றால்
சீமைக்கதிகாரி நாமிருக்கத் தெற்குச்
சீமைக்குச் சின்னநாவாயெனவே
நாமும்சாதிக் காரராகலாமோ? பாவி
நாற்காலி மீதிலிருக்கலாமோ ?
கும்பினிப் பாளையமே விரசாய்ப்பாஞ்சை
கோட்டைக்குப் போகவேதான் துருசாய் 6010

கம்பளத்தார் வம்பு கண்டறிவோம் என்று
கர்னல் துரைகளும் தானெழுந்தார்.
அக்கினிமேசர் பயணம் வைத்தான்துரை
ஆற்காட்டுப்பாளையம் வந்து நின்றான்.
தெற்குச்சீமையது எங்கே என்று துரை
தேசுகி வாசுகிமுன்னடக்க
பீரங்கிமேசரும் பிற்கட்டு மேசரும்
சாராய வண்டி தயாரு என்றார்
ஈராறுபட்டாளம் வந்ததென்றார், வலு
ஏழுதுரை மாரும் வந்துநின்றார். 6020

மேசர்துரைகளும் சோஷர் துரைகளும்
மென்மேலும் பார் வெள்ளைக்காரர்களும்
மூசுமூசென்றங்கே தானுந்துரைமார்கள்
முந்திரிச் சாராயந்தான் குடித்தார்.
சட்டக்காரத்துரை கெட்டிக் காரத்துரை
சாதிவெள்ளைக்காரர் எத்தனை பேர்?
பட்டாணி ராவுத்தர் எத்தனைபேர் ? அரே
பாதரிக்காரர்கள்[162] எத்தனைபேர் ?
இங்கிலீசுத் துரை எத்தனைபேர்? வலு
கெங்கு துரைமார்களெத்தனை பேர் ? 6030

சங்கையில்லாப் படைமன்னர்களும் ஒயில்
இங்கிதமாக உடுப்பணிந்து
சகலாத்துச் சட்டை போடுவாரும் துரை
விகடகவிகள் தான் பேசுவாரும்
லகமார்லகமார் என்று[163] நடந்துமே
செகம்புகழவே வந்து நின்றார்.

கருப்புச் சட்டைகள் பூட்டினார்துரை
காலிலே பாப்பாசு மாட்டினார்கள்.
விருப்பமாக உடுப்பணிந்தார்கள் கன
மெட்டாகப் பாளையந்தான டந்தார். 6040

சீனத்து வேலையுடுப்பணிந்தார் வெகு
திரசுடன் வழி தான நந்தார்.
நானிலந்தன்னிலே பாளையக்காரனாய்
நாட்டில் துரைத்தனஞ் செய்திருக்கான்
நமக்கெதிரிகள் தானுமடா பாஞ்சை
நாட்டில் ஊமைத்துரை தானுமடா
குமுக்காய் சோஷர்கள் மேசர்கள் தானுமே
கும்புகும்பாகவே தான் திரண்டு
புத்தினி வீசல் வெடித்தாப் போல் வலு
பூனைக்கண் சோஷர்கள்[164] தான் திரண்டு 6050

கத்தி வெடிகளும் தானெடுத்துத் துரை
கல்லுவெடிகள் பிடிக்கலுற்றார்
மூஞ்சி முகஞ் சுத்த வெள்ளைகளாயங்கே
மூவாயிரஞ் சோஷர்தானடந்தார்
நாஞ்சி நாடு முதல் தீப்பறக்க அங்கே
சாஞ்சிவருகுதே பட்டாளம்
சகடயூகமாய்த்தான் வகுத்து அங்கே
தானே நடந்தார் பட்டாளமும்
மகுடவர்த்தனர் கெவுனர்களும்
செகம்புகழ வேதானடந்தார் 6060

போதைலாகிரி நடத்திக் கொண்டு வெள்ளைப்
புரவியிலேறி நடத்திச் சென்று
சேதுபாதை வழி கூடினராம் தெற்கு
சீமையை நோக்கியே சென்றனராம்
கடல்நீர் போலவே சாராயங்களுமே
கணக்கில்லா சோஷர் தானெடுத்தார்
குடங்குடமாக நெய்களைத்தானுமே
கொண்டு வந்தார் சில சோஷர்களும்,
கோழிகள்தான் முட்டைக் கோழிகளாம் பருங்
கொம்புக்கிடாய் மேசையாடுகளாம் 6070

தாழிகளாம் தயிர்ப்பானைகளாம் சில
சாதுர்ய மாமிசப் பெட்டிகளாம்

பட்டணத்திலுள்ள பாளையம்தான் பெரும்
பாதையே கூடி நடக்கலுற்ருர்.
ஒட்டகை எண்ணூறுதான், கரிஎண்ணூறு
ஓட்டமிடும் பரி எண்ணூறு
கரிகள்பரிகள் தான் வரவேயங்கே
கட்டானமாவுத்தர் தான்வரவே
இரும்புக்குண்டுகள் தாமெடுத்தார் அங்கே
ஏகமாய்க்கல் வெடி தான்பிடித்தார் 6080

ஈயக்குண்டுகளும் தாமெடுத்தார் தீ
எரியும் குண்டுகள் தாமெடுத்தார்[165]
மாயாவிநோதமாய் வைகை மதுரையில்
வந்துமசலி[166] இறங்கவென்று
வெள்ளைப்பாவாடை விரித்தாற்போல் கன
வெள்ளம் பெருகியே வந்தாப்போல்
தள்ளாக்குளத்துக்கு[167] அருகாண்மை துரை
தாவள மாகுதே அந்நேரம்
கதிராகக்கூடாரம் தானடித்தார் அதில்
தாளையமாய்த் துரை தீமெடுத்தார் 6090

மதுரையைவிட்டு வெளியேறி துரை
மார்க்கஞ் சவாரி நடக்கலுற்ருர்
பட்டாளந்தானும் நடந்திடவே துரை
பாதைவெளிக் கூடிச் சென்றிடவே
எட்டுத்திசையு மதித்திடவே துரை
பட்டாள மேசருந்தானடந்தார்.
கயத்தாறு தன்னிலே வந்திறங்கித்துரை
காங்குக் கூடார முந்தானடித்தார்.
செயத்துடனந்தப் பட்டாளமே சரும்
தீன் களருந்தி மனமகிழ்ந்தார். 6100

கயத்தார் விட்டு வெளியேறிதுரை
காரணமாக வழி நடந்தார்
புயபலமாகவே பட்டாளங்கள் தன்னைப்
போதாவாகவே முன்னடத்தி
ஒட்டப்பிடாரத்தில் சென்ருர்கள் அங்கே
காட்டுப் பாராவும் நிறுத்திஞர்கள்
கோட்டை கட்டுப் போலே தானிருந்தார் அங்கே
கும்பினிப் பாளையம் செய்தார்கள்

கூடாரங்கள் தானடித்தார் வெகு
கோலாகல மாயிருந்தார்கள் 6110

மேடுங்காடுஞ் சரிபார்த்தார்கள், துரை
மேசைகள் போட்டு இருந்தார்கள்.

சீனக்கண்ணாடிகள் [168] பார்த்தார்கள் துரை
தானுமாலோசனை செய்தார்கள்.

நானிலந்தன்னையும் பாருமென்றான் பாஞ்சை
நாடெல்லாம் ஏகவெளிய லென்றான்

மாத்தான் கோட்டை தெரியுதென்றார்பாவி
பார்த்தாலித்தினிக் கோட்டை யென்றார்.

பார்த்தாலித்தினி கோட்டைக்குள்ளே யவன்
பாளையஞ் செய்துகொண்டே இருக்கான் 6120

வாய்பேசா ஊமையன் தானுமிப்போயிந்த
வம்பு குறும்புகள் செய்தானே

ஞாயம்போலே நிறைவேற்றிடலாம் பாஞ்சை
நாட்டினில் கோட்டை எடுத்திடலாம் [169]

எட்டையாபுரஞ் சமீந்தாரல்லோ நமக்கு
ஏத்தவ னுபகாபகாரியல்லோ ?

மெட்டான கும்பினிக்காயிதஞ் செய்தியை
எட்டைய புரந்துரைதான் பார்த்து

சட்டமுடனங்கே வந்தனனும் வெகு
திட்ட மாலோசனை செய்தனனும் 6130

கெட்டிகெட்டி யென்று பாஞ்சைப்பதிமேலே
கட்டுமெட்டாகவே தானடந்தார்.

பட்டாள மேசரொருபுறமாம் அசல்
பட்டாணி மாவுத்தரோர் புறமாம்

கும்பினிதுரைமார்களோர் புறமாம் நல்ல
கொம்பந்தான் [170] மார்களு மோர்புறமாம்

தம்புராக்காரரொரு புறமாம் சாதி
வெள்ளைக்காரச் சோஷரொரு புறமாம்

புல்லாங்குழல்காரரோர் புறமாம் கத்தி
வல்லையக் காரகளோர் புறமாம் 6140

மல்லர்கள் சோஷர்கள் ஒருபுறமாம் குல்லா
வார்க்காரச் சிப்பாய்கள் ஓர்புறமாம்.

கிண்ணிப் பட்டாளம் கிரண்டப் பட்டாளமும்
கெற்சிதப் பட்டாளமோர் புறமாம்

மண்ணும்விண்ணும் செந்தூள்தான் பறக்க
அங்கே வர்ணபட் டாளங்கள் முன்னடக்க
நீராவிக்கரை தன்னிலே வந்துமே
நெருங்கிப் பீரங்கி போடலுற்ருர்.
சூருவளிபோலே தான் சுழன்று எங்கும்
சுத்தியே குண்டு மதிலிடிக்கும், 6150

பாசுபதமென்ற[171] பீரங்கி விட்டங்கே
தூசி யெழும்பும்படி யடித்தார்.
வாசிதமென்ருெரு பீரங்கி வட
காசி தேசங்கண்ட பீரங்கி
மின்னலிடிபோலே தான் முழங்கியங்கே
மென்மேலும் பீரங்கிவிட்டார்கள்
முன்னூறு நானூறு எண்ணூறுசப்தம்
முன்னேறிவிட்டானே அக்கினீசு
கோடையிடிபோலே தான் முழங்கிப் பாஞ்சைக்
கோட்டை மதிலினடியில் விழ 6160

மேடுபள்ளம் சரியாகுதையோ, மணல்
மேவுதய்யோ புகைதாவு தய்யோ.
காகம்பறக்காத பாஞ்சை நாட்டில்
ஏகமாய் பீரங்கிதான் முழங்க
லோகாதி லோகம்திடுக்கிடவே யதில்
வேகமாய் குண்டுபரியு தென்ருர்.
எத்தனைபீரங்கி மாட்டுகிருர் கோடை
இடிபோல் பீரங்கி தீட்டுகிருர்.
கொத்தாள நெட்டைத்தகர்க்குகிருர் சுத்துக்
கோட்டை மதிலை யிடிக்குகிருர் 6170

போடடாதம்பியே ரேக்கலாக் குண்டுகள்
போடடா சற்போகிக்[172] குண்டுகளை
சாடுசாடென்றுமே குண்டுகள் போடவே
சோடு சோடாக இருந்தார்கள்
நூறுநாருயிரம் குண்டுகள் தான்கையை
நொடிக்கு முன்னே முடித்துவிட்டார்.
திருதிரென்றுமே அண்டம் நடுங்கிடத்
தீர்த்துவிட்டார் சோடிர் மேசர்களும்

கருமருந்துகள் தானு மெழுந்தங்கே
　　கண்ட இடமெல்லாம் வெடிக்குதே [173] 6180

பெரு நெருப்பாகப்பத்தி எரிந்தெங்கும்
　　பேர்பெற்ற பாஞ்சை நகர்மீதில்
எத்தனையோ சப்தம் விட்டாலுமங்கே
　　எத்தனைகுண்டுகள் போட்டாலும்
மத்தியான வெயில் நேரத்திலேமழை
　　மாரியிடி போலிடித்தாலும்
மன்னன் ஊமைத்துரை நாட்டினிலே தூசி
　　மண்ணு மெழும்பலை கோட்டையிலே.
என்னகாணும் பாஞ்சைக்கோட்டையிலே ஒரு
　　எள்ளுப்பொடி மண்ணெழும்பலையே 6190

இப்படிக் கோட்டைபோல் எங்குமில்லைபாவி
　　என்றுனே அக்கினி மேசர்துரை.
எப்படிக்கோட்டை யிடிப்போ மென்றுசொல்லி
　　எண்ணுகிருன் பல யோசனைகள்
மண்டலமெங்குமே சுத்திவந்தோம் மதுரை
　　வைகைக் கரைமுதல்பார்த்து வந்தோம்
கண்டதில்லை எங்குங் கண்டதில்லை யிந்த
　　மட்டமண் கோட்டைபோல் கண்டதில்லை.
பார்த்தாலித்தினிக் கோட்டையடா தம்பி
　　மாற்றுனும் சுத்த வீரனடா 6200

மாற்றுன்கோட்டைமேல் சுட்டாலும் ஆடிக்
　　காற்றுகள் போல் நெருப்பிட்டாலும்
கட்டமண் கோட்டை தகரலையே ஒரு
　　கடுகளவு மண் பேரலையே.
எட்டையபுரந்துரை மன்னவனே இதற்
　　கென்ன ஆலோசனை சொல்லுமையா
ஊமைத்துரையைப் பிடிப்பதெப்போ எனக்
　　குத்த ஆலோசனை சொல்பாபி !
சீமைகள் கைவசம் ஆவதெப்போஇந்த
　　ஊமையன் கோட்டை இடிப்பதெப்போ

கருமருந்தெல்லாமே போகுதென்றுன் எந்தன்
　　கைக்குண் டெல்லாம் செலவாகுதென்றுன்.
அறியாததேச மறிந்துவிட்டோம்வலு
　　ஆற்காடு தேசம் பிடித்துவிட்டோம்.

பிடியாததேசம் பிடித்துவிட்டோம் இந்தப்
பேர்பெற்ற கோட்டைபோல் எங்குமில்லே.

கொடித்தலங்களும் தான்பிடித்தோம் வலு
கெவுனரென்றுமே பேரெடுத்தோம்

இத்தினிக் கோட்டைபோல் எங்குமில்லேபாவி
அத்தரி பாணிச்சோத் மாதரிச்சோத் 6220

சத்திராதி ஊமையன் கோட்டைக்குள்ளே ரெம்ப
சுத்தவீரத்தனம் செய்திருக்கான்

புலிகள் போலே பதியிருக்கான்அவன்
வலிமையைச் சற்றே பார்த்திடலாம்

எலிகள்போலே புடைக்கும்படி மின்ன
விடிகள்போலே முழங்கு மென்றூர்

இப்படியாகவே சண்டை நடப்பதை
விற்பனரே சொல்லக் கேளுங்களே

முப்பது நாற்பது பீரங்கிச் சப்தமும்
முழங்கிவிட் டானே அக்கினீசு 6230

ராவும்[174] பகலுமாய்கோபங் கொடூரமாய்
நாலேந்துநாட் சண்டை செய்தார்கள்

தீவாதையாக[175] எறித்தாலும் அங்கே
தீப்பட்டுக் கோட்டை சரிந்தாலும்

பாஞ்சைப் பதிக்கோட்டைக்குள்ளே தான்
பார்த்திபன் ஊமைத் துரைதானும்

பூஞ்சிட்டுத் துப்பட்டாமேல்போட்டு அங்கே
போதரவாகக் கொலுவிருந்தார்.

பட்டாளம் வந்துஇருக்குதென்று சற்றும்
பயமுமெவ்வளவில்லாமல் 6240

எட்டடிவேங்கை போல் சீறிக்கோபமுற்றே
ஏகாந்தமாகக் கொலு விருந்தார்.

கூட்டங்குமிசலாய்[176] வந்த குருவிமேல்
வேட்டைக் கெழும்பிட வேணுமென்று

தாட்டிமையான கிடுகிட்டி நாய்க்கனும்
சக்கிலியன் பொட்டி மாதிகனும்

ஆட்டும்[177] பாட்டுமாகத் தாரதரைப்போலவே
வேசம் போட்டு விளையாட்டுசெய்தார்.

சேட்டைக் காரனந்தப் பொட்டிப்பகடையும்
ராட்டு[178] மேல் ராட்டு வரட்டுமென்றுன் 6250

வெள்ளைக் குருவிகள் கொள்ளைக் குருவிகள்
வேட்டைக் குருவிகள் பார்ப்போமென்றும்
துள்ளிக்குதி போடுவானும் வலு
துஷ்டனடா பொட்டி மாதிகனும்
சங்குமணி கைத்துளசி மணிமுத்துத்
தாவடமான உத்ராட்ச மணி
குரங்குமணி நல்லகுண்டுமணி
கொண்டைக் கினியது ரெண்டுமணி
சிங்காரமாகப் புனைந்துகொண்டான் சங்கு
சேகண்டி [179] கையிலெடுத்துக் கொண்டான் 6260

வங்குஞ் [180] சிறங்குஞ் சொறிவானும்வன
சங்க நாதத்தொனி செய்வானும்
சக்கதேவியைப் பணிவானும் ஊரு
சாத்துடை யாரையும் போற்றுவானும்
மிக்கவே பல்லைக்கடிப்பானும் தம்பி
கெக்கெக் கென்று சிரிப்பானும்
கிடுகிட்டி நாயக்கன் வெகுசமர்த்தனவன்
கிழட்டுத்தாதன் போல்வேசங் கொண்டான்.
குடுகுடென்றங்கே பொட்டிப் பகடையும்
குருட்டுத்தாதன் போல் வேசங்கொண்டான் 6270

கள்ளுவெறிபோலே மேலாட்டும் அவன்
கண் சிமிட்டு மிருகாலாட்டும்
உள்ளாயுங்களும் தானெடுத்து அதை
உள்ளிட்டு மெள்ளக் குதிபோட்டு
பூனைக்கண் போலே முழிமுழித்தான் தலை
கோணக் கோணவலித்தே யிழுத்தான்
கூனக்கிழவன்போல் தானடந்தான் சுரக்
குடுக்கை கையிலேதான் பிடித்தான்
உடும்புமான்மரை காடை கதுவாலி
உள்ளான்சிட்டு வேட்டை யாடவென்று 6280

கெடும்பு செய்யாமல் சற்றே இருந்தங்கே
கெவுன [181] மார்க்கமெழும்பு மென்றார்
தப்பு [182] உருமிகள் தானெடுத்து அவர்
தந்தனப் பாட்டுதமிழ் படித்து.
துப்புத்துரவு விசாரிக்கவென்றங்கே
தொங்கலில் போறார்கள் சிங்கேறுகள்

பொட்டிபகடை யொருதாதன் கிடு
　　கிட்டி நாயக்கன்வலு தாதன்.
எட்டிநடந்தங்கே சென்ருரே அங்கே
　　பட்டாளம் நிற்பதைக் கண்டாரே　　6290

மாலேநேரப் பொழுதாச்சுதென்றும் வா
　　சாலவித்தை பண்ணவாச்சு தென்றும்
சோலேமலேத்தாதர் நாங்களென்றும் நல்ல
　　சோறுகறிகளும் வேணு மென்ருர்.
கைக்கரணம் போட்டுச் சாடைச் சொன்ஞன்வட
　　காசி தேசம்விட்டு வாரோ மென்ருர்
நெய்ப்பந்தங்கையினில் தாளெடுத்தான் வெகு
　　நிச்சயவான் போலே மார்பணேத்தான்.
சோலேமலேத்தாத னெங்கள்பெருமாள் எங்கள்
　　சொக்கருடமைத்துன ராமெங்கள் பெருமாள்　　6300

வாலேச் சகோதரர்காணெங்கள் பெருமான் மதுரை
　　வைகைக் கரைத்துரையானெங்கள் பெருமாள்
இந்த விதமாய்த் தமிழ் படித்து அங்கே
　　சிந்தை மகிழ்ந்து விளேயாடி
தந்தனப்பாட்டுகள்தான் படித்தார் அங்கே
　　தாதாகுதாளம் போட்டே குதித்தார்.
மாற்ருன் வஞ்சகம் தோற்ருமல்மதி
　　மயங்கிக் கும்பினிப்பட்டாளம்
வேற்ருளென்று மதியாமல் இதுமித்திரபேத
　　மென்றுமே தோற்ருமல்　　6310

வேடிக்கைபார்த்து மகிழ்ந்தார்கள் கதை
　　மேலோரே சொல்கிறேன் நல்லோரே.
மூடி முழிக்கு முந்நேரத்திலே சபை
　　கூடிக்கலந்தங்கே கம்பளமும்
ஐம்பது பேருடன் ஊமையன் வீரிட்டு
　　சம்ரதாயஞ் செய்ய வேணுமென்று
செம்பாதிராத்திரி வேளேயிலே சக்க
　　தேவியைப் போற்றிப் பணிந்து கொண்டு
மன்னன் வலதுபுரம் மீசை கெடி
　　வல்லயம் போலே துடிதுடிக்க　　6320

பின்னுமிடதுபுறம் மீசை ஈட்டி
என்னு மூனேபோலேதான் துடிக்க

ராத்திரி காலத்துப் பாஞ்சை நகரத்து
நாடுகடந்து வழிகூடி

காற்றடியும் மழைத்தூற்றலிலே சற்றே
கன்னங்கருத்த இருள் தனிலே

இருட்டுக்குமரி இருட்டினிலே அங்கே
ஏகவெளியான காட்டினிலே

சறட்டென்றசத்தங் கேளாமல் நெஞ்சால்
தவழ்ந்து போறதைப் பாருங்களேன் 6330

மையிருளான இரவு தன்னில் மழை
மாரியுந்தூற்றல் விழுகுதென்று

பையப்பைய மண்டிதான் போட்டு மெள்ளப்
பதியிருந்து ஒளியிருந்து

கும்பினிபாராவில்தான் நுழைந்தார் தடிக்
கம்பால் சிலம்புகள் தானடித்தார்

அம்புலி மான்போலே பாய்ந்து விட்டார் மத
யானைகண்ட சிங்கம் போலே நின்றார்

பாராமுறிந்து வருவதைக் கண்டந்த
சீரான கும்பினிப் பட்டாளம். 6340

வாளும் வரிசைகள் தானிருத்திக் கரு
மருந்து போட்டு மளமளென்று.

பத்துவாய்தன்னில் நெருப்பு வைத்தாலங்கே
கத்தரிக்குதையோ அப்புரத்தே

மத்தாப்பு தீவெட்டி குத்துவிளக்கெல்லாம்
மாரியினால் மழைத் தூரலினால்

சற்றும் வெளிச்சங்களில்லாமல் அங்கே
மெத்த இருளாகத் தோணுதென்றார்

நித்திரை வேளை மதிமயக்கம்வலு
நேரமோபொல்லா இரவு தன்னில் 6350

பத்தர்தனக்கு முத்தி கொடுக்கும் பரமசிவ
னருளுண்டு மென்றும்

சக்தியுமையருள் புத்திசிகாமணி வெற்றி
வேலுண்டு மென்றே எழுந்தார்.

குத்துக் குத்தென்று குலவையிட்டார்
கூடாரத்துக்குள்ளேதான் நுழைந்து

சக்தி சடாச்சரி வீரமல்லு பொம்மு
சக்கதேவி பதந்தான் தொழுது
வெற்றி செய்து வெளியேறவென்று துரை
வேகமாய் கோபமுற்றேசினந்து 6360

பாலா ஈட்டி குலுக்கலுற்றான் துரை
மார்களைக் குத்தியிழுக்கலுற்றான்
சிலாமீன் போலே பாயுகிறாரிடை
வாளருவாள் கொண்டு வீசுகிறார்
தோரையைக் குத்தி இழுத்தால் போல் கன
சோஷர்களுமங்கே பாடாச்சு
பாதையிடிந்து விழுந்தால் போய்கன
பட்டாள மேசரும் பட்டாச்சு
காளிகோவில் பொங்கலிட்டாப் போல் கன
மூளிக்கிடாய் வெட்டி வீழ்ந்தாப் போல் 6370

தாழியுடைந்து தகர்ந்தாற் போல் முட்டை
கோழி கிடந்து துடித்தாற்போல்
மாடமிடிந்து விழுந்தாற்போல் துரை
மன்னவன் கும்பினிப் பட்டாளம்
கூடமிடிந்து விழுந்தாப்போல் கல்லுக்
கோட்டை சிதறி விழுந்தாப்போல்
படபடென்று துரைவீரபாண்டியன்
பாயும்புலி போலே சீறிநின்று
குடுகுடென்று அங்கே சோஷர் பட்டாளத்தைக்
கொன்றுமே வெட்டியெறிந்திடுவார் 6380

தலைகள் வேறேஉடல் வேறேஅங்கே
சாயுதே பூதகணம் போலே
வலையிலகப்பட்ட மான்போலே அங்கே
மடிந்துபோகுதே பட்டாளம்
உரப்பெட்டிகள்போல தொப்பிகள் ஓடவே
உருண்டுபோகுதே பட்டாளம்
பிரப்பங் கூடைபோல் தொப்பிகளோடவே
பிரண்டுபோகுதே பட்டாளம்
சோஷர்பட்டாளம் முறிந்தய்யோ துரை
மார்களும் அங்கே மடிந்தார்கள் 6390

மேஷர்பட்டாளம் வெகுண்டிடவே பரு
வெள்ளரிக் காய்போலே வெட்டுகிறார்

மக்களுடன் துரைதான் மடிந்தார்துரை
வாசுகி தேசுகிதான் மடிந்தார்.
அக்கரவம்புனே சொக்கர் செயலென்று
ஆதி சிவலோகம் சேர்ந்தார்கள்.
திக்குவிசயனு மத்துரைப் பாண்டியன்
தீரன் சமர்த்தையும் என்ன சொல்வேன்.
சக்கரம்போலவே தான்சுழன்று இட
சாரிவல சாரியாக வந்து 6400

அக்கினி மேசர் பட்டாளங்கள் தன்னையும்
சுக்கு சுக்காகவே தானடித்தார்.
அடித்திடப் பட்டாளம்தான் வெறுவியங்கே
ஆயுதம்போட்டு இறந்தார்கள்
முடிக்கும்பிரமன் விதிப்படியோ வென்று
முன்னூறு சோஷர்கள்தான் மடிந்தார்.
நன்னயமாகவே கும்பினிப் பட்டாளம்
முன்னம் விதியென்றுதான் மடிந்தார்.
மன்னவன் ஊமைத்துரை தன்னுடன் வேகமாய்
வந்து எதிர்த்தார் பட்டாளமெல்லாம். 6410

பட்டாளம் வந்து எதிர்த்திடவேதுரை
பார்த்திபன் கோபமுற்றே சினந்து
கட்டாரி ஈட்டியும் தானெடுத்துப் பட்டாக்
கத்தியுரைவிட்டுத் தான் பிடித்து
மாலயன் காணுத மூலாதாரப் பொருள்
வந்துநமக்கு உதவி செய்வாய்
ஆலவிடமுண்டோன் தன்னருள் நெஞ்சத்தில்
அன்பாகத் தானுந்தியானஞ் செய்தான்.
கோலமாகத் தானும் புறப்பட்டுமே
குலவை யிட்டாரே ஊமைத்துரை 6420

பூலோகமெய்க்கவே சோஷர் பட்டாளத்தை
போர்க்களந் தன்னிலறுத் தெறிந்தான்
கால்களற்றுச் சிலபேர் மடிந்தார் அங்கே
கைகளற்றுச் சிலபேர் மடிந்தார்
தாள்களற்றுச் சிலபேர் மடிந்தார் அங்கே
தோள்களற்றுச் சிலபேர் மடிந்தார்.
மூளைசிதறிவிழுவோரும் அங்கே
மூக்கிலே ரத்தம் பரிவோரும்

ஏழைஎன்று சிலர் சொல்வோரும் பின்முன்
ஏங்கியே விழ்ந்து கிடப்போரும் 6430

மலைகள் போலேவிழுவோரும் அங்கே
வாயிலே ரத்தம் பரிவோரும்

சிலைமதன் வீரனுமமத்துரைப் பாண்டியன்
செய்யுஞ் சமர்த்துகனென்ன சொல்வேன்

இப்படியாகவே பட்டாளங்கள் தானும்
செப்புத்தரையாகிப் போயிடவே

முப்பது நாற்பது கும்பினிப்பட்டாளம்
மூடிமுளிக்கு முன் நேரத்திலே

பட்டாளந்தானு மடிந்ததையும் அங்கே
பார்த்தானே அக்கினி மேசர்துரை 6440

கட்டாமி ராசுக்கோல்என்று சொல்லித்துரை
கன்னலுச் சென்னலும்கோப முற்றார்.

பட்டாளத்தைப் பார்த்து பாசை சொன்னான்வெகு
கட்டுமெட்டாய் நின்றுசண்டை செய்தான்

சட்டென்று துப்பாக்கி சுட்டானும்படை
வெட்டிவிரட்டி முடுக்கினனும்

கும்பினித்துரைகளும் வேகமுடன் வலு
கோபங் கொண்டங்கினி மேசர்துரை

கம்பளத்தானிந்தராத்திரி வேளையில்
வம்புவளர்த்தது பாருமென்றான் 6450

வேசமாருட்டமாய் ராத்திரி வேளையில்
மோசஞ் செய்தானிந்தக் கம்பளத்தான்

ராசனுக்கு இது நீதிமுறையோ
நாசகாலனடா ஊமையன் தான்

ஊமையனை விடக்கூடாது யிப்போ
தாமசம் செய்யாமல் நாம்பிடிப்போம்.

நானல்லோ அக்கினி மேசரென்றான்
பாஞ்சை நாட்டுக்கு நானொருகாலனென்றான்

இப்படி அக்கினிமேசர் சொல்லப்படை
துப்பாக்கி பீரங்கிதான் முழங்க 6460

மந்திரமோ என்ன தந்திரமோஇது
மைமயக்கோ அவன் கைமயக்கோ

சந்தாசலத் தெய்வந்தன்னருளோ அந்த
அந்த சக்கதேவியம்மன் தன்னருளோ

முழிப்பாய் கும்பினி சுட்டாலும் வெடி
மூர்க்கமாய் சப்தங்கள் விட்டாலும்
பளிச்சென்று குண்டுகள் தான்சிதறி நவ்வலப்
பழங்கள் போலே உதிர்ந்திடவே
மைக்காரன் ஊமையன் செய்யுஞ் சமர்த்துகள்
விஸ்தாரங்கள் தன்னை என்னசொல்வேன் 6470

வைபோகி என்ருெரு அச்சுமட்டம் வட
தேசத்துப் பச்சை புரவிமட்டம்.
துரைக்கூடாரத்தில் நிற்குதென்ருன் ஒரு
சொல்லுக் கடங்காப் பரையனென்ருன்
பரையன் தன்னையும் தானடித்துத்துரை
குதிரையின் தும்பு தானவிழ்த்தான்.
மன்னன் சிவத்தையாவென்ருனே இந்த
வைபோக மட்டத்திலேறு மென்ருன்
நன்னயமாகவே சொல்லுகிருேம் நம்மள்
நாட்டுக்குப் போகவே யிந்நேரம்
அக்கினிமேசர் கூடாரத்திலே ஒரு 6480

அச்சுமட்டம் வெகு கெற்சிதம்
நிற்குதடா நமக்கு ஆச்சுதென்ருர்வெகு
நேரங்களாச்சு விடியுதென்ருர்
வெள்ளைக்குதிரையும் தும்புவிட்டு அதன்
மேலேறி ஊமையன் சாரிவிட்டு
கொள்ளைக்கு ஆரம்பந்தான் அங்கே
கூடாரந்தான் முளை தானிழுத்தான்.
வெள்ளிக்கட்டி வெடி கொள்ளையிட்டான் அங்கே
மேசைப்பலகையும் கொள்ளை கொண்டான் 6490

கள்ளன் திருடன் களுவனுடா வலு
கட்டையன் பொட்டிப் பகடையடா
தாதனைப்போல் வேசம் போட்டபகடையும்
பூதம்போலே கொள்ளையடிக்குகிருன்
சாதங்கரிகளும் கொள்ளைஎன்ருர் சீமைச்
சாரயப்பெட்டியும் கொள்ளை யென்ருர்
சீனத்துப்பாக்கியும் தானெடுத்தார் அங்கே
சொந்தப் பட்டாக்கத்தி தானெடுத்தார்
தீனுக்கு ஏற்றபதார்த்தமெல்லாம் சுமை
சேர்த்துக்கொண்டார் வழிபார்த்துக்கொண்டார் 6500

விடியக்காலங்கள் ஆச்சுதென்று வெகு
சடுதியில் வெளியேற வென்று

பிடிபிடியென்றுமே பாசுபத மென்ற
பீரங்கியைப் பற்றிதானிழுத்தார்
பணப்பெட்டி தன்னேயும் தூக்குகிருர்பாஞ்சைப்
பதியிலே கொண்டுபோய்ச் சேர்க்குகிருர்
சணப்பொழுதாகிலும் தாமதஞ் செய்யாமல்
தாவழம் வந்தானே ஊமையன்தான்.
பலபலவென்று விடிந்திடவும் பாஞ்சைப்
பதியில் கம்பளஞ் சேர்ந்திடவும் 6510

நிலவரைக்குள்ளே கொலுவிருந்தார் கதை
நிச்சயஞ் சொல்லக்கேள் நல்லோரே
துரைகள் கும்பினிப்பட்டாளச் செய்தியைச்
சொல்லக் கேளுங்கள் நல்லோரே
அரை நாளிகை வழிதூரம் ரத்தவெள்ளம்
ஆருகஓடுதே அந்நேரம்
எங்கெங்கே பார்த்தாலும் தான்தலேயாய் படை
யங்கங்கே தானுங்கிடந்திடவே
தோள்களில் வெட்டுண்டு நாலாயிரஞ்சனம்
சோஷர் மேசர் துரைதான் மடிந்தார். 6520

தாள்களில் வெட்டுண்டு மாண்டு மடிந்தவர்
தானே அநேகம் படைகளுண்டு.
துள்ளியே சோஷர் மடிந்தார்கள் கனவெள்ளேக்
காரர்களிறந்தார்கள்
வெள்ளித் தடிக்காரருயிரம் பேர் அங்கே
துள்ளியே மாண்டு கிடந்தார்கள்
பாராச்சிப்பாய்கள் தானிறந்தார் அங்கே
பட்டாணிமாவுத்தர் தானிறந்தார்.
சூராதிசூரர்கள் தானிறந்தார் வலு
சோஷர்களாயிரம் பேர்மடிந்தார். 6530

வீராதிவீரர்கள் தாரெங்கும்
வெள்ளேப் பாவாடை விரித்தாப்போல்
ஈராறு கும்பினிப் பட்டாளங்கள்தானும்
எல்லாம் மடிந்ததே அந்நேரம்
“அத்தரிபாணிச்சோத் மாதரிச்சோத்தே”ன்று
அக்கினி மேசர் மனதுழன்று
“நித்திரை வேளேயில் கம்பளத்தான் வந்து
சத்துரு மோசங்கள் செய்தானே

பட்டணத்து வெள்ளைக் குதிரையடா பாவி
கட்டுக் குதிரையைக் காணோமென்றான். 6540

மெட்டான வெள்ளைக்குதிரையடா பாவி
பட்டாக்கத்தியும் தான் போச்சுதென்றான்
மின்னலிடி போல் முழங்கும் பீரங்கியைத்
தன்னைக் களவுகள் செய்தானே
அன்னியாயக் கொள்ளையடித்தானே"யென்று
அக்கினீசுத்துரை யேது சொல்வான்;
"துற்புத்தியாகவே கம்பளத்தார் வந்து
இப்படிக் கொள்ளையடித்தார்கள்
சற்பினை மோசங்கள் செய்ததற்கும் அசல்
சாதித்துரைகளைக் கொன்றதற்கும் 6550

பட்டாள மேசரிறந்ததற்கும் சென்ன
பட்டணஞ் சீமையறிவதற்கு"ம்
திட்டமாய் காயிதம் தானெழுதி அதி
சீக்கிரம் கவர்னருக்கனுப்பினனும்
சட்டமாய் காயிதம் செய்திகளைச் சென்ன
பட்டணத்துரைகளும் தான் பார்த்து
மட்டுக்கடங்காத ஊமையன் தானிங்கே
வந்தான் வருவான் பின் தப்பாமல்
கட்டுக்காவல் கெட்டிகெட்டி என்பார்
சென்ன பட்டணங்கோட்டை பதனமென்பார் 6560

பட்டப்பகலிரு பத்தஞ்சு நாழிகை
திட்டிவாசல் வழிசாத்துமென்பார்.
கெவுர் மண்டார்களும் நித்திரையில்லாமல்
மவுன ஆலோசனை செய்யலுற்றார்.
பலவிதமாகவே அக்கினி மேசருக்கும்
பண்பானகாயிதம் தெம்புடனே
வக்கணை வைத்து எழுதினார்கள் துரை
மார்களாலோசனை செய்த பின்பு
தெற்குச் சீமைக்கு அதிபதியாகிய
தீர்க்கவான் ஊமையன் கோட்டையின் மேல் 6570

லட்சத்தி ஐம்பதினாயிரம் குண்டங்கே
கெச்சிதமாகவே போடுமென்றும்
மிச்சமாய்க் குண்டுகள் போடுமென்றும் லெக்கை
வீரிட்டுக் கோட்டை மேலேறுமென்றும்
எட்டுநாள் சண்டை ராவும் பகலுமாய்
கோட்டை பரப்பிடவேணு மென்றும்

எட்டுநாளுஞ் சரியாச்சு தென்றுலந்த
மட்டுக்கடங்காத ஊமையனே
நம்மாலே வெல்லவும் கூடாது எந்த
நாளுங் கெவுனர் சொல்தப்பாது 6580

செம்மையுடனந்த தெட்சண பூமிக்கு
சின்ன நவாபென்று பேர் கொடுத்து
வீரசூரப்பட்டங் கட்டுமென்று சொல்லி
விரைந்து காயிதம் தானெழுதி
காரமுடனே எழுதினார்கள் அந்தக் காயிதம்
வந்திங்கே சேர்ந்ததுவே
வந்திடுங் காயிதச் செய்திகளைத் துரை
மன்னவன் அக்கினி மேசர்துரை
சிந்தை மகிழ்ந்திடத்தான் பார்த்து அதி
சீக்கிரம் ஊமைத்துரை தனக்கு 6590

கெவுர் மெண்டார்களினு த்தரவின்படி
கெச்சிதமாய் ஒரு காயிதம் தான்
சௌர்யமுள்ளதோர் பாஞ்சைத்துரைக்கங்கே
விபரீதமாக எழுதலுற்றான்.
இத்தலந்தனிலே ஊமைத்துரை நீதான்
சுத்தவீரனென்று பேரெடுத்தாய்
அஸ்தமித்தயிருள் வேளையிலே வந்து
அஞ்சாமல் சண்டை நீ செய்தாயே
எந்தன் சமர்த்துகள் பாராமல் பக 6600

லெதிர்த்துச் சண்டைகள் செய்யாமல்
வந்து களவுகள் செய்தாயே உந்தன்
வஞ்சக மோசந் தெரிந்ததிப்போ
நல்லது ஆகட்டும் இன்று முதல் எட்டு
நாளைக்குள் உன்னுட கோட்டையின் மேல்
வல்லமையாகவே பீரங்கி மள
மளென்று சப்தங்கள் போடுகிறோம்
லட்சத்தி ஐம்பதினாயிரம் குண்டுகள்
நெறுநெறென்று பொழிந்திடுவோம்
அச்சமில்லாமலே கோட்டைக்குள் தானின்று
மிச்சமாய் சண்டை நீ செய்தாக்கால் 6610

தெட்சணம் பூமிதிசைக்காவல் தெற்குச்
சீமைக்குச் சின்னநவாபெனவே
முச்சக மெய்க்கவே பேர் கொடுத்து
உன்னை முத்தியாய்ப் பட்டமும் கட்டுகிறோம்.

ஆத்தாம கோடி நீ போளுக்காலுன்னை
அமளிப் பொறிபோல பொறித்திடுவேன்.
பார்த்தால் சொற்ப மனுசனென்று ஆடிக்
காற்றினில் பஞ்சு போல் தூத்திடுவேன்
வஞ்சகச் சண்டைகள் செய்தாயே பாவி
மார்க்கமுந்தப்பி நடந்தாயே 6620

நெஞ்சுறிதியாக நேரே நின்று பாவி
அஞ்சாமல் சண்டை நீ செய்தாக்கால்
மனது போலே நடக்குகிறோம் கனம்
பொருந்தப்பட்டமும் சூட்டுகிறோம்
தனதாய் நம்மிடம் வந்தாலும் நல்ல
சமர்த்தனென்று பேர்தான் கொடுப்போம்
ராசிகளாகவே யிங்குவந்தால் ஒரு
நாளுமறப்பதுமில்லை என்றார்
காசி தேசமுதல் தான் புகழ்வோ மென்று
காயிதம் ஊமைத்துரைக்கெழுதி 6630

ஆடுதல் ராமசாமி நாயக்கன் கைதனிலே
அன்பான காயிதம் தான் கொடுத்து
நாடு புகழவே நீ நடந்து பாஞ்சை
நாட்டரசனிடம் போய்ச் சேர்ந்து
கும்பினிக் காயிதம் தான் கொடுத்து பாவி
அன்பாகச் செய்திகள் தானுரைத்து
சம்ரதாயங்களும் தானறிந்து யிந்தச்
சணமே வந்திடவேணு மென்று
அக்கினி மேசர்துரையுரைக்க வலு
ஆடுதல் ராமசாமி யேது சொல்வான் 6640

கக்கிசக்காரன் கோட்டைக்குள் தான்போக
கண்ணீர் மயங்கியே நின்று சொல்வான்.
இத்தனை காலமும் கும்பினியாருக்குப்
பெற்றபிள்ளையாகத் தானிருந்தேன்.
உத்தரவுப்படி நான் போறேனங்கே
சுத்தவீரனூமத்துரையிடத்தில்
கத்திக் கிரையாகப் போகாமல் தெய்வங்
காப்பாற்றவேணுமே என்றுளும்.
நற்றமிழ் வாசம் பொருந்தும் ராமசாமி
நாயக்கனும் பாஞ்சைப்பதி நோக்கி 6650

முத்துக் கடுக்கண் முகமிலங்க அவன்
முண்டாசு கட்டுமேதான் துலங்க

சித்திர விஸ்தார நடையிலங்க அவன்
 நெத்தியில் திருநாமமிட்டு
பச்சைத் தலைப்பாசிரசில் வைத்துக் கையில்
 பாங்குடன் வெள்ளித் தடியெடுத்து
அச்சங்களாக நடை நடந்து துரை
 ஆடாசு[183] நிறைவேற்றவென்று
காகம் பறக்காத கோட்டையிலே தூது
 போகத்தான் வேணுஞ் சவாரியென்று 6660

ஆகட்டும் வந்ததெல்லாம் வரட்டுமென்று
 ஏகாந்தமாயங்கே சென்றனனும்
வெள்ளை வீசிக்கொண்டு[184] வாரது கண்டானே
 வேவுகாரன் பொட்டிப் பகடையுந்தான்.
கள்ளுவெறியேறித் துள்ளிக் கொண்டு அங்கே
 காத்தன் ஊமைத்துரை சமுகமதில்
தெண்டனிட்டுச் செய்தி சொல்வானும்.
 இந்தச் சேவுகன் வாரதை உரைத்தனனும்.
மண்டலங்கள் புகழ் ஊமைத்துரையுமே
 நிலவரை விட்டு வெளியில் வந்தார். 6670

கொலுவலங்காரஞ் செய்திருந்தார் அப்போ
 கும்பினி ஆடுதலங்கே[185] வந்தான்.
வலுமைக்காரனும் ஊமைத்துரைக்குமுன்
 வந்தானே ராமசாமி நாயக்கன்
ஊமைத்துரைக்குச் சலாமுஞ் செய்தான் கும்பினி
 உத்தரவைக்கையில் தான் கொடுத்தான்.
தாமதமன்னியில் ஊமைத்துரையுமே
 சலுதியில் காயிதம் பார்த்தனனும்
காயிதம் பார்த்தந்த ஊமைத்துரை தானும்
 தீயது போல் கோபமீறிடவே 6680

"ஞாயமும் நன்றாயிருந்ததென்று சொல்லி
 ஆயிரந்தேரமும் பற்கடித்து
கண்கள் சிவந்திடக் கோபங் கொண்டு வெகு
 பொங்கமுடனங்கே ஏதுசொல்வார்.
சிங்கத்துக்கு நரி பட்டமுந்தான் கட்டி
 தேசத்தை யாண்டிடவைப்பது போல்
வேங்கைப்புலிக் கொருதூங்கல்கிடாய் குட்டி
 சாங்கமாய் மேன்மை கொடுப்பது போல்,
ஆங்காணும் நல்லவைரிக்கு[186]த்தானொரு
 செங்காலி நாரை எதிரியென்றும் 6690

கொக்குப் படைபோலே மொக்களிப்[187] பூச்சிகள்
கூடவலுசார்க்[188]கெதிரியென்றும்
அக்கினிசுத்துரை கேலிபண்ணியிந்தச்
சக்கரக்[189] காயிதம் தான்போட்டான்
ராசிகளாய் வரச் சொன்ஞனே விசு
வாசிபோல் காயிதம் போட்டானே.
வாசமுள்ள துரை மேசருக்குப் பதில்
காயிதம் வக்கணை பாருமெ"ன்ருன்
உன்னைப் போலக்கினி மேசர் துரையிங்கே
ஒன்பதிஞயிரம் வந்தாலும் 6700

மின்னலிடி போலிடித்தாலுமிங்கே
மேன்மேலும் பீரங்கி போட்டாலும்
ஒழுங்குபோலவே பட்டாள மேசர்க
ளொன்றுலட்சமாக வந்தாலும்
வலங்கையிடங்கை[190]யுந்தான் பிரித்து வாகா
மாறுமாறென்று பொழிந்தாலும்
லெட்சத்தி ஐம்பதிஞயிரம் குண்டு நீ
நெறுநெறென்று நெறித்தாலும்
கொச்சிக் கோழிக்கூடு அச்சுக்கரை முதல்
கும்பினியார் வந்தெதிர்த்தாலும்

கட்டமண் கோட்டைக்குள் நாமிருந்து பாவி
சட்டமாய்[191] வேட்டைகளாடிடுவோம்,
அட்டாளதேசமுந்தானறியப்படை
வெட்டி விரட்டுவோம் தப்பாது
ஆனதிஞலிது தானிச மென்றுமே
மானமரியாதை யாயிருந்து
வானமும் பூமியுந்தானறிய நல்ல
மார்க்கமாய்ப் புத்தியனுசரித்து
நாடி நமக்குச்சலாமுஞ் சொல்லி
இந்த நாடுவிட்டு ஒரு நாழிகையில் 6720

ஓடிப்பிழைத்துப் போகச் சொன்னேனே,[192]
இந்தஉத்தரவு தப்பாது உன்ஞனே.
மானமிடிந்து விழுந்தாலும் பாவி
மலைதகர்ந்து சரிந்தாலும்
மண்டல மெங்குமழிந்தாலும் பாவி
வானத்தின் மீன்களுதிர்ந்தாலும்
அண்டமடுக்குங்குலைந்தாலும் பாவி
ஆதிகேடன் முடி வீழ்ந்தாலும்

பூலோக மெல்லாமழிந்தாலும் உயிர்
பொன்னுலகஞ் சேர்ந்து வாழ்ந்தாலும் 6730

தாலங்களிற்று விழுந்தாலும் இங்கே
சந்திர சூரியரொளிகுன்றினாலும்
நானும் பாஞ்சைப்பதி விடேனென்றானங்கே
ராசியாய் வாரதேயில்லே என்றார்
முக்காலுஞ்சத்தியந்தப்பாது யென்று
மிக்கவே காகிதந்தானெழுதி
அக்கினி மேசர் துரைக்கல்லவோ காயிதம்
ஆடுதல் கையிலேதான் கொடுத்து
துப்பட்டித்தலைப்பா சாலுவைச் சாத்துரா
கற்பூரவெள்ளிலையுங் கொடுத்து 6740

அற்புதமாக அனுப்பினனும் கும்பினி
ஆடுதல் ராமசாமி மகிழ்ந்து
ஊமைத்துரைக்குச் சலாம் போட்டு அந்த
உத்தரவை வாங்கிப் படித்துவிட்டு
ராமசாமி நாயக்கன்தான் புறப்பட்டுமே
நளினமாய் வந்து சேர்ந்து விட்டான்
அக்கினி மேசர்துரையைக் கண்டு செய
மிக்கவே மூன்று சலாம் போட்டு
மிக்கவே காயிதம்தான் கொடுக்க அதை
அக்கினி மேசரும்தான் பார்க்க 6750

ரெம்ப ரெம்பக் கோபமுண்டாகி இனி
“கும்பினிஞாயம் போல் செய்வேனென்று
கும்பினியார் செய்கின்ற ஊமையன்
சம்ரதாயமினி பார்ப்போமென்று
நல்லதடா எட்டு நாளையிலேயவன்
வல்லமை பார்க்கலாங்கோட்டையிலே.
சில்லாக் கோட்டுச் சீமையோதானிது
சின்னநவாபுடன் கோட்டையிதோ
கல்லாலே கோட்டைகள் தானிதுவோ
கட்டிடும் கோட்டைவல் டூட்டியென்றான் 6760

அல்லாகிருபையின் மேன்மையினாலிந்தச்
சொல்லுறுதிக் கோட்டைதான் பிடிக்க
சொற்பமாய்ப் பாளையக்காரனடா வலு
துஷ்டன் ஊமைத்துரைப் பாண்டியனடா
அற்பமாய்க் கோட்டையிடியாவிட்டால் பாவி
அக்கினீசு என்ற பேரேது

கும்பினியாரென்ற பேரேது சில்லாக்
　　கோர்ட்டு ஞாயமுந்தீராது
வம்புங்குறும்பும் ஒடுங்காது
　　இந்தமாத்தான்[193] கெடுப்புகள் [194]ஆருது　　6770

மெட்டுள்ள கோட்டைகள் தான்பிடித்தோம்
　　சாதிவெள்ளைக்காரனென்று பேரெடுத்தோம்
எட்டெட்டறுபத்துநாலு கலெக்கட்டர்
　　இங்கிலீசுக் கொடி நாட்டிடுவோம்.
மண்கோட்டைக்குள்ளேதான் ஊமையன்தான்
　　சம்ரதாயங்களும் பேசுகிருன்[195]
திண்கச்சினமாகத் தோணுதடா தீன்
　　தீனென்று கோட்டைமே லேறுமெ'' ன்ருன்
அந்நேரம் முன்னூறு நானூறு சப்த
　　மின்னலிடி போல் முழங்கிவிட்டான்.　　6880

எந்நேரம் பார்த்தாலும் பாஞ்சாலங்கோட்டைமேல்
　　மண்ணும் விண்ணும் செந்தூள்தான் பறக்க
அக்கினி மேசர்துரையுமே கோபமூற்
　　ருங்காரமாகவே ஏது சொல்வான்
திக்குத்திசையுமெரிந்திடவே அனல்
　　தீட்டியே பீரங்கி விட்டான்காண்.
அண்டங்கள் தானும் வெடித்திடவே சப்தம்.
　　ஆர்த்தன பாஞ்சாலங் கோட்டையின் மேல்
துண்டரீகமான அக்கினி மேசரும்
　　சுட்டானே பீரங்கி அந்நேரம்.　　6790

ஊழிகாலத்திடி போல் முழங்கியங்கே
　　ஊமைத்துரையுட கோட்டையின் மேல்.
ஆழியும்வற்றிச் சுவரிடவே அனல்
　　தூளிகளெங்கும் பறந்திடவே
மண்டலமெங்கும் பறந்திடவே
　　பாஞ்சை மன்னவன் கோட்டை மேல் பீரங்கியும்
அண்டபகிரண்டந்தான் குலுங்க ஆதி
　　சேடன் பணமுடியும் நடுங்க
குண்டுபோட்டான் இரண்டாயிரம் ஒன்று போல்
　　கோடையிடி போலேதான் முழங்கி　　6800

லட்சாதி லட்சம் புகையுருண்டையங்கே
　　நாட்டிவிட்டான் பாஞ்சைக்கோட்டையின் மேல்
வைத்தகால் பின்வைக்கா குச்சிலியர்படை
　　மாட்டினர் பீரங்கி கோட்டையின்மேல்.

மின்வெட்டி ஆற்றல் ஒளிர்வதுபோல் மழை
    மேற்புகிழியப் பொழிவதுபோல்
வன்பிட்ட அக்கினி மேசர்துரைபடை
    மாரிபொழிவது போல் பொழிந்தார்.
போட்டானே பீரங்கி பாஞ்சாலங்கோட்டைமேல்
    பூமிகளெல்லா மதிர்ந்திடவே 6810

தாஷ்டிகனன ஊமைத்துரை நாட்டினில்
    போட்டானே பீரங்கி அஞ்ஞூறு
விண்ணும் மண்ணும் புகைக்காடாகியிந்த
    மேதினியெங்குஞ் செந்தூளாக
கண்வெட்டி மூடுமுன்னக்கினிக் கல்வெடி
    காட்டினன் தேவர்கண்காட்சிபெற
தேவர்மூவர் முதல் பூலோகந்தன்னிலே
    தீர்த்தானூமத்துரை மேல்சண்டையை
ஆவலுடன் பார்த்தானந்த மாடியை
    யந்திரம் நின்றுமலர் சொரிந்தான். 6820

தாஷ்டீகன் பாஞ்சை நகர்மீதில் பீரங்கி
    முட்டினனக்கினி மேசர்துரை
மூட்டிய பீரங்கிதன் புகைதன்னாலே
    மூவுலகெங்குந் தெரியாமல்
செங்கதிரோனும் மறைந்திடவே எட்டுத்
    திக்குந்திசை தெரியாமல்
வங்காளர் சிங்களர் கொங்கர்புகழ்ந்திட
    மாட்டினன் மூட்டினனக்கினீசு.
இந்தவிதமாக அந்தியும் சந்தியும்
    ஏழெட்டுநாள் சண்டை செய்தபின்பு 6830

பந்தயம் கைவச மாச்சுதென்று எங்கும்
    செந்தூள் பறக்குதே கோட்டையின்மேல்
ஆயிரம் நூறுநூறாயிரம் குண்டுகள்
    அங்கேதான் சென்று இடித்தாலும்
ஈ எறும்புநுழையும்படி மண்களும்
    எழும்பலேயே பாஞ்சைக் கோட்டையிலே
எத்தனை பீரங்கி சுட்டாலும் ஒரு
    எள்ளுப்பொடி[196] மண்ணெழும்பலேயே.
சத்தமேகம்போல் முழங்கினாலும் ஒரு
    தவிட்டுப் பொடி[197] மண்ணெழும்பலேயே 6840

கோட்டையில் பீரங்கிபோடு போடென்றாலும்
    குண்டு உடைந்து விழுகுதய்யோ.

நாட்டிலே தீப்பட்டெறிந்தாலும் பாஞ்சை
　　கோட்டையில் ஊமைத் துரையிருக்கான்.
"என்னமாய்க் கோட்டையிடிப் போமென்"றானவன்
　　சொன்ன சொல்லுஞ் சரியாச்சுதென்றான்.
இன்னமும் யோசனை என்னவென்றான் கும்பினி
　　நிர்ண[198]யந்தப்பியே போகுதென்றான்.
வைத்தடி வாங்காமல் சுட்டதினால்பாவி
　　லட்சங்குண்டு செலவாச்சு தென்றான். 6850

லட்சங்குண்டு போக ஐம்பதினாயிரஞ்
　　சேசமுங் கிச்சிக்குடுக்கை[199] என்றான்.
ஆகட்டுங் கோட்டைமேல் லெக்கையேறுமென்று
　　அக்கினிமே சருந்தானுரைத்தனனும்.
ஏகமாய் சோஷர் பட்டாளங்கள் தானங்கே
　　ஏறினார் கோட்டை மேலந்நேரம்
கோட்டைக்குள் தானே இருந்துகொண்டு
　　வெட்டிக்குத்தி இழுத்து மலத்துகிறார்.
தீட்டியவேல் கொண்டு மாட்டுகிறார்குதி
　　போட்டுக்குத்திவிழுத் தாட்டுகிறார் 6860

வக்கைய நாயக்கனோர் புறமாம் பெரிய
　　வக்கையச் சக்கையனோர் புறமாம்.
கொக்குத்திறளிலே ராசாளி[200] பாய்ந்தாப்போல்
　　நொக்கு நொக்காக நொறுக்கலுற்றார்
முத்தன்பகடையும் பொட்டிப் பகடையும்
　　மைத்துன மார்களிருபேரும்
சுத்தவீரன் கைவெடி எடுத்தானங்கே
　　யுத்தகளத்தின் முன்னே குதித்தான்.
முத்தன் பகடைக்குப் பொட்டிப்பகடையும்
　　உற்றசமாச்சாரமேது சொல்வான் 6870

"விஸ்தாரமாய்ச் சொல்லக்கேளு மச்சான் நாமும்
　　முன்னேறி பட்டாளத்தூடே சென்று
நடுவே வாரதோர் சோடுதாரியிவன்[201]
　　கடுங்கோபி வெள்ளைக்காரனடா.
கடுங்கோபியான துரைகளைத் தானொரு
　　கைபார்க்க வேணுமே மைத்துனரே.
மண்ணும் விண்ணும் செந்தூள்தான்பறக்க
　　நாமும் ஒன்றுபோலே சமர்செய்யவேணும்.
எண்ணுந் தைர்யமாயிடவே யவன்
　　கண்ணையும் குத்தி எடுத்திடுவோம். 6880

சாரிபோட்டு அந்தவெள்ளைக்காரர்களை
ஏறியே குத்தி யிழுத்திடுவோம்.
பாரிக்குதிரையை நீயுஞ் சுட்டுமச்சான்
வீரியமாக விழுத்தாட்டு.[202]
குதிரை ஏறிவருவோரை யங்கே
குத்தியே வெட்டி இழுத்திடுவோம்
மதிமிகுந்திடும் சோஷர் பட்டாளத்தை
மல்யுத்தஞ் செய்துகொன்றிடுவோம்
யானைத்தலைகளைத் தானும் வெட்டித்தாழிப்
பானைகள் போலே உருட்டிடுவோம்." 6890

மானுபிமானன் ஊமைத்துரைப் பாண்டியன்
மன்னன் மனது குளிர்ந்திடவே
முத்தன்பகடையும் பொட்டிப்பகடையின்
சுத்தவீரத்தனம் என்னசொல்வேன்.
சித்திர விஸ்தாரமாய் பட்டாளங்கள் தன்னைச்
சேரத்திரட்டி அறுத்தெரிந்தார்.
அறுத்ததலைகளும் தானுருளப் படை
அங்கந்துடி துடித்தே மடிந்தார்
விருத்திராசுரன் தனைவதைத்த வெற்றி
வேலவரென்று மன மகிழ்ந்தார். 6900

மைத்துனமார்களிருவர் சமர்த்தையும்
வாகுடன் சொல்கிறேன் நல்லோரே,
சத்துருவாகிய பட்டாளங்கள் தனைப்
பத்துநூறுயிரம் தானறுத்தார்.
துப்பாக்கிச் சேவுகர் தன்னைக்குத்தியங்கே
சோஷர் மேசர்களைத் தானும்வெட்டி
செப்பமதாகவே மைத்துனமார்களும்
சேர்ந்திருந்தாரங்கு மனமகிழ்ந்து,
ஆடுதன் ஐம்பதுபேர்களையு மங்கே
ஓடவே குத்திவதைத்து விட்டார். 6910

நாடுபுகழ் கிண்ணிப் பட்டாளங்கள்தன்னைத்
தேடியே வந்து எதிர்த்தார்கள்
கிண்ணிப்பட்டாளத்தைத் தானெதிர்த் தாரங்கே
கெச்சிதமாகவே மைத்துனர்கள்
சின்னப்பிரட்டன் பெரியபிரட்டனைச்
சேரப்பிடித்துத் தலையறுத்தார்.
ஒட்டகம் தன்னையே வெட்டிநின்றூர் குதித்
தோடும் பரிகளைக்குத்தி நின்றூர்.

துஷ்டத்தனஞ் செய்யும் பட்டாணிகள் தன்னைக்
  கட்டுமெட்டாகவே தான்பிடித்து 6920

அடித்து உதைத்துச் சினந்தீர்த்துத்
  தலைக்காக்கினை செய்தாரே யந்நேரம்,
பிடித்துப்பட்டாளங்கள் தன்னையுந்தான் ரெண்டு
  பேருஞ்சினந்து அறுத் தெறிந்தார்.
அறுத்திடும் போதந்த அக்கினிமேசரும்
  ஆங்காரக்கோப முற்றே எழுந்தான்.
பிரித்திடுவேன் உங்கள் உயிர்களையும் என்று
  பேசினான் அக்கினி மேசர்துரை
பட்டாளத்தைப் பார்த்துப்பாசைசொன்னான்
  அந்தப்பார்த்திபனக்கினி மேசர்துரை 6930

சட்டென்று வேட்டுளழும்பிடவே பொட்டி
  எட்டியே பின்வாங்கி நின்றான்
கிட்டநின்ற முத்தன்பகடையுந்தான்[203] வெகு
  கட்டுமெட்டாய் வெடி சுட்டானே,
சுட்டகுண்டுதானுமேல் விழுந்து அங்கே
  துரையுங் குதிரையும் கீழ்விழுந்தார்.
குப்பாய்ச் சாய்ந்துவிழுந்தானே துரை
  குதிரையும் கீழே விழுந்ததய்யோ
டப்பென்று கீழே விழுந்ததய்யோ கதை
  எப்படிச் சொல்லுவேன் நல்லோரே 6940

கிட்டவந்துதுரை குடலைப் பிடுங்கியே
  பொட்டிப் பகடையும் மாலையிட்டு
வட்டமிட்டாடுறான் கெட்டி கெட்டியங்கே
  பட்டாளஞ் சோஷரை வெட்டிவெட்டி
சட்டஞ்சட்டமென்று முத்தன் பகடையும்
  தவ்வித்தவ்விக்குதி போடுகிறான்
அவன் சமர்த்து மிவன் சமர்த்துஞ் சிவ
  னறியச் சொல்லிமுடியாது
தவனமதாய்த் தண்ணீர்த்தாக மென்று
  வெகுசாராயப் பெட்டியுங் கொள்ளைகொண்டு 6950

பட்டாளந்தன்னையு முடுக்கிக்குத்தி மொட்டைப்
  பரும்புக்கப்பாலே தான் விரட்டி
திட்டென்று கும்பினிப் பட்டாளபின்னுமே
  எட்டுத்திசை களதிரும்படி
பட்டாளஞ் சேரத்திரண்டுகொண்டு பின்னும்
  வெட்டு வெட்டென்று குதிபோட்டு

திட்டென மொட்டைப் பரும்பைவிட்டு
திரும்பிக் கோட்டை மேலேறினாராம்
அப்போது ஊமைத்துரை தானும் சமர்த்
தெப்படி செய்கிறார் நல்லோரே, 6960

கப்பரை ஓட்டிலே கேப்பைக்கூழைக்காச்சி
குப்பாகச் சாய்த்தான் படைமேலே
வேப்பெண்ணெ விட்டுக்கேப்பைக் கூழைக்காச்சி
மென்மேலும் விட்டானே ஊமையன்தான்
சாப்பாகச் சோஷர்பட்டாளங்கள் பட்டுமே
சண்டைவிட்டு ஓடிமுறிந்ததய்யோ.
வெள்ளைப் பாவாடை விரித்தால்போல்படை
துள்ளித்துள்ளி மடிவாகுதய்யோ
எள்ளுப் பொடிபோல் சிதறியேதானங்கே
யிறந்துபோகுதே பட்டாளம் 6970

அப்போது வக்கையன் சோஷர்தலைகளை
அறுத்துச் சேர்த்துக் குவிக்கலுற்றான்.
செப்பமதாகவே முன்னூறு நானூறு
சேரத்திரட்டி ஒரு முகமாய்
அப்போதறுத்திடும் பட்டாளங்கள் தலை
எல்லாமொன்றாகவே தான் சேர்த்து,
கப்பல்சரக்கென்று சோஷர் மேசர்தலை
கண்ட இடங்களெல்லாந்தேடி
தலைகளை எல்லாமே ஒன்றுசேர்த்துப் பொட்டி
தானேகுவித்தான் மலையதுபோல்,[204] 6980

மலைமலையாகக் குவித்திடும் போதந்த
மன்னவன் ஊமைத்துரை மகிழ்ந்தார்
ஊமைத்துரையும் மனமகிழ்ந்து அங்கே
ஒண்டொடிக்காரர்தனையழைத்து
சேமமாய் நாமறுக்கின்ற தலைகளைச்
சென்னல்புரத்துக்கு அனுப்புமென்றார்,
சென்னபட்டணந்துரை தன்னிடத்திலங்கே
சேர்த்திடுஞ் சோஷர் சிரசை எல்லாம்
சென்னிகள் தன்னைப் பொதிபிடித்து அங்கே
சேர்த்திடவேணு மென்றேமொழிந்தார். 6990

சேர்த்திடுமென்றுமே தானுரைத் தாரங்கே
தீர்க்கவான் ஊமைத்துரையுமேதான்.
நேர்த்தியதாகவே வக்கைய நாயக்கர்
நெருநெரென்று பொதிபிடித்தார்

வக்கைய நாயக்கர் முக்கியமதாகவே
வாரித்தலையைப் பொதிபிடித்து
திக்கோர்புகழ்ந்திட மூன்னூறு நானூறு
சுமையதாகப் பொதி பிடித்து
நாட்டிலுள்ள பொதிமாட்டுக் காரர்களை
கூட்டியே வந்து பொதிஏத்தி
தேட்டிலுயர் சென்ன பட்டணத்துத்திசை
நோக்கியே அங்கே நடத்தினூர்கள். 7000

நடத்திய மாட்டுப் பொதிகளையுமிந்த
நாடுகடந்து வெகுதூரம்
அடத்துடன் வக்கையன்தானுமே கூடவே
அஞ்சாமல் போகிறுன் சிங்கேறு
மாடகூட மிகுந்த தென்மதுரா நகர்
வைகைக்கரையருகாக வந்து
கூடல் நகருக்கருகாகவே தானங்கே
கொண்டுபோய் மாட்டுப் பொதிகளையும் 7010

மாட்டுப் பொதிகளைத்தானி றக்கியந்த
மன்னவன் வக்கைய சேருவையும்
கூட்டமதாகவே சமையல்செய்து அங்கே
கொற்றவருண்டு பசியாறி
நாட்டிலுயர் சென்னபட்டணத்துப்பாதை
நாடிநடந்தார் வழிகூடி
தீட்டுபுகழ் ஊமைத்துரையுட
சேவுகன்வக்கையன் தானுமங்கே
பத்திரமாகப் பொதி எடுத்துச்சென்ன
பட்டணஞ்சேர அனுப்பிவைத்தான் 7020

மத்தியான வெயில் நேரத்திலேபொதி
வந்ததே சென்னல் புரந்தனிலே
வந்தபொதிகளைத்தான் பார்த்து அந்த
வாசலதிகாரி என்னவென்று
சந்தித்துக் கேட்கும்போதிலே தானப்போ
சொந்தமா வியாபாரி சொல்வான்
ஆங்காணும்பொல்லாங்கு ஒன்றுமில்லை சாமி
நாங்கள்தான் போறோம் யாபாரிஎன்றுன்
நல்லதென்றுன் அதிகாரி பொதி
ரவணுக் கொண்டாடா பாவிஎன்றுன் 7030

சொல்லும்பொழுதிலே யந்நேரம் வெகு
துரிசாய் தேங்காய்ப்பொதிதனக்கு

பின்னாலே ரவணு[205]வருகுதென்று சொல்லி
தன்னாலே பொதிகளைத் தள்ளிவிட்டான்
மன்னவன் கம்பளவக்கையன் சேருவை
சன்னை செய்தங்கே மறைந்தனனும்
போனபின்னந்த அதிகாரி ஒரு
பொதியை நீக்கியே பார்த்தனனும்
ஆனதினுல் சுத்தவெள்ளைத்தலையாக
ஆவென்று பல்லுப்பளப்பாக 7040

பரட்டை செம்பட்டை மயிரோடேதலை
கொரட்டு வில்லங்கமாயிருக்கா
புரட்டியே பார்த்து எடுத்தானே அரே
திருட்டு மாதிரிச்சோத்தெனவே
கூக்குரல்போட்டு துரைமார்கள் தன்னிடம்
சாக்கிரதையாகச் சென்றுசொன்னான்
மார்க்கமுள்ளதுரை மார்கள் பயந்தங்கே
பங்களாவெங்கும்பதன மென்றார்
ஊமையன்இங்கு வந்துவிட்டானென்று
சீமைக்குப்போகப் பயணமென்றார்[206] 7050

கோட்டைக்கதவை அடையு மென்பார்
நம்மவீட்டு வாசல் பாராநில்லுமென்பார்.
பண்டகசாலைபதன மென்பார் சென்ன
பட்டணமுழுதுங்கெட்டி என்பார்
வண்டனடா அந்தவாய் பேசா ஊமையன்
வந்துவிட்டானிங்கே என்று சொல்வார்
இப்படியாகத் துரைமார்களிங்கே
தொப்பிகழற்றியடித்திடுவார்.
விற்பனமுள்ள துரைமார்களங்கே
மேலான யோசனையாயிருந்தார் 7060

[illegible]ால்வேனிந்தப் பாஞ்சைப்பதியிலே
[illegible]றமநரம் பார்த்தாலும் அக்கினீசு
கன்னிமூலைப் புரங்கோட்டையிலே லெக்கை
கட்டிஏறிச் சண்டை செய்தாலும்
பட்டாளஞ்சேதமாய் போகுதே யல்லாமல்
கட்டமண் கோட்டையிடிவதில்லை,
எட்டைய புரஞ்சமிந்தாரைக் கூப்பிட்டு
கிட்டவைத்துத்துரைபேசுவானும்,
பாஞ்சை நகரத்துக் கோட்டைபிடிக்கவே
பஞ்சுப் பொதிகளைத்தானுயர்த்தி 7070

ஊஞ்சல் மேடைகளும் தான்போட்டு வலு
ஒன்பதுபீரங்கி தானுயர்த்தி
மோருசர் மேடையில் பீரங்கிவைத்து
நூறுநூருயிரம் தானடித்தான்
சீரான ஊமைத்துரைகோட்டையும்
சூராவளிபோலே தான் சுழன்று
நிலவறை எங்குமதிரிடவே அங்கே
நேருள்ள கோட்டைமண் சிதறிடவே
பலகைபிளந்து வெடிப்பறையுந் துரை 7080

பாண்டியனூமத்துரையுங்கண்டு
இடிந்தகோட்டை திடங்கள் செய்துஉள்ளே
ஏகாந்தமாகக் கொலுவிருந்து
அடர்ந்தராத்திரி வேளையிலே அங்கே
கடிந்துகோபங் கொண்டே எழுந்து
பட்டாளந்தன்னிலே சென்று குத்திஒரு
மட்டுக்கடங்காமல் சண்டை செய்தான்
ராத்திரிகாலத்தில் வேட்டையாடி வெகு
ராணுவத்தார்களை கொன் றுளக்கி
பார்த்திபன் ஊமைத்துரை வீரபாண்டியன்
பட்டாளந்தன்னை யறுத்தெரிந்தார். 7090

முப்புரந்தன்னை எரித்திடும் போதங்கே
மூண்டுசமணர்கள்[207] மாண்டதுபோல்
அப்பாடா அப்பாடா என்று சொல்லியங்கே
ஆயிரம் சோஷிறந்தார்கள்.
வீராதி வீரன் ஊமைத்துரைப் பாண்டியன்
வேகமாய் கோபமுற்றே சினந்து
பாராளுமக்கினி மேஷர்துரை படை
பட்டாளந்தன்னையறுத் தெறிந்தார்.
இப்படித் துஷ்டத்தனங்களையுங் கண்டு
எட்டையபுரந்துரை கோபங்கொண்டு 7100

சற்பினையாகப் புகைக்குண்டு போடவே
தானே புலன்களுரைத்தானும்.
அப்போது அக்கினி மேசர்துரையங்கே
ஆறு மாசத்துக் காடி சேர்த்து
சிப்பாயிமாருக்குத்தான் கொடுத்து புகை
சிக்காமல் கண்ணில் போட்டுக் கொண்டு
கெச்சிதங் கொண்டங்கே பாஞ்சாலங் கோட்டைமேல்
கிச்சுக் குடுக்கைகள் போட்டனரும்

மிச்சமாகப் புகைக்குண்டுகள் தானெங்கும்
    வெடித்துச்சில்லு நூருயிரமாய் 7110
தேங்காய்க் குடுக்கை போல்தானிருக்கும் குண்டு
    மூங்கில்சில் போலவேதான் வெடிக்கும்
பாங்குடனே அதில் தானிருக்கும் சில்லு
    சாங்கமாய் ஓடிப்பறந்தடிக்கும்
பளிச்சென்று குண்டு தானடிக்க அந்தப்
    பாஞ்சைப்பதி மண்ணுமே வெடிக்க
புளித்த தண்ணீரைக் கண்ணில் வைத்துக் கொண்டு
    போடுறுனே புகைக்குண்டுகள்தான்.
நிலவரைதானு மதிரிடவே அங்கே
    கலகமாகுதே கோட்டைக்குள்ளே 7120
பலபலென்று மண்ணும் தானுதிர எங்கும்
    பாரத்திசை எல்லாம் தானதிர
கங்குலிருள் போலே தோணுதடா புகை
    காடுகாடாகவே மண்டு[208]தய்யோ
எங்கும் புகைமண்டித்தானெழும்பிக் கோடை
    இடிகள் போல முழங்கிடவே.
புகைகள்முட்டிப் புகையடிக்கப் பாஞ்சைப்
    புவிகளெங்கும் பார்தான் வெடிக்க
திசையுந் திசையுந்தெரியாமல் எங்குந்
    தீயாகப் பத்தி[209] எறியுதய்யோ 7130
மூன்று நாளாறு பொழுதாகயிந்த
    மோசமதாய் புகைக்காடாகி
கான்றி[210]யனல் புகை தானும் நிலவரை
    மூண்டு பிடித்ததேயந்நேரம்
கண்ணை கவிழ்ந்து விழுந்திடுவார் சிலர்
    ...கள் தள்ளாடி மலந்திடுவார்
    ...என்று சொல்லித்தான் புலம்பியங்கேயே
    ...ங்கே மாண்டு மடிந்தார்கள்
    ...ாய் வெளியேறித்தப்பி
    ஓடிப்பிழைத்தங்கே போய் விடுவார் 7140
அந்நேர மாகாரமில்லாமல் விழுந்
    தலறியோடுவார் நில்லாமல்
இந்தவிதிக்கென்ன செய்வோமென்று மண
    தெண்ணி ஊமைத்துரையந்நேரம்
சிந்தை கலங்கி சிவத்தையாகம்பளச்
    சேருவைக்காரர் குதித்தெழும்பி

முன்னும் பின்னென்று தெரியாமல்புகை
தன்னாலே மண்டுதே என்றுசொல்லி
இன்னமொருகை பார்ப்போமென்று[211]
அங்கே ஊமைத்துரையுமேதான் 7150

மண்டிவரிசைகள் தான்போட்டு அங்கே
மல்யுத்தம் செய்யும்வேளையிலே
பெண்டுகளும் கூடத்தானெழுந்தார் அங்கே
சண்டை செய்தார்திண்டு முண்டாக[212]
பாரிலுலக்கைத் தடியெடுத்து அங்கே
பட்டாளஞ் சோஷரைத்தான்முடுக்கி
சீறியடிக்கும் பொழுதிலே தானந்தச்
செல்வ னூமைத்துரை தானுங்கண்டு
மார்க்கந்தப்பியே போச்சுதென்று மனத்
தீர்க்கமுடனந்தக்கன்னியரை 7160

மூர்க்கமுடனேதான் கொன்றுழக்கிப்பின்னும்
பார்க்கும் பொழுதிலவன் தேவி
நாலுமாசத்து கெர்ப்பந்தானுமதாய்ப்பாஞ்சை
நாட்டு த்துரைச்சாணி தன் வயிற்றில்
சூலோடேதேவி யொளித்தனளாம், ஊமைத்
துரையுந் தேடியலுத்தனராம்
நாடிழந்தோம் நகர்தானிழந்தோம் என்று
நாளுஞ் சிவத்தையா சொல்லிடவே
கூடிப்புறப்பட்டு ஊமைத்துரைதானும்
கோட்டைபிடிபட்டுப்போச்சுதென்று 7170

பாதிப்பதினைந்து சாமத்திலே அந்தப்
பாஞ்சைப் பதிவிட்டு ஊமையன்தான்
காதுகண்ணுமுதல் மேலெல்லாம்புண்படக்
காயத்துடன் சிவத்தையாவும்
உப்பாறு ஓடைவழிநடந்து அங்கே
ஓட்டப்பிடாரமுந்தான் கடந்து
குப்பக்குளக்காரக் கண்டன்வலுமுண்டன்
குண்டப் பெருமாள்குளத்தில் வந்து,
காயங்கள் பார்த்து இலைபிடித்து வெகு
ஆயாசமாகப் படுத்திருந்து 7180

மாயங்களாக உபாயஞ் செய்துஒரு
மாதகிவீட்டிலூமையன்தான்
அம்மை பிறப்பட்டிருக்குதென்று மனச்
சம்மதியாகவே தானிருந்தான்

பம்மாத்துபோட்டுக் கொண்டே இருந்தான்
வீரபாண்டி ஹூமைத்துரைதானும்
வேப்பங்குழைகளைத் தானெடுத்து அந்த
வீட்டில் வைத்துவிளக்கேற்றி வைத்து
காப்பாற்றுவாள் சக்கதேவிஎன்று அவர்
காயங்களாற்றிக் கவலையுடன் 7190

ராத்திரி காலத்திலந்த வீட்டைவிட்டு
நாடுகடந்து மருதூருசென்றுர்
மருதூருபாண்டியன் தன்னைக்கண்டுமையன்
விருதுபந்தயங் கூறிநின்றுன்.
விருதுபந்தயம் பேசிக்கொண்டு அங்கே
விஸ்தாரமாய்ச் சபைசெய்திருந்தார்.
கும்பினிச் செய்தியைச் சொல்லுகிறேன்கதை
அன்பாகக் கேளுங்கள் நல்லோரே
கெம்பீரமாகவே பட்டாளந்தான்வெகு
சம்ரதாயப் பாஞ்சைக்கோட்டையின் மேல் 7200

கச்சரவாகவே கிச்சுக்குடுக்கைகள்
மிச்சமதாகப் புகையுருண்டை
உச்சிதமாகவே தான்போட்டு அந்த
ஊமையன் கோட்டையுந்தான்பிடித்து
அக்கினி மேசரும்பாஞ்சை நகரத்து
முக்குமுடுக் கெல்லாம் தான்பார்த்து
திக்குதிசையெல்லாம் தான்பார்த்து ஒரு
செய்தியா லோசனை ஏதுசொல்வான்
ஊமையனைக்காணும் பாவிஎன்றுன் பாவி
உள்ளரை வீடெங்கும் தேடுமென்றுன் 7210

சீமையிலே சுத்திப்பாருமென்று இங்கே
செத்தபேரைக்குத்திச் சோதி என்றுன்
இப்படிசோதிக்கும் வேளையிலே ஒரு
விற்பனக்கன்னியெழுந்து நின்று
அப்போது அக்கினிமேசர்துரைநீ
யாரென்று கன்னியைக் கேட்டனனும்
அந்நேரம் கன்னியுமேதுசொல்வாள்[213] துரை
மன்னவன் ஊமையன் தேவிஎன்றுள்
எந்நாளும் உங்களுக்கடைக்கலந்தானென்று
கன்னியுரைத்திடும் வேளையிலே 7220

பெண்ணரசே உன்னைக்காப்போமென்று துரை
சொன்னனே கும்பினி அக்கினீசு

ஒன்றுக்குமஞ்சாதே காப்போமென்ருன் உந்தன்
ஊமைத்துரை எங்கே சொல்லுமென்ருன்
சொல்லுமென்று துரைதான் கேட்கநிசஞ்
சொன்ஞளே கன்னியுங்காணேனென்று
வல்லமையான மொழிகேட்டுத்துரை
மார்களாலோசனே யென்னவென்ருல்.
ஊமைத்துரையைப் பிடிப்பவர்க்கு ஒரு
முடிப்பாய் அஞ்ஞூறு பொன்கொடுப்போம். 7230

தாமதஞ் செய்யாமல் தாரேமென்று
இந்தச் சீமைக்கெங்குஞ்சொல்லி விட்டனராம்
இப்படியாகவே அக்கினி மேசரும்
துப்பு விசாரித்துக் கொண்டிருக்க
செப்பமுடனந்த மருதுப், பாண்டியன்
சீமையில் ஊமையனிருப்பதையும்
அறிந்து அக்கினி மேசர்துரையங்கே
விரைந்து பட்டாளம்தான் சேர்த்து
மருதுப்பாண்டியன் நாட்டினிலே வந்து
வளைந்துகொண்டானே அக்கினீசு. 7240

அந்நேரம் மருதுப் பாண்டியன் தானங்கே
முன்ஞேடிச் சண்டைக்கு எழும்பினுனும்.
சின்னமருது பெரிய மருதுடன்
சேர்ந்த சிவஞான ராசதுரை
வட்டப்பொட்டுக்காரன் மருதப்பன்தம்பியும்
வங்கியும் பட்டாவும் தானெடுத்தான்.
பட்டாளந்தன்னிலே சென்றுகுத்திச் சண்டை
யிட்டான்துரையுமே அப்போது.
ஊமைத்துரை யொருகையாகப்படை
ஊடேயுஞ் சென்ருனே மெய்யாக. 7250

ஆமடாவீமனைப் போலவேதானங்கே
ஆறுமாசஞ் சண்டை செய்தனரும்
சிறிதுபட்டாளந்தான்திரண்டு அங்கே
மருதுபாண்டியனைத்தான் பிடித்து
துரைமகன் சிவஞானத்தையும்[214] ஒரு
தூக்குமரத்திலேதான் போட்டு
படைமுறிந்தங்கே போனபின்பு வீர
பாண்டியன் ஊமைத்துரைதானும்
கடும்பயணங்களாகவேதான் மலைங்
காட்டில்போனர் சிவத்தையாவும். 7260

விருப்பாச்சி மலையுமே போய்ச்சேர்ந்துவன
வேடரைப் போலவே ஊமையனும்
வடுப்படாமேனி வடுப்படத்தானிந்த
வனங்களெல்லாந்திரிந்தலைந்து
அன்னாகாரமு மில்லாமல் தானங்கே
அஞ்சாறு நாட்கள் வசித்திருந்து
கன்னிவாடி மலைச்சீமையிலே ஒரு
கன்னியிடத்திலே போய்ச்சேர்ந்து
கையிலிருந்திடு மாயுதத்தை யந்தக்
கன்னியிடத்திற் கொடுத்து வைத்து 7270

நெய்யுடன் பாலமுதுண்டனராம் அங்கே
நித்திரை செய்தாரே யன்னேரம்.
மங்கையுட வீட்டில் ஊமையன்தான்மதி
மயங்கிநித்திரை செய்திடவே
சிங்கம்போலே யவன் தானுறங்கஅந்தச்
சேயிழையாள் மனம்பதறி
ஊமைத்துரை என்று தானறிந்துமெள்ள
உட்தாப்பாள் போட்டுக் கதவடைத்து
தாமதஞ்செய்யாமல் அம்பலத்தில் வந்து
சாடைசொன்னாளந்த மங்கையுந்தான்.[215] 7280

ஆயிரம் பொன்னையும் தாருமென்றாளிந்த
வாய்பேசா மன்னனைத்தானடைத்தேன்.
ஞாயமுனிசீபு அம்பலக் காரரே
நான் சொல்லும்விண்ணப்பம் கேளுமென்றாள்.
மெட்டுப்போலீசு அதிகாரிகள்
மேன்மை பொருந்திய தலையாரி
பட்டணத்துக் குடியோர்களே தானிந்த
கெட்டிக்காரனைப் பிடிங்களென்றாள்
டாணாபோலீசார் தயாரு செய்தார் அங்கே
டப்பைக்குடிகளு உஷாராய் நின்றார். 7290

வாணத்தடி களுந்தானெடுத்துச் சிலர்
வளரிக் கம்புகள் கைப்பிடித்து
வீட்டையுஞ் சுத்திவளைத்தனராம்
கதவின்மேலெட்டிப் பார்த்துமேநின்றனராம்.
முகத்தை முகத்தையே பார்ப்பாரும் நீதான்
முன்னே போவென்று மொழிவாரும்
ஊமையன் கெலிகளடங்குதென்று வீட்டுக்
குள்ளேதான் போகப்பயப்படுவார்,

வீமனைப்போல உறங்குகிறான் அவன்
சாமர்த்தியம் சொல்லக் கூடாது. 7300

பத்துப்பதினைந்து பேர்களும் ஊமையன்
நித்திரை வேளையில் மேல்விழுந்து
பொத்திப்பிடிக்கவே ஊமைத்துரைப் புலி
போலவேயதட்டி எழுப்பினராம்
சுத்தவீரனந்த ஊமைத் துரைதன்னை
மித்திரமாகவே தான்பிடித்து
அத்திரி பாணிச்சோத் மாதரிச்சோத்தென்று
பத்திரமாக விலங்கடித்து
செடியுங்காடு மலைங்காட்டிலங்கே
சிவத்தையாவையும் தான்பிடித்து 7310

கடினமாகவே கம்பளத்தாருட
காலிலே துஷ்ட விலங்கடித்து
கக்கிசக்காரனு ஊமத்துரை தன்னை
அக்கினி மேசரும் ஒப்புக்கொண்டு
திக்கிலுள்ளோர் புகழ் சென்னல்கெவுனர்க்குச்
சீக்கிரம் காயிதம் போட்டனனும்
காயிதம்பார்த்துக் கெவுண் மெண்டார்களும்
ஞாய மாலோசினையேது சொல்வார்?
"ஆயிரம்பேர் களிறந்தாலும் இந்த
வாய்பேசா மன்னனைத் தூக்கவேண்டாம் 7320

தூக்குமரத்திலே போடாமல் அதிசீக்கிரம்
கூட்டிவரும் படியாய்
பார்க்கவேணுமந்த ஊமையனை" என்று
மார்க்கமாய் காயிதம் போட்டனராம்.
சட்டமாய்க் காயிதம் வந்திடவேஅது
எட்டயாபுரந்துரை பார்த்திடவே
மட்டுக் கடங்காத ஊமையனையினி
விட்டாலும் மோசம் வருகுமென்று
அக்கினி மேசர்க்குப் போதனைகள் சொல்லி
ஆங்காணுந்தானிசமென்று சொல்லி 7330

மிக்க இருபேருந்தான்பேசி அதி
வேகமாய் ஊமைத்துரை தனையும்
பார்க்கப்பயமாயிருக்கு தென்று அந்தப்
பாஞ்சை நகரத்து எல்லையிலே
தூக்குமரத்திலே தான்போட்டு இனி
கூக்குரல் சத்தமொழிந்த தென்று

சிவத்தையாவையும் தூக்கினருமதில்ச்
சேர்ந்திடும் பேருயிர் போக்கினராம்
இப்படியாகவே தூக்கிலே போட்டிடும்
மாற்ருன்துரைகளைத்தானிறக்கி 7340

செப்பமதாகவே யக்கினீசுதுரை
பஸ்பமதாக எரித்துவிட்டார்.
அவத்தமாகவே கவத்துவந்தான் செய்த
அக்கினீசுத்துரையேது சொல்வான்
பவக்கடல் வீழ்ந்துகரையேறித்தானங்கே
"பார்த்திபன் அக்கினி மேசர்சொல்வான்.
பாஞ்சாலமாநகர் ஊமைத்துரையாலே
பட்டபாடுபோதும் நாமளெ"ன்று
மாய்ந்தது தெய்வமறியுமென்று அங்கே
சாய்ந்தல்லோ போகுதே பட்டாளம். 7350

எட்டையாபுரந்துரை நில்லுமென்று சென்ன
பட்டணம் சேர்ந்தானே அக்கினீசு
அட்டாள தேசமுந்தானறிய வலு
துஷ்டனூமையனைத்தான் பிடித்து
உத்தரவு வருமுன்னடியே தானந்த
ஊமையனைத் தூக்கிப் போட்டோமென்றும்
சத்திராதிமித்திரம் போச்சு தென்றும் பாஞ்சைத்
தலமுங் கைவசமாச்சு தென்றும்
கும்பினிக் காரியம் வெத்தியென்றுந்துரை
கோர்ட்டார் போர்ட்டார் மேன்மை என்றும் 7360

சம்ரதாயமுள்ள அக்கினீசு மொழி
அன்பாகச் சென்னல் துரைகேட்டு.
"நல்லது தானந்த ஊமைத்துரை தன்னைக்
கொல்லவேண்டாமென்று சொன்னேமே.
சொல்லுறுதி தப்பிச் செய்தாயே பழி
சூழ்ந்தது சூழ்ந்தது உன்னை" என்ருர்
சூழ்ந்தது உன்னைப் பழிகளென்று சொல்லித்
துரைகள் கோபமுற்றேது சொல்வார்.
வாழ்ந்திடும் ஊமையன் தன்னைவதை செய்த
மார்க்கமுனக்குக் கிடைக்குமென்று 7370

சொன்னரே சென்னல் துரைகளும் ஒன்று போல்
மன்னவனக்கினிமேசருக்கு
எந்நாளும் கும்பினி ஞாயம்விளங்கிடச்
சொன்னரே சென்னத் துரைகளுமே

சொன்ன சொல் போலவே தூக்குமென்று
　　ரந்தமன்னவனக்கினி மேசர்தனை
நன்னயமாகவே அக்கினிதனையங்கே
　　நாட்டிய தூக்கு மரந்தனிலே
தூக்கு மரத்திலே தானேத்தியங்கே
　　கூடசக்கயர்களும்தான் பூட்டி　　7380

மார்க்கமுடனந்தக் கும்பினிஞாயம் போலத்
　　தீர்க்கமுடன் வதை செய்தார்கள்[216]
செய்யும் பொழுதிலே அக்கினி தன்னுயிர்
　　சேர்ந்து சிவன்கழல் தானடைய
வையகமெல்லாம் புகழ்ந்திடும் கும்பினி
　　மார்தம் ஞாயம் நீதி என்ன சொல்வேன்[217]
தீர்க்கவான் ஊமைத்துரையுடதேவியை
　　மார்க்கமாய் வைத்து வளர்த்தார்கள்
மார்க்கமுள்ள கன்னிகெற்பமும்தான் பத்து
　　மாதமும் திங்களுமுண்டாகி　　7390

செல்வக் குழந்தையைப் பெற்றனளாமிந்த
　　தேசத்திலுள்ளோர் புகழ்ந்திடவே
வல்லபமாஞ் சக்கதேவி செயலால்
　　மகிழ்வுடன் நீடூழிவாழியவே!
பாண்டியதேச மிகவாழி ஊமை
　　பட்டத்துரையோர் கினைவாழி!
வேண்டும் பிரியமுடன் இக்கதையை
　　விருப்பமுடன் கேட்போர் மிகவாழி!
தாஷ்டீகன் ஊமைத்துரை கதை தன்னையுங்
　　கேட்டவர் யாவருந்தான் வாழி　　7400

நாட்டினிலிக்கதைதான் படிப்போர்கினை
　　நாளு மென்நாளும் மிகவாழி!
தேவர்கள் மூவர்கள்தான் வாழி திருத்
　　தில்லை சிதம்பரர்தான் வாழி!
மூவுலகெல்லோருந்தான் வாழி தவ
　　முனிவர் சித்தாதிகள்தான் வாழி!
நாவலரெல்லாரும் தான் வாழி இந்த
　　நாட்டினிலுள்ளோர் மிகவாழி!
பூவுலகெல்லோரும் வாழிவாழி யென்றும்
　　பூவிலுறை மாதும் வாழியவே

(முற்றிற்று)

# குறிப்புகள்

1. கட்டபொம்முவின் சாதியை சேர்ந்தவர்களின் குலதெய்வம் பல்லாரியிலிருந்து ஒரு கூடையில் கொண்டு வரப்பட்டதாம், இப்போது பாஞ்சாலங்குறிச்சியில் கட்டப்பட்டிருக்கும் கோவிலில் குடிகொண்டிருக்கும் தெய்வம் சக்கதேவியே. பக்கம் 23

2. வணக்கப்பாடல்கள் பிரதிக்குப் பிரதி மாறுபடுகின்றன. இவை மூலத்தைச் சேர்ந்தவையல்ல. பக்கம் 23

3. ராஜதரிசனமும், கடவுள் தரிசனமும் ஒன்று என்று நாட்டு மக்கள் நம்பிக்கை. பக்கம் 23

4. இவ்விரண்டு பாடல்களும் நாட்டுப்பாடல்கள் அல்ல. புலவர்கள் எழுதிப் பாடவைத்தது 17 முதல் 29 முடிய விநாயகர், முருகன், சரஸ்வதி மனோன்மணி, சக்கதேவி வணக்கம் கூறப்பட்டது. பக்கம் 23

5. பாமரவழக்கு. (Folk idiom or usage) அதிகமாம் பக்கம் 24

6. மங்கலத் தோற்றம். கண்ணிகள் 30 முதல் 38 வரை பாஞ்சைக் கோட்டை, அரண்மனே, கோவில் வருணனே. கண்ணிகள் 39 முதல் 50 முடிய கோவில்பட்டி கரிசல் பூமியை நாட்டு வளம் கூறும் இலக்கிய மரபில் மருத நிலத்தின் வளமெல்லாம் இருப்பதாகப் புலவர் வருணிக்கிறார். இங்கு இலக்கிய செல்வாக்கை நாட்டு பாடலில் காண்கிறோம். பக்கம் 24

7. இக்கதை பல ஊர்களைப் பற்றிக் கூறப்படுகிறது. விஜய நகர், சிவகங்கை முதலிய ஊர்களுக்கும் இக்கதை பொருந்தும். பக்கம் 24

கண்ணி 54-பெருமையற்ற மன்னர்களைப் பாடும் இலக்கிய மரபு. இது புராணப் போக்கை தழுவியது. பக்கம் 25

8. தெலுங்கு பேசும் ஜாதியினர்—தோக்குலவார் ஜாதியை சேர்ந்தவன் கட்டபொம்மு—கம்பளத்தார் பெரிய சாதிப் பிரிவு. இதில் தோக்குலவாரும், சில்வாரும் அடங்கும்.
கண்ணி 62 முதல் 68 முடிய பிரதானிகளின் பெயர்கள் வரிசையாகச் சொல்லப்படுகிறது. பக்கம் 26

9. சேவல் போர். பக்கம் 26

10. பெண்கள் பாடியாடும் கும்மிப்பாட்டு. தமிழிலாவது, தெலுங்கிலாவது பாடுவார்கள். பக்கம் 26

11. தென் தமிழ் நாட்டுப் பாளையக்காரர்கள் பாண்டியர்கள் என்று தம்மை அழைத்துக்கொள்ளுவது வழக்கம். பக்கம் 26

12. Collector பக்கம் 27

13. குற்றமனு பக்கம் 27

14. குடிசை போலக்கதிரை அடுக்கி வைக்கும் போர் வேண்டியபோது அதை அடித்து தானியம் பெறுவர். பக்கம் 28

15. வறிதாக, வேண்டுமென்றே. பக்கம் 28

16. ஊர்கள். பக்கம் 28

17. பொறுமையில் கூறுவது பக்கம் 28

18. கிஸ்தி வசூல் பணம் பக்கம் 29

19. மாஜிஸ் டிரேட் ஆபீசு பக்கம் 29

20. உரையாடல் பக்கம் 30

கண்ணி 212 முதல் 312 வரை மன்னன் கட்டளையின் படி வந்த வீரர்கள் பெயர்கள் கூறப்பட்டது. இது நாட்டுப் பாடல்களிலும், காவியங்களிலும் காணப்படும் ஓர் மரபு, ஹோமரின் இலியாதில் கப்பல்களின் பெயர்களும், மில்டனது சுவர்க்க நீக்கத்தில் சாத்தானது துணைவர்களான நரகர்களின் பெயர்களும் வரிசையாகக் கூறப்படுவதைப்போல் இங்கும் வீரர்கள் பெயர்கள் கூறப்பட்டுள்ளது. பக்கம் 30

21. கூட்டம் பக்கம் 34

22. சிலம்ப ஆட்டம் பக்கம் 34

23. சக்கிலியன் (தெலுங்கு ஜாதி) பக்கம் 34

24. நாணயம் பக்கம் 35

25. சந்துஷ்டி பக்கம் 35

26. வேட்டி பக்கம் 35

27. நிரம்ப [பாமரவழக்கு—ரெம்ப, கொங்கு—நொம்ப] பக்கம் 36

28. சாகவே பிறந்த உடம்பு, இது நாட்டு பழமொழி பக்கம் 39

29. பகைவர் முதலியோர். பக்கம் 39

30. இது இலக்கியத்தில் 'உலா'வைப் பின் பற்றியது பக்கம் 40

31. பாரா,—எச்சரிக்கை என்று கூவிக்கொண்டு காவல்காரர் வழி விலக்கி முன் செல்ல கட்டபொம்மு பின் நடந்தார். இதை எச்சரிக்கை சொல்லுதல் என்பர். இன்றும் வைணவ மடங்களில் சாமியார் முன் இம் மரியாதை நடைபெறுகிறது. பக்கம் 40

32. சோல்ஜர் என்ற ஆங்கில சொல்லின் திரிபு—படைவீரன் பக்கம் 42

33. இங்லீஷ் பாஷை பக்கம் 42

34. இந்திய ராணுவ வீரன் [கும்பினிப்படையில்] பக்கம் 42

35. குற்றம்

36. [வடமொழி] படையின் தொகை [அளவு] பக்கம் 42

37. இரண்டு உருது மொழி வசவுச் சொற்கள் மிகவும் கெட்ட பொருள் உடையவை. பக்கம் 42

38. ஹவில் தார் என்னும் படை உத்தியோகம் பக்கம் 42

39. மிகவும் கெட்ட பொருளுடைய தூஷணச் சொற்கள் பக்கம் 46

சுற்றி (பா. வ) பக்கம் 42

அந்த வாக்கில்—அப்படியே [நெல்லை. பா. வ] பக்கம் 46

பக்கம் 51

43. சாகிசன் சபதம் செய்தல்

44. தனிமை பக்கம் 59

45. வெற்றி பக்கம் 60

46. அட்ஜுடன்டு என்ற பதவியிலிருந்தவன் பக்கம் 61

47. ஈட்டி போன்றதோர் ஆயுதம் பக்கம் 63

48. விழ [பாமரவழக்கு — கோவில்பட்டி, மதுரைப் பிரதேசங்கள் பக்கம் 63

49. சாவு பக்கம் 6

50. மறுபடி [மறவர், அரிசனங்களின் வழக்கு] பக்கம் 65

51. கோணலாகி, முறிந்து [நெல்லை மாவட்ட நாட்டு வழக்கு] பக்கம் 65

52. அகப்பட்டானு [நெல்லை பா. வ.] பக்கம் 66

53. சிறுவனை பெரியவர் அழைக்கும் செல்லப் பெயர்—சிறுவன். பக்கம் 67

54. வெள்ளைக்காரனை எதிர்த்து நடந்த போராட்டத்தில் கட்டபொம்மு, பூலுத்தேவன் முதலியோர் கொள்ளையடித்திருக்கிறார்கள். அதனைப் பழி வாங்குதலாகக் கருதினார்கள். பக்கம் 69

55. நிலவரி வசூலில் எவ்வளவு கடுமையாக ஆங்கிலேயர் நடந்துகொண்டார்கள் என்பதற்கு இது உதாரணம். மருது, கட்டபொம்மு முதலியவர்கள் வரி வசூலிம் பல கொடுமைகள் இழைத்துள்ளார்கள் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. பக்கம் 71

56. புடங்கு—துப்பாக்கியின் அடிப்பகுதி பக்கம் 72

57. வேலை பார்த்தல் பக்கம் 72

58. ஜனரல், தளபதி. பக்கம் 72

59. நீதிபதி, ஜட்ஜ் பக்கம் 72

60. கவர்னர் பக்கம் 72

61. கவர்மெண்டார் [அரசாங்கம்] பக்கம் 72

62. பேட்டி, தாஷ்டிகன் என்பதற்கு எதுகை பக்கம் 73

63. Executive Councillors of the Governor அவர்கள்ஏழு பேர். பக்கம் 72

64. ஏழு கவுன்சிலர்களும், கவர்னரும் சேர்ந்து எட்டு பேர்கள் கமிட்டியார் கவர்னருக்குச் சிறப்பான அதிகாரங்கள் உண்டு, இதுபோல திருவாங்கூரில் நம்பூதிரிகள் செய்யும் குற்றங்களை விசாரிக்க எட்டரை யோகம் என்றோர் சபை இருந்தது. இச்சபையில் எட்டு பேர் நம்பூதிரிகள். திருவாங்கூர் அரசர் மற்றொருவர். அவர் அரை நம்பூதிரிக்குச் சமம். எனவே எண்ணிக்கை எட்டரை. பக்கம் 74

65. அடுக்குமொழி வழக்கு. பக்கம் 74

66. பேரிகைக்கு 'நகரா' என்று இஸ்லாமிய பேச்சு வழக்கு உள்ளது. அதுவே நவுரி என்று மருவி வந்தது. பக்கம் 75

67. இதற்குப் பின் வரும் கண்ணிகள் உலாக்களில் வரும் வருணனையை ஒத்திருக்கின்றன. பக்கம் 75

68. சோல்ஜர் [சிப்பாய் அல்லது ராணுவவீரன்] பக்கம் 78

69. பேட்டிகாணப்போகும் பொழுது பாளையக்காரர்கள் கவர்னர், ஜெனரல், கலெக்டர் முதலியவர்களுக்குப் பணம் வைக்கவேண்டும். இதற்கு கவுல் என்று பெயர் இந்த வழக்கம் டெல்லி சுல்தான்கள் காலத்திலிருந்தது வந்தது. முகலாயர் காலத்தில் இவ்வழக்கம் அதிகரித்து. பக்கம் 79

70. மாஜிஸ்டிரேட் ஆபீசு என்பதன் திரிபு. பக்கம் 79

71. திட்டம் பக்கம் 80

72. ஆடு மாடு பக்கம் 81

73. குடிகள் இல்லாவிட்டால் கிஸ்திவசூல் செய்வதெப்படி என்று கட்டபொம்மு கேட்கிறான். எனவே குடிகளிடம் வசூல் செய்து மொத்த குத்தகைகாரரான வெள்ளைக் கம்பெனிக்கு செலுத்தவேண்டியது. இது சமீன்தார்கள் கடமை என்று இவ்வடியிலிருந்து தெரிகிறது. வேறு சான்றுகள் மூலமும் இவ்வுண்மை புலப்படுகிறது. பக்கம் 82

74. கலியாணச் செய்தியை சொல்வதற்கு மரியாதையாக தட்டில் பாக்குவைத்து, விசேஷத்தை அறிவிப்பது நெல்லை மாவட்ட வழக்கம். பக்கம் 83

75. வேறுபாடல் பிரதிகள் ஸ்ரீரிவைகுண்டம் நெல்சேரை ஊமைத்துரை கொள்ளையடித்ததாகவும், அதைக் காவல் காத்த பாண்டித்தேவனைக் கொன்றதாகவும் கூறுகின்றன திருநெல்வேரிக் கொள்ளை பற்றி இந்த பாடல் தான். கூறுகிறது. கும்பினியார் நிலவரிக்காகச் சேகரித்த நெல்லை கொள்ளையடித்த நெல்லாக கட்டபொம்மு கருதினான். இதனால் இரண்டு கொள்ளைகள் இப்பாடலில் கூறப் பட்டுள்ளன. பக்கம் 84

76. ஆங்கிலேயக்கும்பினிக்காரர்களுக்கு கிஸ்தி வசூலிக்க உரிமையில்லை என்பதற்கு ஊமைத்துரை கூறும் காரணம் அவன் நிலத்தில் உழைக்கவில்லை என்பதாகும். உழைப் பவனுக்குத்தான் விளைச்சல் சொந்தம் என்பது இப்புலவரின் கருத்து. பக்கம் 85

77. சிறுவன் [வேலைகளில் உதவி செய்பவன் பா. வ]பக்கம் 86

78. மாட்டுத் தொழுவம் பக்கம் 86

79. ஆயுதம் தாங்கிய காவல்காரர்கள் பக்கம் 86

80. பீர்க்கெட்டு (Pirkette) என்னும் ஆங்கில அதிகாரியின் பெயர். பக்கம் 86

81. பொருள் விளங்கவில்லை பக்கம் 87

82. தாக்கீது, கட்டளை பக்கம் 87

83. மேற்கு பக்கம் 87

84. மாதத்திலே பக்கம் 88

85. வெள்ளை அதிகாரிகளின் பெயர்கள் சின்னப்பிரட்டன், பெரிய பிரட்டன், அட்டன், மக்காளி, லாட்டன், மக்ளியடு, லாஷ்டன். பக்கம் 89

86. வெள்ளைப் படை வீரர்களை கேலி செய்யும் பகுதிகள் பக்கம் 89

87. பாசுபதம். வாசிதம் என்ற பெயருடைய பீரங்கிகள், வில்லுக்குப் பெயரிடுவது இந்திய மரபு [உ-ம்] கோதண்டம், காண்டீபம், சாரங்கம் முதலியன. இதைப் பின்பற்றியே பீரங்கிகளுக்குப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. பக்கம் 90

88. பல்லி குழறுவது, செம்பு தவறுவது இவை Folk belief பாமர நம்பிக்கை. பக்கம் 95

89. கோட்டை பக்கம் 96

90. நெட்டுக்கு—முழுவதும் [பா. வ.] பக்கம் 96

91. இலட்சுமி. கம்பராமாயணத்தில் திரிசடை கனவோடு இதை ஒப்பிடலாம். அதன் செல்வாக்கு இக்கண்ணியில் காணப்படுகிறது. பக்கம் 96

92. இது திருவிளையாடற் புராணத்தில் வரும் கதை சோமசுந்தரக் கடவுளைக்குறிப்பது. பக்கம் 96

93. சாக்குருவி என்பது அடிக்கடி சோகமாய் கூவும் என்பது பாமர நம்பிக்கை. பக்கம் 96

94. காலன்துரை காலின்ஸ் பக்கம் 97

95. இது தமிழருக்கு அக்காலத்தில் புதுமையானது. இது Grenade இது வெடித்தால் புகை விடும். உருண்டை யாயிருக்கும்; கையால் வீசி எறியலாம். பக்கம் 98

96. குறிபார்த்து பக்கம் 98

97. பெருஞ்சப்தம், கூப்பாடு பக்கம் 98

98. இது புராண மரபு, Epic tradition—கலிங்கத்துப் பரணி, ராமாயணம், சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் பேய்களும்

எமனும் போரில் இறந்தவர்களைத் தின்னலாம் என்று எண்ணி மகிழ்ந்ததாக கூறப்படுகிறது. பக்கம் 98

99. கீழே விழுந்த வெள்ளைப் படை வீரர்கள் தண்ணீர் கேட்டார்கள். பாணி (உருது) தண்ணீர் பக்கம் 100

100. தாவி பக்கம் 100
101. முஸ்லீம் படைவீரர் பக்கம் 100
102. சமாதானம் நெல்லை பா. வ. பக்கம் 104

103. Circuit—துரை. ஒவ்வோரிடமாக செல்லும் அதிகாரி பக்கம் 105

104. தொப்பி [நெல்லை. பா. வ.] பக்கம் 105

105. மேஜர் அக்னியூ [Agnew] பக்கம் 105

106. வைபோகி என்ற சாதி மட்டக்குதிரைகள் மேல் சேணம் வைத்தார்கள். பக்கம் 106

107. ஜாக்சன், மக்ளீயடு, காலின்ஸ் இறந்தவர்கள். இவர்களில் காலின்சுக்கும், மக்ளியடுக்கும் பாஞ்சாலக்குறிச்சியில் சமாதிகள் உள்ளன. ஜாக்சன் இப்போரில் இறக்கவில்லை. பக்கம் 107

108. மாற்றான் [பா. வ] பக்கம் 111

109. காப்பியங்களில் வரும் சண்டைகளில் யார் யாரைக் கொன்றார் என்பது வரிசையாகக் கூறப்படும். ஹோமரின் டிராய் போரிலும், வால்மீகி, கம்பனது இலங்கைப் போரிலும் யார் யாரைக் கொன்றார்கள் என்னும் விவரங்கள் வரிசையாகச் சொல்லப்படும். இக்காப்பிய மரபை இப்பாடல் பின் பற்றுகிறது. பக்கம் 112

110. இது போன்ற நிகழ்ச்சி கலிங்கத்துப் பரணியில் சொல்லப் படுகிறது. பக்கம் 112

111. பிரிட்டிஷ் சேவுகர் பக்கம் 112

112. திரசு—Dress என்பதன் மருஉ பக்கம் 121

113. உரத்துப் பேசுதல், திட்டுதல் குறவர் பழக்கம் பக்கம் 123

114. உலவாது பக்கம் 124

115. கம்மங்கதிர் தோன்றும் காலத்தில் நூற்றுக் கணக்கில் பறந்து வந்து கதிர்களைக் கொத்தி தின்னும். படைக் குருவி என்று அழைப்பார்கள். பக்கம் 125

116. வேசி வீடு செல்பவன் செல்லும் வேகத்தில் பக்கம் 125

117. சக்கிலியன் [தெலுங்கு ஜாதி] பக்கம் 128

118. வைபோகி என்ற சாதிக் குதிரையின் பெயர். பக்கம் 128

119. நிம்பர்—நம்பர் எண் பக்கம் 129

120. மட்டக்குதிரை பக்கம் 129

121. 'கெட்ட குடியே கெடும்' என்னும் பழமொழி பக்கம் 129

122. ஒன்றுக்கிரண்டு பக்கம் 129

123. வசவுச்சொல் பக்கம் 130

124. வீதிச்சந்துகள் பக்கம் 130

125. ஊருணி, சிறியகுளம் பக்கம் 132

126. கறட்டு—வலிமைமிக்க [நெல்லை பா. வ.] பக்கம் 132

127. விரைவு பக்கம் 132

128. வழி நடைக்குப் பின் ஓய்வு பக்கம் 138

129: பருந்து போன்ற பறவை அதைவிடச் சிறியதாக இருக்கும். பக்கம் 138

130. கேலியாகக் கூப்பிடுவது பக்கம் 138

131. சாப்பாட்டு சோஷர், மேஜர் போருக்கு உதவதாவன் என்ற பொருளில்—சாப்பாட்டு ராமன் என்பதுபோல் பக்கம் 138

132. மேன்மையாக பக்கம் 139

133. கட்டாமி—Goddamned rascal—வசவுச் சொல் பக்கம் 139

134. டாக்குத்துரை—டாக்டர் துரை பக்கம் 141

135. நடம் புரிகின்றவர்—நடராசர் பக்கம் 142

136. ஜெயிலிலிருந்து வெளியே போகவிட்டார்கள் என்பதை நம்பமுடியாது. ஆனால் ஜெயிலுக்கு வந்து செல்லும் சக்கிலியர், வேலையாட்கள் மூலம் தொடர்பு கொண்டிருக்கலாம். பக்கம் 147

137. ஆங்கிலப் பேச்சு. நாய் குரைப்பது போலிருக்கிறது. என்றான். பக்கம் 147

138. வார்க்கரச் சிப்பாய் சட்டைமீது தோல்வார்போட்ட ஜெயில் அதிகாரி பக்கம் 147

139. சமீன்தார் உரிமை. திசைகாவல். அதாவது குறிப்பிட்ட எல்லைக்குள் வரிவசூல் செய்வதும், அமைதிகாப்பதும் நிலம் அவர்களுக்குச் சொந்தமல்ல. பக்கம் 148

140. தாவித்தாவி பக்கம் 150

141. வேறு பிரதிகளில்" ஊமைத்துரையை விடுவிக்க கம்பளத்தார் விறகு விற்பவர்போல விறகு கட்டுகளை தலைமீது கொண்டுபோய் விற்ருர்கள். அவற்றினுள் ஆயுதங்களை வைத்திருந்து இரவில் ஜெயில் வாசலுக்குச் சென்று காவலரைக் கொன்று உட்புகுந்து ஊமைத்துரையை விடுவித்தார்கள் என்பதாகக் கதை கூறப்படுகிறது. பக்கம் 151

142. வஞ்சனை, பில்லி, சூனியம், நோய் அனைத்தும் தீர்க்க மணி, மந்திர, ஒளடதங்கள் கொடுப்போமென்று இன்றும் நாட்டு வைத்தியர்கள் கூறுகிருர்கள். வைத்தியம், ஜோசியம், பில்லி, சூனியம், மந்திரவாதம் ஆகியவற்றைத் தொழிலாக கொண்ட ஜாதியா இருக்கிருர்கள். அவர்களில் பெரும்பாலோர் வேடதாரிகள். பக்கம் 152

143, 144. முரடர்கள், வலிமை யுடையவர்கள் பக்கம் 154

145. ஆயுதங்கள் பக்கம் 155

146. முன்னர் நான் வெளியிட்ட பகுதியில் விறகுகாரரர்போல வேஷம் கொண்ட கம்பளத்தார் காவல்காரனைக் கொன்று உள்ளே நுழைந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. இச்செயல் பொருந்தாது அரசியல் கைதிகளைப் பார்க்க யாரையும் விட்டிருக்கமாட்டார்களென்பது, அக்கால ஆங்கில ராணுவ வீரர்களின் நாட்குறிப்புகளிலிருந்து தெரிகிறது. பக்கம் 156

147. Jailor—சிறையதிகாரி பக்கம் 158

148. எதுகை தவிரப் பொருள் ஏதுமில்லை என்றே தோன்றுகிறது. பக்கம் 158

149. மிரண்டாற்போல் பக்கம் 158

150. சண்டை (நெல்லை பா. வ) பக்கம் 158

ன்னர் நான் வெளியிட்ட பிரதியில் இப்படி நடந்த ...வோ. கொள்ளையிட்டதாகவோ சொல்லப்படவில்லை. ...தலை யடைந்ததும் வெள்ளையர் படைவரு முன் இரவிலேயே ஓடி ஒட்டப்பிடாரம் போய்ச் சேர்ந்தார்கள் என்றிருக்கிறது. அதுவே பொருத்தமாயிருக்கிறது. தப்பியோட முயல்பவர்கள் தாமதிக்கமாட்டார்கள் வீண் சண்டையிழுக்க மாட்டார்கள். பக்கம் 158

152. அக்காலத்தில் தூத்துக்குடியில் வாணிபம் செய்தவர்கள் டச்சுக்காரர்கள், பிரெஞ்சுக்காரரர்கள் அல்லர். இது பிழை. பக்கம் 159

153. அடைத்து, அமுக்கி பக்கம் 159

154. கோட்டை கட்டிய விதம். இரட்டை மண்சுவர்க்கிடையே வரகும், வைக்கோலும், பஞ்சும் வைத்து அமுக்கி மிதித்தார்களாம். பக்கம் 159

155. விடுதலையானதிலிருந்து எட்டுநாளைக்குள் கோட்டைச் சுவரைகட்டி முடித்தார்கள். உள்ளே கட்டிடங்கள் கட்டியது உயர்வு நவிற்சியாம். எட்டு நாளுக்குள் வெள்ளையர் படை இங்கு வந்து விட்டது. பக்கம் 160

156. எள்ளல் பேச்சு பக்கம் 160

157. போட்டார் (Bourd) போர்டார் பக்கம் 161

158. கடிதங்களுக்கு எண் போடுதல் Ref. No. நம்பர் பக்கம் 161

159. படகுகள் பக்கம் 163

160. கட்டி வைத்து அடிக்கும் மரம் பக்கம் 163

161. மதுரையில் கவர்னர் இருந்ததில்லை. சென்னையில்தான் தட்சிணபூமி முழுவதற்கும் கவர்னர் இருந்தார். பக்கம் 163

162. பட்டாளத்தாருக்கு ஜெபம் செய்விக்கும் வெள்ளைப் பாதிரிமார் பக்கம் 164

163. நடையைக் கேலி செய்கிறார். லகமார், லகமார் சப்தம் (Left, right) பக்கம் 164

164. வெள்ளையர் கண்ணின் நிறத்தைக் கேலி செய்கிறார் பக்கம் 165

165 வெள்ளையர் விதவிதமான போர் கருவிகள் வைத்திருந்தார்கள் ஊமையனிடம் பழையக்கால கருவிகளே இருந்தன. [ஈட்டி, வல்லயம், குலிசம், நேரிசம், வாள், சுருள்வாள். வேல், அம்பு போன்றவை] பக்கம் 166

166. மசலி—(உருது) Camp பக்கம் 166

167. தள்ளாக்குளம் பக்கம் 166

168. தல்லாகுளம் சீனக்-கண்ணாடிடெலிஸ் கோப்பு பக்கம் 167

169. கொம்பந்தான் அழித்துவிடலாம் பக்கம் 167

170. கமாண்டன்ட் Cammandant கான்சாகிபுக்கு இப்பட்டம் உண்டு [கான்சாகிபுகம்மந்தான்] பக்கம் 167

171 பீரங்கியின் பெயர் பக்கம் 168

172. குண்டுக்கு பெயர்—இது புலவரே கற்பனை செய்து கொண்டது தான் பக்கம் 168

173. இதற்கு முன் இலக்கியங்களில் வருணிக்கப்பட்ட போர்களில் இது வேருனது. ஏனெனில் புதிய ஆயுதங்களை ஒரு சாராரும், பழைய ஆயுதங்களை மற்றெரு சாராரும் பயன்படுத்தினர். போரின் தன்மையே புதுமையானது. இப்புதுமையை வியப்போடு புலவர் வருணிக்கிருர்.

பக்கம் 169

174. இரவும் [நெல்லை பா. வ] பக்கம் 170

175. தீவாதை தீபாதை தீயால் வரும் துன்பம் பக்கம் 170

176. குமியல், அதிக எண் பக்கம் 170

177. பாட்டும் என்பதற்கு எதுகையாக ஆடலை மாற்றிவிட்டார்கள். (பா. வ) ஆட்டமும் பாட்டமும் என்பதும் வழக்கே. பக்கம் 170

178. ராட்டு (இது வசவுச்சொல்) சுழலும் இராட்டைப்போல வேலையின்றிச் சுற்றுபவன். பக்கம் 170

179. சேளகண்டி, சிவன்கோவிலில் அடிக்கும் ஒரு ஒலிக்கும் கருவி பக்கம் 171

180. வங்கு—வங்கு உடல் மேல் படரும் ஒரு படை—வியாதி

பக்கம் 171

181. துகன [வானவெளி] பக்கம் 171

182. இரண்டும் தோல் இசைக்கருவிகள் பக்கம் 171

183. ஆடாசு—துரையின் ஆர்டர்ஸ்—துரையின் கட்டளை (Orders) பக்கம் 182

184. வெள்ளைக்கொடி வீசுதல்—சண்டை நிறுத்தத்திற்கு—

அடையாளம் பக்கம் 182

185. ஆடர்லி—சேவகன் பக்கம் 182

186. வைரிக்கு நாரை எதிரியா—பழமொழி (Rhetorical Question) பக்கம் 182

187. மொக்களிப்பான் என்றொரு பறவை. (முக்குளிப்பான்) இதுநீரில் சிறிதுநேரம் மூழ்கியிருக்கும். இது பூச்சியல்ல

188. ஒரு பறவை—விரைவாகப் பாயும். பழமொழி பக்கம் 183

வலுசாரைக் கெதிரி மொக்களியா ? பக்கம் 183

189. சீல்வைத்த காகிதம் பக்கம் 183

190. வலம், இடமாக அணிவகுத்து. பக்கம் 183

191. சட்டமாய்—தீர்க்கமாய் பக்கம் 183

192. மேஜர் அக்னியூவின் கடிதத்தின் செய்தி பக்கம் 183

193. மாத்தான்—மாற்ருன் பக்கம் 185

194. கொழிப்பு கெடுதல் பக்கம் 185

195. தீன், தீன் என்று முழங்கிக் கொண்டு போர் செய்வோர் முஸ்லீம்கள், வெள்ளைகாரர் படையில் பட்டாணியர் இருந்தார்கள். அவர்கள் இப்படிக் கூவிக்கொண்டு போர் செய்தார்கள். பக்கம் 185

196.197. உருவகங்கள்—அவ்வளவு மண்கூடக்கிளம்பவில்லையாம். பக்கம் 186

198. நிர்ணம்—நிர்ணயம் [திட்டமிட்டபடி நடக்கவில்லை] பக்கம் 187

199. Grenade கையால் எறியும் குண்டு பக்கம் 187

200. கொக்குக்கூட்டத்தில் ராசாளி பாய்ந்ததுபோல். [உவமை ,பழமொழியும் கூட] பக்கம் 187

201. சோடுதாரி—சோல்ஜர் [ஆங்கிலம்—மருஉ] ஜோடுதரித்தவன் என்றும் பொருள் கொள்ளலாம். பக்கம் 188

202. விழுத்தாட்டு—விழத்தட்டு. பக்கம் 188

203. பகடைகள் என்னும் சக்கிலியர். இருபுறமும் கூலிப்படை வீரர்கள் கைப்போர் புரிந்தனர். அவர்கள் ஏழ்மையில் உழன்றவர்கள். பக்கம் 189

204. சண்டை நடக்கும் போது இவ்வாறு தலைகளைச் சேகரித்து ஊரில் கொண்டு காட்டுதல் வீரத்திற்கடையாளம் என்று கருதப்பட்டது. சாதிக்கலவரங்களிலும் இப்படிச் சிலர் செய்திருப்பதாக செவி வழிச் செய்திகளின் மூலம் தெரிகிறது. பக்கம் 190

205. கைச்சாத்து—சரக்குக்குரிய லிஸ்ட்டியலும் மாற்றுச் சீட்டும்—வெள்ளையர் தேங்காய்கள் பொதிமாடுகளின் மீது, ஏற்றி வருகிறதாக எண்ணிக்கொண்டார்கள். பக்கம் 192

206. வெள்ளையரின் அச்சத்தைக் கேலி செய்கிருர். பக்கம் 192

207. முப்புரமெரித்த காலம் புராணகாலம். சமணர் காலம் வரலாற்றுக்காலம். சமணத்துவேஷமுடைய இந்துக்கள் சமணர் போராட்ட காலமாகிய 7ம் நூற்ருண்டில் இக்கதையைப் புனைந்திருக்கவேண்டும். பக்கம் 193

208. சூழ்தல் [பா. வ] பக்கம். 194

209. பற்றி பக்கம் 194

210. கனன்று பக்கம் 194

211. "ஒருகை பார்ப்போம்" [பா. வ.] ஒரு முறை முயலுவோம் பக்கம் 195

212. முதன் முறையாகப் பெண்கள் சண்டையில் இறங்கினார்கள். பக்கம் 195

213. ஊமைத்துரை மனைவி அக்னியூவிடம் அடைக்கலம் அடைந்ததாக வேறெந்தப் பிரதியும் சொல்லவில்லை. இது நம்பத்தகாததாகும். பக்கம் 196

214. இவன் போரில் சாகவில்லை. 20 வருஷங்களுக்குப் பின் ஷாங்ஹாய் கவர்னராயிருந்த வெல்ஷிடம் தாய்நாட்டுக்குத் திருப்பியனுப்ப வேண்டிக்கொண்டான். இப்பிரதியில் உள்ள செய்தி தவறு. பக்கம் 197

215. இவ்விதம் ஊமைத்துரை பிடிபடவில்லை. இது ஜம்புலிங்கம் பிடிபட்டவிதம். அதற்குப் பின் இதுபோன்ற சம்பவங்கள் கதைப்பாடலில் சேர்த்துக்கொள்ளப்பட்டன. உண்மையில் இவன் திருப்பத்தூரில் பிடிபட்டு தூக்கிலிடப் பட்டான். அங்கு அருகிலுள்ள மலையில் போரிடும் போது வெள்ளையரிடம் அகப்பட்டான் [Welsh எழுதிய குறிப்புக்கள்.] பக்கம் 198

216. அக்னியூவை தூக்கிலிட்டார்கள் என்ற செய்தி உண்மையல்ல, ஊமைத்துரையைத் தூக்கிலிட்டவன் வெல்ஷ்துரை. பாகம் 201

217. பிரிட்டிஷார் நியாயத்தைப் புகழ்ந்தது, இக்கதைப் பாடல் அவர்களுக்கு விரோதமானதல்ல என்று காட்டிக் கொள்ளவே. ஏனெனில் பிரிட்டிஷ் எதிர்ப்புக் கதை என்று தோன்றுமலிருக்க இரண்டொரு அடிகளில் அப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது. பக்கம் 201